# வெண்மையின் புதிய நிறம்
# உஜாலா




**உஜாலா**

உஜாலாவின் துரித செயல்திறன் தண்ணீரில் உடனடியாக கரைகிறது மற்றும் துணிகளின் மீது ஆழமாக செயல்பட்டு பளபளக்கும் வெண்மையை சீராக தருகிறது. துணிகளை மீண்டும் துவைக்கும் போது உடனடியாக அழுக்குடன் வெளியே தள்ளப்பட்டு விடப்படுகிறது. உஜாலாவை திரும்ப உபயோகிக்கும் போது புதுப்பித்த வெளிச்சம் பரவுகிறது. ஓரல்-டாக்ஸிஸிடி, சரும அரிப்பு ஆகிய டெஸ்டுகளில் தீங்கற்றது மற்றும் சருமத்திற்கு ஹானியற்றது என சர்ட்டிபிகேட் பெற்ற விஞ்ஞான ரீதியான தயாரிப்பு ஆகும் உஜாலா.

எல்லாவற்றிற்கும் மேல், ஜோதி லேபாரட்டரீஸின் தயாரிப்பு அல்லவா உஜாலா!

**உஜாலா**

கேட்டு வாங்கும் போது உஜாலாவைப் போல் தோற்றமளிக்கும் மற்றொன்றுமல்ல தருகிறார்கள் என்பதை உறுதிக் கொள்ளுங்கள்

A Product of  JYOTHY LABORATORIES, Mumbai.



• சென்னைக் குற்றாலம்

# கிஷ்கிந்தாவுக்குப் பூட்டு!

**விரைவிலேயே கிஷ்கிந்தாவை மூட நேரிடலாம் என்று வருத்தப்படுகிறார் அப்பச்சன்.**

மே மாதம் முதல் தேதி கிஷ்கிந்தாவின் வரலாற்றில் ஒரு மைல் கல். ஆம்! அன்றுதான், கிஷ்கிந்தாவில் இந்தியாவின் முதல் செயற்கை நீர் வீழ்ச்சியினை தமிழக கவர்னர் பாத்திமா பீவி துவக்கி வைத்தார். ஐந்து மாடிக் கட்டட உயரத்துக்கு (63 அடி உயரம்) உருவாக்கப்பட்டுள்ள இந்தச் செயற்கை நீர்வீழ்ச்சிக்கு, 'சென்னைக் குற்றாலம்' என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது. ஆண்களும், பெண்களும் குளிப்பதற்கும், உடைகள் மாற்றிக் கொள்ளவும் தனி இடங்கள். தங்கள் பொருள்களை பாதுகாப்பாக வைக்க லாக்கர்கள் என்று எல்லா வசதிகளும் கொண்ட சென்னைக் குற்றாலம் உருவாக ஆன செலவு சுமார் ஒன்னரைக் கோடி ரூபாய். ஒரு நிமிடத்துக்கு மூன்று டாங்கர் லாரி கொள்ளளவுக்குச் சமமான தண்ணீர்

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com



• அப்பச்சன்

இந்த செயற்கை அருவியிலிருந்து கொட்டு கிறது.

சென்னைக் குற்றாலத் துவக்க விழா முடிந்தபின், சாப்பிட்டபடியே அப்பச்சன் நம்மிடம் பேசினார்: "கிஷ்கிந்தாவில் மொத்தம் இருபத்தைந்து கோடி ரூபாய் முதலீடு செய்யப்பட்டுள்ளது. இதில் சுமார் பத்து சதவீத முதலீடு, டிட்கோவினுடை யது. இதுபோன்ற பொழுதுபோக்குப் பூங்காக்களில், பலவிதமான உபகரணங் களையும் இறக்குமதி செய்வார்கள். ஆனால், கிஷ்கிந்தாவில், முழுக்க முழுக்க இந்தியாவிலேயே அத்தகைய உபகரணங் களை வடிவமைத்து, உருவாக்கி, நிறுவியுள் ளோம். முதலீடு அதிகமென்றாலும், இத் தகைய பொழுதுபோக்குப் பூங்காக்களை ஆரம்பித்து பல வருடங்களுக்குப் பிறகே லாபம் எதிர்பார்க்க முடியும்.

"இது ஒருபுறம் என்றால், எங்களுக்கு அடிப்படை வசதிகள் கூட பெரும் பிரச் னையாக உள்ளன. தாம்பரத்திலிருந்து, கிஷ்கிந்தா நாலு கிலோ மீட்டர். இந்த நாலு கிலோ மீட்டர் தூரத்துக்கு நல்ல ரோடு வசதி இல்லை. 91-ம் வருடம், இங்கே நூற்றி இருபது ஏக்கர் நிலம் வாங்கி, ஆரம்ப கட்டப் பணிகள் தொடங்கியது முதலே, ரோடு வசதி செய்து தரும்படி, அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டிருக் கிறோம். இதற்காக தாம்பரம் முனிசிபாலி டிக்கு நாங்கள் பத்து லட்சம் ரூபாயும் கொடுத்திருக்கிறோம். ரோடு போட்டுக் கொடுத்தால், அதை ஏழு வருடங்கள் வரை எங்கள் செலவில் பராமரித்துக் கொள்ளுகிறோம் என்று சொல்லுகிறோம். ஆனால், இதுவரை எங்கள் கோரிக்கை முழுமையாக நிறைவேற்றப்படவில்லை. இன்று கவர்னர் வருகையையொட்டி, திடீரென்று சிறிது தூரத்துக்குப் புது ரோடு போடப்பட்டுள்ளது. அந்த மட்டும் தாம்பரம் முனிசிபாலிடிக்கு நன்றி.

"அடுத்தது மின்சாரம். எங்களுக்கு தொழிற்சாலைகளைப் போல, உயர் அழுத்த மின்சாரம் வேண்டும். எங்களு டைய தேவைக்கேற்ப மின்சார சப்ளை கிடைப்பதில் தடங்கல் உள்ளது. இதனால் சுமார் இருபத்தைந்து லட்சத்துக்கு மேல் செலவழித்து, ஜெனரேட்டர்கள் நிறுவ வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆரம்ப ஆண்டுகளில், அரசாங்கம் மின்சாரத்துக்கு அளித்த சில சலுகைகள் மூலம் சேமித்த பணம் கூட, ஜெனரேட்டர்கள் இயங்கத் தேவையான டீசலுக்குச் செலவழிந்து போனது. டீசல் செலவு மட்டும் மாதத் துக்கு மூன்று லட்சம்!

"சில மாதங்களாக, மின் சப்ளை சீராக உள்ளது. ஆனால் மறுபடி கோடை ஆரம்பமாகி விட்டது. பள்ளிக்கூட விடுமுறை காரணமாக பார்வையாளர்கள் எண்ணிக்கை அதிகரித்து விட்டது. இந்த நேரம் பார்த்து மின் சப்ளை தாறுமாறாகி விடும். மறுபடி ஜெனரேட்டர்தான்.

"இவை போதாது என்று, சென்ற பட் ஜெட்டில், தமிழக அரசு, பொழுது போக்குப் பூங்காக்களின் மொத்த கலெக்ஷனில் இருபது சதவீத வரி விதித்துள்ளது. அதன்படி ஆண்டுக்குச் சுமார் ஒரு கோடி வரி செலுத்தியாக வேண்டும். கிஷ்கிந்தாவில் நானூறு ஊழியர்கள் நிரந்தரமாகப் பணிபுரி கிறார்கள். இவர்களுக்கெல்லாம் சம்பளம், சீருடை என்று செலவு.

"இப்படி, நெருக்கடிகள் அதிகரித்துக் கொண்டே போனால், ஆயிரக்கணக்கான பேர் வந்து, கண்டு மகிழும் கிஷ்கிந்தா கதவுகளை இழுத்து மூடி, பூட்டுப் போட்டு விட்டு, சாவியை அரசாங்கத்திடமே கொடுத்து விட வேண்டியதுதான்!"

அப்பச்சனின் முகத்தில் கோபம் இல்லை; வருத்தம்தான் மேலிடுகிறது.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

# எக்ஸ்ட்ராஸ்!

ஒரு நாள் கிரிக்கெட் போட்டிகளில் நாம் டெண்டுல்கரை மட்டுமே நம்பியிருக்கிறோம் என்ற கருத்து பரவலாக இருந்து வருகிறது. அவர் களமிறங்கி, தமது அசகாய அதிரடி ஆட்டத்தால் பலமுறை நம் அணியை வெற்றிக்குத் திருப்பியிருக்கிறார். ராகுல் டிராவிட், சௌரவ் கங்குலி, ஜடேஜா, அஸார் போன்ற சிறந்த பேட்ஸ்மேன்கள் இருந்தாலும், சச்சின் ஸ்கோர் எடுக்காவிட்டால் இவர்களும் துவண்டு விடுகிறார்கள் என்பதையே அனுபவம் உணர்த்துகிறது.

- சுனில் காவஸ்கர், ரவி சாஸ்திரி, தாம்ஸன், ஜியோப்ரி பாய்காட், இயன் சாப்பல், பில் லாவ்ரி போன்ற சிறந்த கமெண்டேட்டர்கள் டீ.வியில் தோன்றி விளையாட்டை நேரடி வர்ணனை செய்ய உள்ளார்கள். விளையாட்டு போரடிக்கும் சமயம், நகைச்சுவை மிளிர விளையாட்டை வர்ணிக்கும் திறன் பெற்றவர்கள் இவர்கள்.

- நம் இந்திய வீரர்கள் சிலரின் செல்லப் பெயர்கள்:

ராகுல் டிராவிட் - ஜாமி
அனில் கும்ளே - ஜம்போ
சௌரவ் கங்குலி - தாதா
ஸ்ரீநாத் - பாபு
வெங்கடேஷ்
பிரசாத் - வெங்கி
ஜடேஜா - ஜட்டு
அஸார் - அஸ்ஸுபாய்

- மற்ற வீரர்கள் டிரெஸ்ஸிங் ரூமில் ஜாலியாக இருந்தாலும், டெண்டுல்கர் பேசாமல் அமைதியாய் சீரியஸ் முகத்துடன் விளையாடக் காத்திருப்பாராம்.

தொகுப்பு: **பாலசுப்ரமணியன்**
அட்டை வண்ணப்படம்: **யோகா**

● தேர்தல் நடக்க இன்னமும் நீண்ட காலம் இருக்கும் நிலையில் இப்போது பின்னப்பட்டிருக்கும் கூட்டணிகள் கூட பல மாற்றங்களுக்கு உள்ளாகலாம் என்பது அரசியல் பிரமுகர்களின் கணிப்பு. குறிப்பாக 'பா.ம.க., தனது இப்போதைய நிலையில் உறுதியாக இருக்குமா' என்று படபடப்புடன் கேட்கிறார்கள் கழகப் பிரமுகர்கள். கலைஞரைச் சந்திப்பதற்கு இரண்டு நாட்கள் முன்பு வரை கூட "தீரனை நமது கட்சியிலிருந்து பிரித்து தனிக்கட்சி நடத்த எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தவர் கலைஞர்; அதை மறக்க முடியுமா?" என்று நெருங்கியவர்களிடம் சொல்லிக் கொண்டிருந்தாராம் டாக்டர். 'யார் அதிக இடம் கொடுக்கிறார்களோ, அவர்களுடனேயே கூட்டு' என்று பலமுறை சொல்லியிருக்கிறார் டாக்டர். 'காங்கிரஸ், அ.தி.மு.கவுடன் இருந்தாலும், அ.தி.மு.க.வுடனான எங்கள் தோழமை தொடரும்' என்றும் சொல்லியிருக்கிறார். "பா.ம.கவுடன் கூட்டணி அமைப்பதில் மற்றொரு சங்கடம் என்னவென்றால் அவர்கள் வெற்றி பெற்றுள்ள பல தொகுதிகள் தவிர அவர்கள் கூடுதலாகக் கேட்கும் வட மாவட்டத் தொகுதிகளில் எங்களுக்கும் பலமான செல்வாக்கு உண்டு. எனவே தொகுதிப் பங்கீடுகளின் போதும் பிரச்னை வரலாம்" என்கிறார் கழக முன்னணிப் பிரமுகர் ஒருவர்.

இந்த நிலையில் "விடுதலைப் புலிகளின் மேல் பா.ம.க. பாசமாக உள்ளதால் அந்தக் கட்சியை நமது அணியில் வைத்துக் கொள்வது நல்லதல்ல' என்று காங்கிரஸ் தலைமை அம்மாவிடம் சொல்லிவிட்டதால் தான் பா.ம.கவை வளைத்துப் போட ஜெ. ஆர்வம் காட்டவில்லை" என்று அ.தி.மு.க. பிரமுகர்கள் சொல்கிறார்கள். எனினும் "த.மா.கா. வற்புறுத்தலின் காரணமாக காங்கிரஸ், அ.தி.மு.கவை கைவிட்டால், பா.ம.கவுடன் கூட்டணி வைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் எங்களுக்கு உண்டாகும்" என்கிறார்கள் அவர்கள்.

● பா.ஜ.கவுடன் தி.மு.க. கூட்டணி அமைக்கப் போவது தமிழகம் முழுவதும் உள்ள இரு கட்சித் தோழர்களுக்கும் மகிழ்ச்சி அளிக்கக் கூடிய விஷயமாக இருந்தாலும் கோயம்புத்தூரைப் பொறுத்தமட்டில் நிலைமையே தலைகீழ். அங்கு தி.மு.க. புள்ளிகளான ராமநாதனுக்கும் சி.டி. தண்டபாணிக்கும் பா.ஜ.க. தொண்டர்களுடன்



மூன்றாம் பொருத்தம். இந்த நிலையில் சமீபத்தில் நடந்த நிர்வாகக் குழு கூட்டத்தில் ராமநாதன், பா.ஜ.கவுடன் கூட்டணி அமைப்பது குறித்து மாறுபட்ட குரல் கொடுக்கவே, முன்னணித் தலைவர்கள் "பேசியது போதும்; முடிச்சுக்கப்பா" என்று அவரது பேச்சை கட் பண்ணி விட்டார்களாம்.

● தி.மு.க. அணியில் பா.ஜ.கவும் ம.தி.மு.கவும் இருக்கும் நிலையில் சென்னையைப் பொறுத்தமட்டில் தங்களுக்கு உள்ள சங்கடங்களை அந்தக் கட்சியினருக்குச் சொல்லி விட்டாராம் கலைஞர். கடந்த பாராளுமன்றத் தேர்தலில் சென்னையில் உள்ள மூன்று தொகுதிகளிலும் வெற்றிக் கொடி நாட்டியது தி.மு.க. தென்சென்னையில் பா.ஜ.கவும் வட சென்னையில் ம.தி.மு.கவும் எதிரணியில் போட்டியிட்டன. இந்த நிலையில் வரும் தேர்தலில் தொகுதிப் பங்கீட்டில் பிரச்னை வருமோ என்ற சந்தேகம் பலருக்கு இருக்கிறது. வட சென்னையில் ம.தி.மு.க. சார்பில் போட்டியிட அதன் செய்தித் தொடர்பாளர் ராதாகிருஷ்ணன் மிகவும்

## காதில் விழுந்தவை:

ஆர்வமாக இருக்கிறார். மாற்று முகாமில் தற்போது இருந்தாலும், தமது சுறுசுறுப்பான செயல்பாடுகளால் கலைஞரைக் கவர்ந்தவர் இவர். எனவே இவருக்காக தொகுதியை தி.மு.க. விட்டுக் கொடுக்கலாம் என்றும் பேச்சு அடிபடுகிறது. தென்சென்னைக்குப் பதிலாக செங்கல்பட்டு தொகுதியை எடுத்துக் கொள்ளுமாறு பா.ஜ.கவினர் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறார்கள். "எங்களுக்கும் ஒரு இடம்... அதுவும் செங்கல்பட்டு தொகுதி வேண்டும்' என்கிற ஆர்.எம்.வீயின் எம்.ஜி.ஆர் கழக வேண்டுகோள் இந்த முறையும் புறக்கணிக்கப்படுமா என்பது விரைவில் தெரிந்து விடும்.

● வலுவான ஒரு மாநிலக் கட்சியுடன் தேர்தல் கூட்டணி இல்லையென்றால் இந்தமுறை நான் தேர்தலில் நிற்பதற்கு யோசிக்க வேண்டியிருக்கும்'' என்று நெருக்கமானவர்களிடம் சொல்லி வருகிறாராம் ப. சிதம்பரம்.

# சிதம்பரம் தேர்தலில் போட்டியிடுவாரா?

அ.தி.மு.கவோடு ஒட்டோ, உறவோ இல்லையென்ற நிலையில், தி.மு.கவோடு கூட்டணி அமைக்க வேண்டுமென்ற தமது விருப்பத்தைத்தான் இப்படி வெளியிடுகிறார் ப.சி.'' என்கிறார்கள் த.மா.கா. பிரமுகர்கள்.



● அ.தி.மு.கவில் தற்போது எம்.பி.யாக இருப்பவர்களில் பலருக்கு வரும் தேர்தலில் சீட் கிடைக்காது என்று சொல்கிறார்கள். விஷயம் என்ன தெரியுமா? கடந்த பதின்மூன்று மாதங்களாகத் தமது எம்.பிக்கள் என்னென்ன செய்தார்கள் என்பதைத் தனியார் டிடெக்டிவ் மூலம் துப்பறிந்து வைத்திருக்கிறார் ஜெ. அதில் ஆறு எம்.பிக்கள் வாழப்பாடிக்கு மிக நெருக்கம். காஸ் கனெக்ஷன், பெட்ரோல் பங்க் என்று வாழப்பாடி மூலம் மிகுந்த பயனடைந்திருக்கிறார்களாம். நம்பிக்கை வாக்கெடுப்பின் போது இவர்களையும் நம்பியிருந்ததாம் பி.ஜே.பி. ஆனால் கடைசி நேரத்தில் அம்மா இவர்களைத் தனித்தனியாக அழைத்துக் கவனித்ததில் பயந்து போய் விட்டார்களாம்!

**— சஞ்சயன், ரோஹிணி**

படங்கள்: **ராஜ்குமார், சௌந்தர்ராஜன்**

லைசன்ஸ் இல்லாத, சட்டத்திற்குப் புறம்பாக மது பான வகைகள் விற்கும் நள்ளிரவு விடுதி. மதுவளிக்க ஓர் இளம் மாடல். ஜாஸ் இசையின் பிளிறல். இரவு மணி இரண்டு. மேலும் மது கிடைக்காத கோபத்திலும், தங்களுடன் ஒரு 'டிரைவிற்கு' அந்த மாடல் வர மறுத்ததாலும் துப்பாக்கி விசையை அழுத்தும் இரு இளைஞர்கள்.



• ஜெஸ்ஸிகா லால்

டெல்லி ஸோஷலைட் பெண்மணி பினா ரமானியின் 'பாரில்' மது வழங்கும் பணியை ஒவ்வொரு வியாழக்கிழமையும் பகுதி நேரப் பணியாகச்செய்து வந்தவர் ஜெஸ்ஸிகா லால். அவர் கொலையில் மீண்டும் நிருபிக்கப் பட்டிருக்கும் விஷயம்: டெல்லியின் அல்லது இந்தியாவின் 'மேற்' குலக் கொழுந்து களின் குற்ற வெறி.

ஜெஸ்ஸிகா கொலை வழக்கில் சரணடைந் திருக்கும் சித்தார்த் வஸிஷ்ட் என்ற மனு ஷர்மா, முன்னாள் அமைச்சர் (நரசிம்ம ராவ் மந்திரி சபையில்) வினோத் ஷர்மாவின் மகன். பஞ்சாப் மாநிலத்தின் 'பாரம்பரியமான' காங் கிரஸ் குடும்பம் என்று பெயரெடுத்த குலத் தோன்றல். முன்னாள் ஜனாதிபதி ஷங்கர் தயாள் ஷர்மாவின் சம்பந்தி குடும்பம்.

அவனுடைய கூட்டாளிகள் அமன் தீப் சிங்கில் என்ற டோனி (முன்னாள் பஞ் சாப் முதலமைச்சர் பியாந்த் சிங்கின் பேரன்) மற்றும் உத்தரப் பிரதேச பி.ஜே.பி. அமைச்சர் ஒருவரின் மகன் (போலீஸ் அடையாளம் சொல்ல மறுக்கிறது).

குற்றம் நடத்தபின் இவர்கள் ஓடி ஒளிந்து கொண்டதாகச் சொல்லப்படுவது இந்த பி.ஜே.பி. (உ.பி.) அமைச்சரின் டெல்லி வீடு. இது கவுதம புத்தர் நகரில் இருக்கிறது.

'வெள்ளைக் காலர்' குலத்தினரின் தொடர் குற்றங்கள் போலீஸைத் தடுமாற வைத்திருக் கின்றன. ஏனெனில் அவர்களை உடனடியாகக் கைது செய்து 'விசாரிக்க வேண்டிய விதத்தில்' விசாரிக்க இயலவில்லை. உதாரணமாக பினா ரமானியைப் போன்ற ஒருவர் எப்படி லை சன்ஸே இல்லாமல் மதுபான விடுதியை நடத்திக் கொண்டிருக்கிறார் என்பதைக் கூட இன்னும் போலீஸி னால் விசாரிக்க முடியவில்லை.

இதில் ஒன்றும் பெரிய ஆச்சரிய மில்லை. ஏனெனில் இந்தச் சட்டவிரோத மதுபான விடுதியில் சம்ப வத்தன்று 'உற்சாகத்தில்' திளைத்தவர்கள் ரோஹித் பல் போன்ற புகழ் பெற்ற டிஸைனர்கள், போலீஸ் இணை கமிஷனர் தத்வால், ஹாலிவுட் நட்சத்திரம் ஸ்டீவன் ஸீகல், முன்னாள் அமைச்சர் கமல் நாத்தின் மகன் நகுல் நாத், பினா ரமானி, அவர் கணவர் ஜார்ஜ் மலியட், மகள் மாலினி மற்றும் பல போலீஸ் உயர் அதிகாரிகள், பிற அதிகார வர்க்கத்தினர்.

விசாரணையில் இறங்கிய துப்பறியும் துறை அதிகாரிகளில் ஒருவர், இவர்கள் அனைவரை யுமே சட்ட விரோத மது விடுதியை நடத்திய தற்காக, அங்கு மதுவருந்தியதற்காகக் கைது செய்ய முடியும் என்றார்.

"ஆனால், ஏன் கைது செய்யவில்லை...?"

அவர் அசட்டுச் சிரிப்புடன் சொன்ன பதில்: "உங்க ளுக்கே தெரி யுமே..."

# கொலை நகராகிவிட்ட

இன்று வரை பினா ரமானி யின் மகளிடம் போலீஸால் விசாரணை கூட நடத்த இயலவில்லை. பினா ரமானி சந்திர சுவாமியின் பல கிரிமினல் வழக்குகளில் சிக்கி யிருப்பவர்.

ஏற்கெனவே, எப்படி இவரது நியூயார்க் வங்கிக் கணக்கில் அமெரிக்க டாலர்கள், சந்திர சுவாமியால் லண்டன் வங்கி ஒன்றிலிருந்து டெபாஸிட் செய்யப்பட்டிருக்கிறதென்று நீதி மன்றத்தில் ஆவணங்களைத் தாக்குதல் செய் திருக்கிறது போலீஸ்.

டெல்லி ஹவுஸ்காஸ் கிராமத்தை 'மாடல் கிராமமாகச்' செய்கிறேன் என்ற பிரச்னையி லும் மாட்டிக் கொண்டவர் இவர். இங்கு வரும் அயல்நாட்டுச் சுற்றுலாப் பயணிகளுக்கு "இது தான் ஒரு மாடல் இந்திய கிராமம்" என்று காண்பித்து விட்டு, அங்கு இத்தாலியன், மெக்

ஸிகள் மற்றும் பிற ஐரோப்பிய உணவுவகை விடுதிகளையும் நடத்திக் கொண்டிருப்பவர்.

ஏஷியன் ஏஜ் பத்திரிகையின் செக்ஸ் காலம்னிஸ்ட். ஆண், பெண் நண்பர்கள் பிரச்னையா, பிற 'பால்' பிரச்னைகளா பினா ரமானியைக் கேட்கவும் என்று ஒவ்வொரு ஞாயிறும் இந்தச் 'சமூக சேவையையும்' செய்து வருபவர்.

இப்போது கொலைக்களமாகி விட்ட இவரது 'புளியந் தோப்பு' விடுதி "ஒரு காலத்தில்" (once upon a time) என்ற பெயரிலேயே பதிவு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் tamarind court என்ற பெயரில் நடக்கிறது. இதற்குப் பதிவுச் சான்றிதழே இல்லை. இங்கு நடத்தப்படும் மது 'பாருக்கு' லைசன்ஸ் இல்லை.

நூறு ரூபாய்க்குக் கூப்பன் வாங்கிக் கொண்டு குடிக்கலாம். அது காலியாகக் காலியாக நூறு நூறு ரூபாயாகக் கூப்பன் வாங்கிக் கொண்டே போகலாம்.

இது குதுப்மினார் பகுதியில் தொல் பொருள் துறையால் பாதுகாக்கப்படும் இடத்தில் குதுப் காலனோட் என்ற வளாகத்தில் இருக்கிறது. அங்கு இவர் விடுதி கட்டியதே ஆர்க்கியாலஜி விதியை மீறியது என்ற பிரச்னை எழுந்தது. இவர் நடன சிரோமணி ப்ரொதிமா பேடியுடன் இணைந்து இந்த இடத்தில் 'புளியந் தோப்பை' நிர்மாணித்தபோது! ஆனால் எல்லாவற்றையும் 'சமாளிக்கும் விதத்தில் சமாளிக்கத் தெரிந்தவர்' பினா ரமானி.

# தலைநகர்!

குடித்துவிட்டு, நள்ளிரவில் காரோட்டி பலரை நசுக்கிக் கொன்ற, அமெரிக்காவில் வளர்க்கப்பட்ட நந்தா என்ற பெரிய இடத்துப் பையனின் வழக்கு இன்னும் தலைநகர் வாசிகளின் மனத்தை விட்டு அகலவில்லை. (நந்தா இப்போது திஹார் ஜெயிலில்.)

'ஜீ' டீ.வியை சேர்ந்த மற்றொரு பெரிய இடத்துப் பிள்ளை தன் நண்பியைக் கொன்ற கதை இன்னும் எந்த முடிவுக்கும் வரவில்லை. வரிசையாகக் கொலை செய்யப்பட்ட பத்திரிகைக்காரர்களான, இந்தியன் எக்ஸ்பிரஸ் ஷிவானி, அவுட் லுக் இர்ஃபான், யு.என்.ஐ. அனில் ரத்தன்– இவர்களின் வழக்குகளில் எந்த முன்னேற்றமும் இல்லை.

இந்நிலையில் இப்படிப் பல பெரிய இடத்துக் குலக் கொழுந்துகள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகத் தலைநகரில் வளர்ந்து வருகின்றனர்.

ஆக டெல்லி நடுத்தர வர்க்கத்தினர், ஒவ்வொரு நாளையும் பீதியுடன் கழிக்கின்றனர். அதுவும் பத்திரிகைக்காரர்கள் வீடு வரத் தாமதமானாலோ அவர்கள் குடும்பத்தினர் பதறுகின்றனர். எட்டு மணிக்கு மேல் ஒவ்வொரு பத்து நிமிடத்திற்கொருமுறை தொலை பேசினால்தான் வீட்டில் நிம்மதி என்ற நிலைமை.

— டெல்லி வெங்கட்

# இணைந்த சானல்கள்!



ஸ்டார் ஸ்போர்ட்ஸ், ஈ.எஸ்.பி.என். ஆகிய தொலைக்காட்சி சானல்கள்தான் வரும் உலகக் கோப்பைப் பந்தயங்களை ஒளிபரப்பும் உரிமையைப் பெற்றிருக்கின்றன. ஆளுக்குப் பாதி என்று போட்டிகளைப் பிரித்துக் கொண்டு ஒளிபரப்பப் போகிறார்கள்.

இரண்டு அமைப்புகளும்தான் பரம எதிரிகளாயிற்றே. எனவே கடும் சண்டையிட்டு பிறகு வேறுவழியின்றி இப்படி ஒரு முடிவுக்கு அவர்கள் வரவேண்டியிருந்தது என்று நினைத்தால் அது தவறு. இப்போது அவர்கள் எதிரிகளல்ல. ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். ஆமாம்; இணைந்து விட்டன.

இப்படி எதிரிகள் கைகோத்துக் கொள்ளும் மாயம், மேலும் மேலும் செயற்கைக்கோள் சானல்களைப் பொருத்தவரையில் தொடரும் என்று எதிர்பார்க்கலாம்.

'ஜீ' டீ.வியின் பாதிப் பங்குகள் இப்போது ஸ்டார் டீ.வியின் வசம். இரண்டும் இணைவது பற்றி அடிக்கடி பேச்சுவார்த்தைகள் நடைபெற்று வருகின்றன. ஜீ. டீ.வி. இதற்கு அதிகத் தொகை கேட்பதால்தான் இணைப்பு தள்ளிப் போய்க் கொண்டிருக்கிறது.

தவிர ஜீ'யும், 'ஸ்டாரு'ம் ஏ.டி.எல். (ஏஷியா டெலிவிஷன் லிமிடெட்) தொலைக்காட்சி நிறுவனத்தில் பங்குதாரர்களாக இருக்கின்றன.

இப்படி இவையெல்லாம் ஒன்றுக்குள் ஒன்றாவதன் பின்னணி என்ன? "விளம்பரங்களின் மூலம் கிடைக்கிற வருமானம் இதைவிடவும் அதிகமாக வழியில்லை என்கிற நிலை இப்போது. எனவே பணம் கொடுத்து, குறிப்பிட்ட சானல்களைப் பார்க்க வேண்டும் என்கிற நிலையை ரசிகர்களிடையே தோற்றுவிக்க வேண்டியது கட்டாயமாகிவிட்டது. இதற்கு இணைப்புகள் உதவுகின்றன. இப்போது ஸ்டாரும், ஜீயும் இணைந்து விட்டால், மக்கள் ஒரு சானலுக்கான தொகையைக் கொடுத்தால் போதுமே. எங்களுக்குள்ளும் போட்டியோ, அதனால் நஷ்டமோ ஏற்படுவது தவிர்க்கப்படும் இல்லையா?" என்கிறார் ஜீ. டீ.வியின் முக்கியச் செயல் அதிகாரி ஒருவர்.

— குல்ஜா

முதல் உலகக் கோப்பையின் இறுதிச் சுற்று. மேற்கிந்திய அணிக்கு எதிராக ஆடிய ஆஸ்திரேலியா அணிதான் ஜெயிக்கும் என்றே பலரும் கருதினார்கள். ஆனால் பரபரப்பான க்ளைமாக்ஸ் ஒன்று காத்திருந்தது.

ஆஸ்திரேலிய அணியைச் சேர்ந்த தாம்ஸன் தனக்கு வீசப்பட்ட பந்தை அடிக்க, ஃப்ரெடரிக்ஸ் அதை காட்ச் பிடித்தார். அது தான் கடைசி விக்கெட் என்பதால் மேற்கிந்திய அணியின் ரசிகர்கள் உற்சாகக் கூக்குரலோடு மைதானத்துக்குள் நுழையத் தொடங்கி விட்டனர். ஆனால் அந்தப் பந்து ஒரு 'நோ-பால்' (எனவே ரன் அவுட்டைத் தவிர வேறு விதங்களில் பேட்ஸ்மேன் அவுட் ஆனால் அது கணக்கில் எடுத்துக் கொள்ளப்படாது). இரு

# ஞாபகமிருக்கா..?

பேட்ஸ்மேன்களும் ஒரு ரன்னைப் பெறுவதற்காக ஓடிக் கொண்டிருக்க, தாம்ஸனை ரன் அவுட் ஆக்குவதற்காக ஸ்டம்புகளை நோக்கி வீசினார் ஃப்ரெடரிக்ஸ். ஆனால் உள்ளே ஓடி வந்து கொண்டிருந்த ரசிகர்களுக்கிடையே சென்ற அந்தப் பந்து மாயமாக மறைந்துவிட்டது! இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு இரு பேட்ஸ்மேன்களும் தொடர்ந்து ஓடி அதிகபட்ச ரன்களைக் குவிக்க முடிவு செய்தனர். ஆனால் அம்பயர் அவர்களைத் தடுத்து நிறுத்தி, ஆஸ்திரேலிய அணிக்கு இரண்டு ரன்களை அளித்தார்! ஆக்கிரமிப்பாளர்களையெல்லாம் நீக்கிய பிறகு போட்டி தொடர்ந்தது. அதற்குப் பிறகு கொஞ்ச நேரத்திலேயே பதினேழு ரன் வித்தியாசத்தில் மேற்கிந்திய அணி வெற்றி பெற்று விட்டது. என்றாலும் அந்தக் கடைசி நிமிடப் பரபரப்பை எளிதில் மறந்துவிட முடியாது.

● உலகக் கோப்பை – 1983. பதினைந்து ஓவர்கள் முடியும்போது ஐந்து விக்கெட்டுகளை இழந்து வெறும் பதினேழே ரன்களைப் பெற்றிருந்தது நமது அணி (காவஸ்கர் – 0, ஸ்ரீகாந்த் – 0, மொஹீந்தர் அமர்நாத் – 5, சந்தீப் பாட்டில் – 1, யஷ்பால் சர்மா – 9). இப்படியொரு சிறுமையான நிலையில் களத்தில் புகுந்தார் அணியின் காப்டனான கபில்தேவ். அவரும் பின்னியுமாக அறுபது ரன்கள் எடுத்தனர். இன்னிங்ஸ் முடியும் போது '175–நாட் அவுட்' என்ற சிகரத்தை எட்டியிருந்தார் கபில் தேவ். ஒரு நாள் போட்டியைப் பொறுத்த வரை இது ஒரு



பெரும் சாதனை. எட்டு விக்கெட் இழப்புக்கு 266 என்று இந்தியா எடுத்துவிட, 235 ரன்களே எடுக்க முடிந்த ஜிம்பாப்வே அணி தோல்வியடைந்தது.

இந்தப் பெரும் கண்டத்தை கபில் தேவின் உதவியால் தாண்ட முடிந்ததால் தான் இந்திய அணியால் இறுதிச் சுற்றை அடைந்து கோப்பையையும் கைப்பற்ற முடிந்தது.

முதல் உலகக் கோப்பை பந்தயத் தொடரில் இங்கிலாந்தும் இந்தியாவும் போட்டியிட்ட முதல் பந்தயத்தை நினைத்தாலே விஷயமறிந்தவர்கள் பற்களை நறநறப்பது நிச்சயம். காரணம் ஒரு நாள் பந்தயத்தின் கவர்ச்சிகள் அத்தனையையும் மழுங்கடித்தது இந்திய அணி - குறிப்பாக கனில் காவஸ்கர்.

முதலில் பாட் செய்த இங்கிலாந்து 334 ரன்களைக் குவித்தது. பிறகு நம் அணி மட்டையோடு களம் புகுந்தது. துவக்க ஆட்டக்காரரான காவஸ்கர் ரன்னும் எடுக்காமல், அவுட்டும் ஆகாமல் ரொம்பவும் வெறுப்பேற்றினார். 174 பந்துகளில் அவர் எடுத்த ரன்கள் வெறும் 34 தான். ஆட்ட இறுதியில் மூன்று விக்கெட் இழப்புக்கு 132 ரன்கள் என்ற கேவலமான ஸ்கோர் இந்திய அணிக்கு. நாடு திரும்பிய பிறகு இந்திய கிரிக்கெட் அமைப்பின் தலைவர் இது குறித்து காவஸ்கரிடமிருந்து விளக்கம் கோரினார். ஆனாலும் மற்றபடி சிறந்த ஆட்டக்காரராக இருந்த காரணத்தாலோ என்னவோ, அவர் மீது எந்தவித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

**— ஜி.எஸ்.எஸ்.**




இருபது மி.மீ. விட்டம். ஒருபுறம் கிரிக்கெட் பந்து. அதில் உலகக் கோப்பை என்று பொறிக்கப்பட்டுள்ளது. மறுபுறத்தில் பக்கவாட்டு சச்சின் முகம். ஆஸ்திரேலியாவில், பெர்த் நகர நாணய சாலையில் உருவாக்கப்பட்டு, இந்தியாவில் விற்பனைக்கு வந்திருக்கிறது. ஆஸ்திரேலிய கணக்குப்படி நாணயத்தின் எடை கால் அவுன்ஸ். அதாவது 7.777கிராம். இருபத்து நாலு கேரட் சொக்கத் தங்கம்.

கார்ப்பரேஷன் வங்கிதான் பெருமைக்குரிய இந்த ஸ்பெஷல் நாணயத்தை வெளியிட்டுள்ளது. இந்திய ஜனத் தொகையில் பத்து லட்சம் தீவிர கிரிக்கெட் ரசிகர்கள். அவர்களில் ஐந்தில் ஒருவர் வாங்கினால்கூட இரண்டு லட்சம் தங்க நாணயங்கள் விற்றுவிடும் என்ற கணக்கில் தயாரிக்கப்பட்டதாக அந்த வங்கி வட்டாரம் தெரிவிக்கிறது.

இந்த நாணயம், ஒரு பிளாஸ்டிக் பெட்டகத்தில் வைத்துத் தரப்படுகிறது. உள்ளே சச்சினின் உருவப்படம், அவரது ஆட்டோகிராப், இந்தியா, இந்த உலகக் கோப்பைப் போட்டியில் எங்கே, எப்போது எந்த நாட்டுடன் ஆடப் போகிறது என்கிற

# கிராசுதான் சச்சினடா!

விவரம், சூப்பர் சிக்ஸ் மற்றும் இறுதிப் போட்டி இடம் மற்றும் தேதிகள் இடம் பெற்றுள்ளன.

"இந்த நாணயம் பற்றிய தகவல் வெளியானவுடன், ஏகப்பட்ட பேர் எங்களிடம் விசாரிக்கத் தொடங்கிவிட்டார்கள். தினமும் இரண்டு அல்லது மூன்று நாணயங்கள் விற்பனையாகின்றன. வாங்குகிறவர்கள், 'இந்தியா ஜெயிக்க வேண்டும்!' என்று தவறாமல் சொல்லுவது சந்தோஷமாக இருக்கிறது" என்கிறார் இதுவரை நூறு நாணயங்களுக்கும் மேல் விற்பனை செய்துள்ள ஜி.ஆர். தங்க மாளிகையின் ராஜேந்திரன்.

*சச்சின் தங்க நாணயத்தின் விலை ரூபாய் நாலாயிரத்து ஐந்நூறு.*

இதுவரை எந்த கிரிக்கெட் வீரருக்கும் இப்படித் தங்க நாணயம் வெளியிடப்பட்டதில்லை!

***— மானஸா***



# குழந்தை பாக்கியம் இன்மை, வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறு, மலட்டுத்தன்மை போன்றவைகளுக்கு தெய்வீக மூலிகை மருத்துவம்



குழந்தை பாக்கியம் இன்மை, வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறு, மலட்டுத்தன்மை போன்றவைகளுக்கு முக்கிய காரணம் நாம் உண்ணும் உணவுகளில் அதிகமாக ரசாயனப் பொருட்கள் கலந்திருப்பதாலும், பலவித நோய்களுக்காக அவ்வப்போது வீரியமிக்க ரசாயன மாத்திரைகளை உட்கொள்வதாலும், அடிக்கடி மாமிச உணவுகள் உண்பதாலும், அதிகமான கவலை கொள்ளுதல், பலருடன் உடலுறவு கொள்ளுதல் போன்றவைகளால் கர்ப்பப்பையில் புண் ஏற்படுகின்றது. இதனால் கர்ப்பப்பையில் உள்ள சுரப்பிகள் நன்றாக இயங்காது. மேலும் அதன் சுரப்பு நீரும் திறன் மிக்கதாக இருக்காது. தவிர கர்ப்பப்பையும் நன்றாக சுருங்கி விரியும் தன்மையினை இழந்துவிட்டால் முறையான மாதவிடாய் இருக்காது. வெள்ளைப்படுதலும் தோன்றும். வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறுகள், மலட்டுத்தன்மை உள்ள தாய்க்கு கருத்தரிக்கும் வாய்ப்பு மிகவும் கடினம்.

## கருத்தரிக்காமைக்கு காரணம்

பெண்களுக்கு உற்பத்தியாகும் கரு முட்டைகள் சரியான முதிர்ச்சியும், வளர்ச்சியும் இல்லாதிருத்தல், கருப்பையின் குழாய்கள் அடைப்பு அல்லது சுருங்கி இருத்தல், முட்டையகத்தில் (ஓவரி) குறைபாடு, கருப்பை வளர்ச்சியின்மை, கர்ப்பப்பை புண் ஆண்களின் விந்தணு எண்ணிக்கையில் குறைவாகவும், தகுந்த உயிரோட்டத்துடன் இல்லாமல் இருத்தல், ஆண்மைக் குறைவு சரியானநேரம் அறிந்து உடலுறவு கொள்ளாமை, அடிக்கடி உடலுறவு கொள்ளுவதால் முதிர்ச்சி இல்லாத விந்தணு வெளியாகி உயிர்ப்பிக்கும் சக்தி இல்லாதிருத்தல் ஆகியன கருத்தரிக்காமைக்கு காரணம் ஆகும்.

## தெய்வீக மூலிகை வைத்தியம்

விநாயகருக்குரிய அருகம்புல், சக்திக்குரிய வேப்பிலை, சிவனுக்குரிய வில்வம், பிரம்மாவுக்குரிய அத்தி, கங்கைக்குரிய மாவிலை மற்றும் அற்புத மூலிகை மருத்துவ குணம் கொண்ட அரசிலை, ஆலயிலை, நாவல் இலை, முருங்கையிலை, ஓரிலை தாமரை, கீழாநெல்லி ஆகியவைகளைப் பறித்து வந்து வெய்யிலில் உலர்த்தி பொடி செய்து சலித்து பின் சம அளவில் ஒன்றாக கலந்து ஒரு பாட்டிலில் கலந்து வைத்துக்கொள்ளவும். பின் இதில்இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒருடம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு முன் தினமும் காலை இரவு ஆகிய இரண்டு வேளையும் உட்கொள்ளவும் இதனை சுமார் ஆறுமாதம் வரை பின்பற்றவும். இளம் தம்பதிகளுக்கு மிக விரைவிலும், மற்றவர்களுக்கு சற்றுத் தாமதமாகவும் கண்டிப்பாக பலன் தெரியும். இத்தகைய மூலிகைகளினால் வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறு, மலட்டுத்தன்மை நீங்கி கர்ப்பப்பை நன்கு வளர்ச்சி அடையும் விந்தணு, சினை முட்டைகள் நன்கு முதிர்ச்சி அடைந்ததாகவும், வளர்ந்ததாகவும் இருக்கும். மேலும் எலும்புகள், நரம்புகள் பலம் பெற்று ஆண்மைக் குறைவும் மறையும். வேப்பிலை, வில்வம், கீழாநெல்லி போன்றன எதிர்ப்பு சக்தியையும், ரத்தம் சுத்தம் அடையவும், அத்தியிலை, நாவல், முருங்கை, ஓரிலை தாமரை போன்றவை நரம்பு மண்டலம் நன்கு இயங்கவும், அரசன், ஆலயிலை, மாவிலை போன்றவை கருத்தரிக்க உதவும். உயிர் அணுக்கள், கருமுட்டை ஆகியவற்றின் எண்ணிக்கை அளவு, வீரியம் ஆகியவற்றை அதிகப்படுத்தவும் உதவும். இத்தகைய மிகமையின் காரணமாகவே திருமண சடங்குகளின்போது இதான் குச்சிகளை ஓமம் வளர்ப்பார்கள். அப்போது அதன் புகைகளை தம்பதிகள் இருவரும் சுவாசிப்பதன் மூலம் மேற்கூறிய பலனை அடைவார்கள் என்பது உண்மை.

## உணவு முறைகள்

தம்பதிகள் இருவரும் தினம் ஏதேனும் ஒருவேளை வேகவைக்காத பச்சையாக உட்கொள்ளும் பழங்கள், காய்கள், பழஜீஸ்கள், சாலட்கள் போன்றவற்றையே உணவாக உட்கொள்ள வேண்டும். கேரட், வெண்டை, வெள்ளரிக்காய், பீர்க்காய், வாழை, கொய்யா, ஆப்பிள், பேரிட்சை, திராட்சை, மாதுளை, தர்பூசணி, பாதாம், முந்திரி, இளநீர், கரும்புச்சாறு, தேங்காய், வெங்காயம், கறிவேப்பிலை, கொத்தமல்லி போன்றவற்றில் இருந்து ஏதேனும் இரண்டு (அ) மூன்று வகைகளை தேவையான அளவு உட்கொள்ளலாம். பின்னர் மற்ற இரண்டு நேரம் சாதாரண சமைத்த சைவ உணவுகளை உட்கொள்ள வேண்டும். இதில் கேழ்வரகு, கோதுமை, கம்பு, மக்காச்சோளம் போன்ற தானியங்களையும் அடிக்கடி சேர்த்துக் கொள்வது நல்லது. நிலக்கடலை, மூக்குக்கடலை, கொள்ளு போன்றவற்றையும் மாலை வேளைகளில் சுண்டல் செய்து உட்கொள்ளலாம். கிடைத்தால் கொள்ளாட்டுப்பால் சிறிது தண்ணீர் கலந்தும் தம்பதிகள் குடிக்கலாம்.

தவிர்க்க வேண்டியது - புகைத்தல், மதுவகைகள், மாமிச உணவுகள், சர்க்கரை கலந்த இனிப்புகள், ரசாயனம் கலந்த உணவுகள், சர்க்கரை கலந்த இனிப்புகள், ரசாயனம் கலந்த உணவுகள், குளிர்பானங்கள், எண்ணில் செய்த பலகாரம், அகத்திக்கீரை, பாகற்காய், பப்பாளி முதலியவை தவிர்க்கவும். இவர்கள் வாரம் ஒருநாள் பகல் ஒருவேளை (சமைத்த) உணவை தவிர்க்கவும். இரவு உணவை 7 மணிக்குள் முடித்தல் வேண்டும். உடற்பயிற்சிகள் - நடத்தல், குனிந்து நிமிர்தல், உட்கார்ந்து எழுதல், நின்ற இடத்தில் ஓடுதல், குதித்தல் கயிறாட்டம், கைகால் விரல்களை நீட்டி மடக்குதல் மூச்சுப்பயிற்சி தியானம் போன்றவற்றை தினம் 20 நிமிடம் காலை மாலை செய்தல் நல்லது.




*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

தலைமை முகவரி : **Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்**

P.B. No: 30, No: 3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8 ✆ 6424285, 6427638


**குறிப்பு:** சென்னை, வேலூர், காஞ்சீபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர் ஒசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோயில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம்-விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**தகவல்:** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 25 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

**7 & 8-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589**

**18 & 19-ந் தேதி-புது டெல்லி: காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, ✆: 5717126, 5723651**




# ஒரு வித்தியாசமான விழா!

"**க**ல்கி' அவர்களின் உண்மையான பெயர் என்ன?"

"கிருஷ்ணமூர்த்தி."

"நவசக்திக்குப் பிறகு கல்கி அவர்கள் பணிபுரிந்த பத்திரிகையின் பெயர்?"

"ஆனந்த விகடன்."

– கேள்விகளுக்குப் பதில் சொன்னவர்கள் இலக்கிய ஆர்வலர்களோ அல்லது வாசகர்களோ அல்ல! மூன்று வயதிலிருந்து பதினைந்து வயதுக்குட்பட்ட சிறுவர் சிறுமிகள். அதுவும் ஆதரவற்றவர்கள்.

"சமுதாயத்தின் அடிமட்டத்திலுள்ள சிதறுண்ட குடும்பங்களிலிருந்து வரும் ஆதரவற்ற சிறுவர் சிறுமிகளுக்காக எங்கள் இல்லமும் பள்ளியும் இயங்குகின்றன. இத்தகைய சூழ்நிலைக்கும் தலைமுறைக்கும் கூட கல்கி அவர்கள் பொருத்தமானவர் என்று நாங்கள் கருதுகிறோம். நாங்கள் நடத்த இருக்கின்ற கல்கி நூற்றாண்டு விழா இலக்கிய அன்பர்கள், விமர்சகர்கள் நடத்தும் விழாக்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. ஆதரவற்ற மாணவர் இல்லம் ஒன்றில் கல்கி நூற்றாண்டு விழா கொண்டாடுவது இதுவே முதல் முறையாக இருக்கும்" – இவ்வாறு நமக்குக் கடிதம் எழுதியிருந்தார். 'சேவாலயா' என்ற தன்னார்வத் தொண்டு நிறுவனத்தின் ஒருங்கிணைப்பாளரான டி.எஸ். வெங்கடரமணி.

**அ**ன்றைய விழாவின் சிறப்புப் பேச்சாளர் வழக்குரைஞர் த. ராமலிங்கம். 'கல்கி அவர்கள் பிறந்த சூழல், படிப்பு, விடுதலைப் போராட்டத்தில் அவர் பங்கு, பத்திரிகைப் பணி, சாதனைகளைப் படைத்த அவரது சரித்திரக் கதைகள்' என்று வரிசையாக, எளிமையாக, கதை சொல்லும் பாணியில் கல்கியின் வரலாற்றை காப்ஸ்யூல் ஆக்கி சிறுவர் சிறுமியரின் கவனத்தை ஈர்த்தார். தாம் சொன்ன விஷயங்கள் அவர்கள் மூளையில் பதிந்திருக்கிறதா என்பதைக் கண்டறிவதற்காக இடையிடையில் கேள்விகளும் கேட்டார்.

**செ**ன்னையிலிருந்து 40 கி.மீ. தூரத்தில் பெரியபாளையம் செல்லும் வழியில் அருமையான கிராமச் சூழலில் இயங்குகிறது சேவாலயா. விவேகானந்தர், காந்தி, பாரதியார் ஆகியோரின் எழுத்து, பேச்சு, விளைவித்த உத்வேகம் காரணமாக, முரளிதரன், தங்கராஜ் என்ற இரு இளைஞர்களால் தோற்றுவிக்கப்பட்ட அமைப்பு இது. மிகச் சிறிய அளவில் 1988ல் துவக்கப்பட்ட இந்த அமைப்பு இன்று நூற்றுக்கும் மேற்பட்ட ஆதரவற்ற சிறுவர், சிறுமிகளுக்கு ஆலமரமாய் இருக்கிறது. ஜாதி, மதம், இனம், மொழி ஆகிய 'சட்டைகளை' கழற்றிவிட்டுத்தான் சேவாலயாவிற்குள் நுழைய வேண்டும். கேட்டிலேயே எழுதி வைத்திருக்கிறார்கள். நடிகை ரேவதி, சபாநாயகர் பழனிவேல் ராஜன் ஆகியோர் இதன் வளர்ச்சியில் ஆர்வமாக இருக்கிறார்கள்.

சுவாமி விவேகானந்தர் பெயரில் அமைந்துள்ள நூலகத்தில் மூவாயிரத்துக்கும் மேற்பட்ட புத்தகங்கள். "ஐந்து பாகங்களைக் கொண்ட 'பொன்னியின் செல்வன்' புத்தகத்தை ஒருங்கே பார்ப்பது மிகவும் அரிது. சிறுவர் சிறுமியர் கையில் சுழன்று கொண்டே இருக்கும்" என்கிறார் அறங்காவலரான தங்கராஜ்.

'சேவாலயா' பள்ளியில் வாரம் ஒரு பீரியட் கதை சொல்வதற்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது. வரலாற்றைத் தெரிவிக்கும் நல்ல பண்புகளை வளர்க்கும் கதைகள் அந்த பீரியடில் வாசிக்கப்படும். இப்போது வாசிக்கப்பட்டுக் கொண்டிருக்கும் நாவல்: பொன்னியின் செல்வன்.

— ஸ்ரீநிவாசன்

உள்ளாட்சித் தேர்தல்கள் நடத்தி முடிக்கப்பட்டதன் மூலம், ஜனநாயகத்தின் கதவுகள் முழுமையாகத் திறக்கப்பட்டு விட்டதாக முதல்வர் கலைஞர் நெஞ்சு நிமிர்த்திப் பூரித்தார். நாமும் சந்தோஷப் பட்டோம். ஆனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்ன அத்தனை ஏமாளிகளா? நமது சந்தோஷத்தில் மண்ணை அள்ளிப்போட ஆரம்பித்து விட்டார்கள். நிமிர்ந்து நிற்கும் முதல்வர் கலைஞரையும் எப்படியாவது தலை குனியச் செய்துவிட வேண்டும் என்று, அவரது கட்சிக்காரர்களே கண்ணும் கருத்துமாகச் செயல்பட ஆரம்பித்து விட்டார்கள்!

ஆம்! மிகவும் அத்தியாவசியமான ஒரு குடிநீர் இணைப்புக்கு முறைப்படி மனுச் செய்தால் உடனே கிடைப்பதில்லை. அதையே கவுன்சிலர் மூலம் அந்தந்தப் பகுதியின் ஆளுங்கட்சி வட்டம், நகரச் செயலாளர்கள் மூலம் 'பணத்தோடு' அணுகினால் உடனடியாகக் குடிநீர் இணைப்பு! நகராட்சியில் ஏதாவது அனுமதி வாங்கிச் செய்ய வேண்டிய காரியங்களுக்குக் கூட நாம் நகராட்சியில் அனுமதி வாங்க வேண்டாம். கவுன்சிலர்களிடமும் லோக்கல் கட்சிக்காரர்களிடமும் அனுமதி வாங்கினாலே போதும்!

நகராட்சிப் பகுதிகளில் சாலைகள் போடும் காண்ட்ராக்டர்கள், அரைகுறையாகச் சாலைகளைப் போடும்போது, யாராவது அதைத் தட்டிக் கேட்டால் மிரட்டுகிறார்கள். பல உள்ளாட்சிகளிலும் இப்படித்தான் நடந்து கொண்டிருப்பதாகப் பலரும் சொல்கிறார்கள். உதாரணத்துக்கு, சென்னை புறநகர்ப் பகுதியான ஆலந்தூர் நகராட்சி. அதன் தலைவர் ஆர்.எஸ். பாரதி (தி.மு.க.)யைச் சந்தித்து கண்ணெதிரில் பார்த்ததையும் நம்மிடம் வந்து மக்கள் முறையிட்டதையும் கேள்விகளாகக் கேட்டோம்.

• நங்கநல்லூர் 13-வது தெரு : 1.20 லட்சம் செலவில் போடப்பட்ட தார்ரோடின் லட்சணம் இதுதான்!



# கலைஞருக்கு ஷாக் தரும் கட்சிக்காரர்கள்!

> "நீங்கள் கவுன்சிலர்; உங்கள் மனைவி காண்ட்ராக்டர். நீங்கள் கவுன்சிலர்; உங்கள் கணவர் காண்ட்ராக்டர். நீங்கள் கவுன்சிலர்; உங்கள் மகன் காண்ட்ராக்டர்... இதனால்தான் இத்தனை தவறுகளும் நடக்கின்றன என்று கவுன்சிலர்களின் பெயர்களைக் குறிப்பிட்டே பேசினேன்..."



• ஆர். எஸ். பாரதி : நகராட்சித் தலைவர்

"ஒரு தெருவிலுள்ள மெயின் குழாயி லிருந்து அத்தெருவிலுள்ள வீடுகளுக்குக் குடிநீர் இணைப்புகள் வழங்கப்படுகின்றன. அந்தத் தெருவின் மெயின் குழாய் இன்னொரு தெருவிலுள்ள மெயின் குழாயுடன் இணைக்கப்பட்டிருக்கிறது. குடிநீர் சரியாக வராததால் இந்த மெயின் குழாய் இணைப்புகளைச் சரி செய்ய மக்கள் முறையிடுகிறார்கள். நகராட்சி நீண்ட நாட்களாக அதைக் கண்டு கொள்ளவேயில்லை. அந்தத் தெருவுக்கு கான்கிரீட் ரோடு போட வருகிற போது தான் அவசர அவசரமாக அதைச் சரி செய்கிறார்கள். அப்படியும் குடிநீர் வரவில்லை. இதற்கிடையில் ஆளுங்கட்சிக் காரர் ஒருவர் தலையிட்டு மக்களே பணம் போட்டு, மறுபடியும் கான்கிரீட்டை உடைத்துச் சரி செய்யலாம் என்று சொல்கிறார். அதன்படியே பணம் வசூலித்துச் செய்யப்படுகிறது. ("ஐயய்யோ! பணமெல்லாம் நான் வசூலிக்கவேயில்லை. வெறும் யோசனைதான் சொன்னேன்!" என்றார் அந்தக் கட்சிப் பிரமுகர் நம்மிடம்) நகராட்சி செய்ய வேண்டிய ஒரு வேலையை மக்களே தான் செய்து கொள்ள வேண்டும் என்றால் அப்புறம் நகராட்சி எதற்கு?"



• முனுசாமி தெரு: ஒரு லட்சம் செலவில் போடப்பட்ட கான்கிரீட் ஒரு வாரத்திலேயே இப்படியானது. புகார் செய்த பிறகு கடனுக்குச் சரிசெய்தனர்.



• 10-வது தெரு : கடனுக்குப் போடப்பட்ட கான்கிரீட்

"அப்படிச் செய்து கொள்வதில் தவறில்லை. 'நமக்கு நாமே' திட்டம்கூட அப்படித்தானே!"

"நகராட்சியும் மக்கள் பணத்தில்தானே செயல்படுகிறது! தெருவிலிருந்து வீடுகளுக்கு எடுத்துச் செல்லப்படும் குடிநீர் இணைப்புக்கான செலவை அவரவர் ஏற்றுக் கொள்வது சரி. இரண்டு தெருக்களின் மெயின் குழாய் இணைப்புகளுக்கான செலவை அந்தத் தெரு மக்களே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பது தான் புதுமையாக இருக்கிறது."

"உங்கள் தெருவில் குடிநீர் வரவில்லை என்று நீங்கள் எங்களிடம் புகார் சொன்னால், நாங்கள் அதைக் குடிநீர் வடிகால் வாரியத்துக்குத் தெரிவிப்போம். அவர்கள் வந்து பார்த்து, எங்கே குறை என்று கண்டுபிடித்து, அதை நிவர்த்தி செய்வதற்கு எவ்வளவு செலவாகும் என்று ஒரு எஸ்டிமேட் தருவார்கள். அப்புறம் அதை நாங்கள் நகராட்சி கவுன்சிலில் விவாதித்து அந்தத் தொகையைச் செலவு செய்யத் தீர்மானம் நிறைவேற்ற வேண்டும். பிறகு டெண்டர் விட வேண்டும். டெண்டர் முடிந்து 'வொர்க் ஆர்டர்' போட வேண்டும். இத்தனையும் நடப்பதற்குப் பல

மாதங்கள் ஆகும். உடனடியாகக் காரியம் நடக்காது. அதனால்தான் அந்தத் தெரு மக்களே செய்து கொள்ள முன் வருகிற போது, வேலை சீக்கிரம் முடியுமே என்று நாங்களும் விட்டு விடுகிறோம்."

"குடிநீர் வழங்குதல் என்பது உடனடியாகச் செய்யப்பட வேண்டிய - போர்க்கால அடிப்படையில் செய்யப்பட வேண்டிய விஷயம் என்று முதல்வர் சொல்கிறார். ஆனால் நீங்களோ எதுவானாலும் இழுத்தடிப்போம் என்கிறீர்கள்..."

"முதல்வர் சொல்வது முன்னுரிமை விஷயம். நான் சொல்வது நடைமுறைச் சிக்கல் பற்றிய யதார்த்தம்."

"அத்தியாவசியமான குடிநீருக்குக்கூட மக்கள் நகராட்சியை நம்ப முடியாதா?"

"அப்படியல்ல. நாங்கள் ஒவ்வொரு பகுதியாகச் சரிசெய்து கொண்டுதான் வருகிறோம். சிலர் மோட்டார் வைத்தும் குடிநீரை எடுக்கிறார்கள். அரசியல் செல்வாக்குள்ளவர்கள் கூட இப்படிச் செய்கிறார்கள். அதனால் மேடான பகுதிகளுக்குக் குடிநீர் சென்றடைவதில்லை."

"அதைத் தடுக்க வேண்டியது நகராட்சியின் பொறுப்புத்தானே?"

"அதையும் கண்டுபிடித்துக் கொண்டுதான் வருகிறோம். விரைவாகச் செய்து முடிக்கத் தேவையான ஆள்பலம் வேண்டாமா? அதனால் தான் தாமதமாகிறது. வரும் நவம்பருக்குள் ஆலந்தூர் நகராட்சிக்குக் கிருஷ்ணா நீர் வந்து விடும். அதன் பிறகு பிரச்னை முழுமையாகத் தீர்ந்து விடும்."

"வேம்புலியம்மன் கோயிலுக்குப் பின்புறம் நகராட்சிக்குச் சொந்தமான புறம்போக்கு இடம் ஒன்று இருக்கிறது. அங்கேயொரு மேல்நிலை நீர்த்தொட்டி கட்டினால் மேடான அப்பகுதிக்குக் குடிநீர்ப் பிரச்னை வராதே?"

"நகராட்சியில் பணம் இல்லையே!"

"குடிநீர் அல்லவா. முன்னுரிமை வழங்கலாமே!"

"கிருஷ்ணா நீர் வருகிறபோது எல்லாமே சரியாகிவிடும்."

"சரி. அது புறம்போக்கு இடமாக இருப்பதால், யாராவது அரசியல்புள்ளிகள் சொந்தம் கொண்டாடி விடுவார்களோ என்று பயமாக இருக்கிறது."

"முந்தைய அ.தி.மு.க. ஆட்சியில் முன்னாள் முனிசிபல் கமிஷனர் ஒருவருக்குப் பட்டா போட்டுக் கொடுக்கப்பட்டுவிட்ட இடம்தான் அது. இப்போது அதை ரத்து செய்யச் சொல்லி அரசுக்கு எழுதியிருக்கிறோம்."

"நங்கநல்லூர் 13-வது தெருவில் தார் போடப்பட்டிருக்கிறது. அந்தத் தெரு மக்கள் எங்களை அழைத்துச் சென்று காட்டினார்கள். போய்ப் பார்த்தால் அது தார்ச் சாலையா, செம்மண் சாலையா என்று சந்தேகம் வந்து விட்டது. அந்த அளவுக்குத் தார் போடப்பட்டிருக்கிறது."

"செம்மண் போட்டு தார் போடுகிற அந்தச் சமயம் பார்த்து மழை வந்து விட்டது. அதனால்தான் அப்படி. நானும் போய்ப் பார்த்தேன். இப்போது சரி செய்யச் சொல்லியிருக்கிறோம். செய்து கொண்டிருக்கிறார்கள்"

"தார் போட்ட மாதிரியே இல்லை. பேப்பரை விரித்துப் போட்ட திக்னஸில் தான் தார் போட்டிருக்கிறார்கள்."

"இல்லையில்லை. எல்லாம் அளவுப்படி தான் போட்டிருக்கிறார்கள். மழை வந்ததால் தான் பிரச்னை. சரி செய்யாமல் நாங்கள் அந்த கான்ட்ராக்டருக்குப் பணம் தர மாட்டோம்."

(எப்படி சரி செய்திருக்கிறார்கள் என்று மறுபடியும் போய்ப் பார்த்தோம். திருப்திகரமாக இல்லை என்பதுதான் கசப்பான உண்மை!)

"இது ஒருபுறம் இருக்கட்டும். கான்ட்ராக்ட் எடுக்கிற எல்லோருமே கவுன்சிலர்களின் மனைவி அல்லது கணவன் அல்லது மாமன் மச்சான் என்றுதானே இருக்கிறார்கள். யாருமே நிஜமான கான்ட்ராக்டர்களாகத் தெரியவில்லையே?"

"எல்லா கான்ட்ராக்டர்களும் யோக்கியமானவர்களும் இல்லை. எல்லா கவுன்சிலர்களும் யோக்கியமானவர்களும் இல்லை. இருதரப்பிலுமே திருடர்கள் இருக்கிறார்கள்."

"அதைக் கண்காணிக்க வேண்டியதும் உங்கள் பொறுப்புத்தானே?"

"முடிந்தவரை கண்காணித்துக் கொண்டு தான் இருக்கிறோம்."

"நகராட்சியைச் சேர்ந்த பல தெருக்களுக்கும் சாலைகளுக்கும் கான்கிரீட், தார் போட்டிருக்கிறீர்கள். அவற்றில் எதுவுமே திருப்திகரமாக இல்லையே?"

"நூற்றுக்கு நூறு திருப்திப்படுத்த யாராலுமே முடியாது. நாங்கள் பொறுப்பேற்ற பிறகுதான் நிறையத் தெருக்களையும் சாலைகளையும் செப்பனிட்டிருக்கிறோம்."

''நிறைய இடங்களில் தாரும் கான்கிரீட்டும் போட்டிருக்கிறீர்கள் என்பது சரி. ஆனால் தரம்? முப்பத்தைந்து நாற்பது சதம் கூட இருக்காது என்பதுதானே கேள்வி?''

''மார்க் போடுவது உங்கள் உரிமை. ஆனாலும் நீங்களே சொல்லுங்கள்... எல்லாவற்றையும் நானே பார்த்துக் கொண்டிருப்பது சாத்தியம்தானா?''

''கான்ட்ராக்டர்கள் கவுன்சிலர்களுக்கு வேண்டியவர்களாக இருப்பதால், நீங்கள் கவுன்சிலர்களிடம் சொல்லி தரத்தைக் காப்பாற்றலாமே?''

''கவுன்சிலர்கள் அனைவரும் என் கட்டுப்பாட்டிலா இருக்கிறார்கள்? தப்புப் பண்ணுகிற கவுன்சிலர்களை நான் பதவி நீக்கமா செய்து விட முடியும்? அந்த அதிகாரமெல்லாம் எனக்கு இல்லையே! நான் போடச் சொல்ல முடியும். அவ்வளவுதான். எல்லாவற்றையும் நானே பார்த்துக் கொள்வதென்றால் அப்புறம் கவுன்சிலர்கள் எதற்கு?''

''நங்கநல்லூரிலுள்ள குளம். (முன்பு 'களத்தில் கல்கி'க்காக அமைச்சர் கோ.சி. மணி வந்து பார்த்துச் சுத்தம் செய்யச் சொன்ன குளம்தான்.) தூர் எடுத்துச் சுத்தம் செய்தீர்கள் சரி. தூர் எடுக்கப்பட்ட குளம் பெரிதாவதற்குப் பதில் குறுகிப் போயிருக்கிறதே?''

''முன்பு அந்தக் குளத்தை அ.தி.மு.கவின் முன்னாள் அமைச்சர் நடேசன் பால்ராஜ் தமது மருமகன் பெயருக்கு மாற்றியிருந்தார். கலெக்டர் இறையன்புதான் அதை கான்சல் செய்தார். அந்தச் சமயத்தில்தான் நாங்கள் தூர் எடுத்தோம். ஈஸ்வரன் கோயிலுக்குச் சிறிது இடம் வேண்டும் என்றார்கள். பொதுக்காரியம் என்பதால் கொடுத்தோம். இப்போது நடேசன் பால்ராஜ் தரப்பில் உச்சநீதி மன்றத்துக்குச் சென்றிருக்கிறார்கள். சாலையோரத்திலுள்ள குளக்கரைப் பக்கம் போடப்பட்டிருக்கும் கொட்டகைகளை எடுக்கச் சொல்லி நோட்டீஸ் அனுப்பியிருக்கிறோம்.''

''தி.மு.க. பிரமுகர் ஒருவர், முன்பு பொது இடத்தை ஆக்ரமித்தது பற்றிப் பத்திரிகைகளில் செய்தி வெளியிட உடனடியாக அதை இடித்துத் தள்ளினீர்கள். இப்போது அதே நபர் அதே இடத்தில் 'ஐயப்பன் பஜனை மண்டலி' என்கிற பெயரில் ஒரு கொட்டகை போட்டிருக்கிறாரே?''

''நோட்டீஸ் கொடுத்திருக்கிறோம். எடுத்து விடுவார்கள்.''

''குளத்தைத் தூர் எடுப்பதற்காக இரண்டு லட்சம் ரூபாய்க்கு கான்ட்ராக்ட் விட்டீர்கள். அந்தக் கான்ட்ராக்டர் தூர் எடுத்த மண்ணை இரண்டு மூன்று லட்ச ரூபாய் அளவுக்கு விற்று விட்டார் என்று சொல்லப்படுகிறது. அதாவது மண், விலை மதிப்புள்ளதென்பதால் குளத்தைத் தூர் எடுக்க இன்னும் குறைந்த செலவுக்கே டெண்டர் விட்டிருக்கலாம் என்று சொல்லப்படுகிறதே?''

''அதில் முறைகேடு எதுவும் இல்லை. குளத்தைத் தூர் எடுக்க கலெக்டர் ஆபீஸிலிருந்து ஐந்து லட்ச ரூபாய் ஒதுக்கினார்கள். நாங்கள் மூன்று லட்சத்தைத் திருப்பித் தந்திருக்கிறோம். முறைகேடு என்றால் இப்படித் தந்திருப்போமா? தூர் எடுத்த கான்ட்ராக்டர் அதை விற்றுப் பணமாக்கியிருந்தால் நான் என்ன செய்ய முடியும்? இது பற்றி சந்தேகம் வந்து விசாரணை ஏதும்

## வாக்குறுதியைக் காப்பாற்றாத எம்.எல்.ஏ!

**ந**ங்கநல்லூரில் போடப்படுகிற ரோடுகள் தொடர்பாக-குறிப்பாக 13-வது தெருவுக்குப் போடப்பட்ட தார்ரோடு தொடர்பாகவும் குடிநீர்ப் பிரச்னைகள், ஆக்ரமிப்புகள் தொடர்பாகவும் தொகுதி எம்.எல்.ஏவான சண்முகம் (தி.மு.க.) என்ன சொல்கிறார்? டெலிபோன் செய்து, பிரச்னைகளை விளக்கினோம்.

''நிறையப் பேச வேண்டும். இன்னும் ஒரு மணி நேரத்தில் உங்களை வந்து சந்திக்கலாமா?''

''என்னைத் தேடி நீங்கள் வர வேண்டுமா என்ன? நானே வந்து உங்களைச் சந்திக்கிறேன். வரும்போது கமிஷனரையும் அழைத்துக் கொண்டு வருகிறேன். காஞ்சிபுரம், திருவள்ளூர் மாவட்டங்களில் முதல்வர் சமத்துவபுரம் திறக்க இருப்பதால் இன்னும் இரண்டு நாட்களுக்கு என்னை விட்டுவிடுங்கள். பிறகு போன் செய்யுங்கள். அவசியம் வருகிறேன்!''

இரண்டு நாட்கள் கழித்து டெலிபோன் செய்து செய்து செய்து செய்து டெலிபோன் பில் ஏறியதுதான் மிச்சம். எம்.எல்.ஏவைத் தொடர்பு கொள்ளவே முடியவில்லை!

• சண்முகம் : எம்.எல்.ஏ.

## ஸ்காட்லாந்திலிருந்து ஷார்ஜாவுக்கு!

● உலக கிரிக்கெட்டில் மழலை யார் தெரியுமா? ஸ்காட்லாந்து! வொர்செஸ்டரில் மே 16ஆம் தேதி ஆஸ்திரேலியாவை எதிர்த்து ஆடுகிறது. இவர்கள் பயிற்சி எடுப்பது எங்கே தெரியுமா? ஷார்ஜாவில்! ஸ்காட்லாந்து காப்டன் சல்மாண்ட். இயான் ஃபிலிப்தான் இருப்பதிலேயே வயதானவர். 40 வயது!

● பங்களாதேஷ் காப்டன் அமீன் உல் இஸ்லாம் புல்புல். உலகக் கோப்பைக்குப் புதியவரவான ஸ்காட்லாந்தை இவர்கள் தோற்கடிக்கக் கூடும்.

● கென்யா அணியின் காப்டன் ஆஸிஃப் கரீம். முன்பு மாரிஸ் ஒடும்பே காப்டனாக இருந்தபோது, ஆறாவது உலகக் கோப்பைப் பந்தயத்தில் வெஸ்ட் இண்டீஸ் அணியை 73 ரன் வித்தியாசத்தில் கென்யா தோற்கடித்திருக்கிறது! தீபக் கடாசாமா, ஹிதேஷ் மோடி, ரவீந்து ஷா எல்லாம் இந்தியப் பெயர்கள் இல்லையா? இவர்களில் கடாசாமா ஒரு டாக்டர்.

● சரியாக 22 வருடங்களுக்குப் பிறகு உலக கிரிக்கெட் ஆட்டத்தில் பங்கு கொள்ள வந்தது சௌத் ஆப்ரிக்கா. உலகக் கோப்பைப் போட்டியில் ஆட வந்தது 1992ல்தான். இதை ஜெயிக்கப் போகிற அணி என்று பலரும் பந்தயம் கட்டுகிறார்கள்!

● 83க்குப் பிறகு வோர்ல்ட் கப் இந்தியாவின் கைகளுக்குச் சிக்கவே இல்லை. 99ல் கிடைக்குமா? "நோ சான்ஸ்" என்கிறார்கள் விவரம் தெரிந்து பலர். ஆனால் பயங்கர ஊக்குவிப்பு காம்பெயின் நடக்கிறது. பாட்டும், கூத்துமாக! சச்சின் கையில் இருக்கிறது எல்லாம். காப்டன் அசார், கொஞ்சம் அஜய் ஜடேஜா பாணியில் நடந்து கொண்டால் நல்லது.

● கிரிக்கெட்டின் தாயகமான இங்கிலாந்து இதுவரை உலகக் கோப்பையைக் கைப்பற்றியதேயில்லை!

— எஸ்.வி.என்.

வைத்தால்கூட அதற்கு நான் தயாராகவே இருக்கிறேன்."

"நகராட்சிக்கு யாராவது குடிநீர் இணைப்புக் கேட்டு விண்ணப்பித்தால், நகராட்சிக்கு மட்டுமல்ல; கவுன்சிலருக்கு, வட்ட, நகரச் செயலாளர்களுக்கெல்லாம் லஞ்சம் தரவேண்டியிருப்பதாகப் பலரும் புகார் சொல்கிறார்களே? எனவே நகராட்சியில் கட்சிக்காரர்களின் தலையீடு இருப்பதாகச் சொல்லலாமா?"

"இது பற்றி நான் ஒன்றும் சொல்ல முடியாது. இது உண்மையா இல்லையா என்று துப்பறிந்து கண்டு பிடிப்பதற்கு நான் போலீஸ் அதிகாரியும் இல்லை. ஆனாலும் ஒன்று சொல்கிறேன். மனக் குமுறலோடு சொல்கிறேன்.... நேற்று நடந்த கவுன்சில் கூட்டத்தில் நீங்கள் சொன்ன அத்தனை குற்றச் சாட்டுகளையும் சொன்னேன். 'நீங்கள் கவுன்சிலர்; உங்கள் மனைவி கான்ட்ராக்டர். நீங்கள் கவுன்சிலர்; உங்கள் கணவர் கான்ட்ராக்டர். நீங்கள் கவுன்சிலர்; உங்கள் மகன் கான்ட்ராக்டர்... இதனால்தான் இத்தனை தவறுகளும் நடக்கின்றன என்று கவுன்சிலர்களின் பெயர்களைக் குறிப்பிட்டே பேசினேன். அதெல்லாம் பேப்பரில் வரவேயில்லை. ஆனால் என் மேல் யாராவது ஆதாரமில்லாத குற்றச் சாட்டுகளைச் சொன்னால் கூட அது பெரிதாகப் பிரசுரமாகிறது. என்ன செய்வது? சமுதாயமே அப்படித்தான் இருக்கிறது."

"கவுன்சிலர்களின் சொந்தக்காரர்கள் யாரும் கான்ட்ராக்ட் எடுக்கக் கூடாது என்று தடுக்க முடியாதா?"

"முடியாதே! அப்படியே தடுத்தாலும் அவர்கள் நீதிமன்றத்துக்குச் சென்று தடை வாங்கி விடுவார்கள். ஒட்டு மொத்த மாற்றம் தேவை. அப்போதுதான் எல்லாம் சரியாகும்."

"ஆக, ஓர் அதிரடி மாற்றம் வருகிறவரை மக்கள் இப்படித்தான் வாழப் பழகிக் கொள்ள வேண்டும் என்கிறீர்களா?"

"ஆமாம். வேறு வழி?"

இப் பேட்டிக்குப் பிறகு ஆலந்தூர் நகராட்சிக்குக் கிருஷ்ணா நீர் வருவதற்கும், பாதாளச் சாக்கடை அமைப்பதற்குமான அடிக்கற்களை முதல்வர் கலைஞர் நாட்டிவிட்டுச் சென்றிருக்கிறார். பாதாளச் சாக்கடை அமைக்க வேண்டுமானால் போடப்பட்ட கான்கிரீட் மற்றும் தார் சாலைகளையும் வீதிகளையும் மறுபடியும் தோண்ட வேண்டும். எனவே, புதிதாகப் போடப்படுகிற சாலைகள் நூற்றுக்கு நூறு தரமாகப் போடப்பட்டால் எப்படித் தோண்டுவது? அது கஷ்டமாயிருக்கு மல்லவா! அதனால்தான் கடனுக்குப் போடுகிறார்கள் போலிருக்கிறது!

— இளங்கோவன்









1999 மே 16
பிரமாதி வைகாசி 2
மலர் : 57
இதழ் : 42

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## ஐயோ பாவம், சோனியா!

பீஹாரில் ஒரு ஊழல் மூட்டையுடன் ஏற்கெனவே தேர்தல் உடன்படிக்கை செய்து கொண்டு விட்டார் சோனியா! தமிழக அரசியலின் போக்கைப் பார்க்கையில் காங்கிரஸ்-அ.தி.மு.க. கூட்டணி உறுதியாகும் நாள் வெகு தொலைவில் இல்லை என்றே அஞ்சத் தோன்றுகிறது. மூப்பனாரை டெல்லிக்கு அழைத்துப் பேசிய பிறகும் காங்கிரஸிடமிருந்து தெளிவான அறிவிப்பு எதுவும் வரவில்லை என்பது நமது அச்சத்தை அதிகரிக்கிறது.

தேர்தல் நடந்தே தீர வேண்டும் என்பது உறுதியானவுடனேயே தி.மு.க. செயல்பட்டிருக்கிறது. அக்கட்சி பி.ஜே.பிக்கு ஆதரவைத் தெரிவித்தது தற்காப்புக் கருதித்தான் என்றபோதிலும் அது காலந்தாழ்த்தாமல் எடுக்கப்பட்ட சாமர்த்தியமான நடவடிக்கை. அ.தி.மு.கவுடன் உறவு முறிந்து திணறிக் கொண்டிருக்கும் பி.ஜே.பி.யிடம் மறுக்க முடியாத மறுதலிக்க முடியாத உதவிக்கரத்தை நீட்டியுள்ளது தி.மு.க.! பா.ம.க, தமிழக ராஜீவ் காங்கிரஸ், ஏன் ம.தி.மு.கவைக் கூட தன் பக்கம் சரியச் செய்திருக்கிற யுக்தி இது!

கருணாநிதியின் அரசியல் அனுபவம் அவரை இவ்வாறு சுறுசுறுப்பாக இயங்க வைத்தது எனில், நேர்மாறாக சோனியாவின் அனுபவமின்மை அவரைப் பரிதாபகரமான நிலையில் கொண்டு நிறுத்தியிருக்கிறது.

'அ.தி.மு.கவுடன் கூட்டு' என்றோ 'த.மா.கா. ஆதரவை ஏற்போம்' என்றோ இதுவரை வெளிப்படையாகக் கூறாத காங்கிரஸின் இரண்டுங்கெட்டான் நிலைமையே மக்களிடையே அவநம்பிக்கையை ஏற்படுத்தும். அ.தி.மு.கவுடன் கூட்டு அறிவிக்கப்பட்டுவிட்டாலோ கேட்கவே வேண்டாம்!




பி.ஜே.பி. ஆட்சியைக் கவிழ்க்கச் சதி செய்த இரு கட்சிகளும் இணைந்து கொண்டு, நாட்டை மீண்டும் அழிவு நோக்கி அழைத்துச் செல்லப் போகின்றன என்கிற எதிர்க் கூட்டணியின் பிரசாரம் ஆரம்பித்துவிடும்.

போதாக் குறைக்கு, இந்தியக் குடியுரிமையுடன் கூட இத்தாலியக் குடியுரிமையும் உடையவர் சோனியா என்ற செய்தி அவருக்கு எதிராகச் செயல்பட்டு வரும்.

இந்தச் சூழலில் சோனியா உடனடியாகச் செய்ய வேண்டியது தமது குடியுரிமை குறித்த உண்மையை பகிரங்கப்படுத்துவதுதான். இத்தாலிய குடியுரிமை இருப்பின் அதனைத் துறந்து விட்டு இந்தியக் குடியுரிமையை மட்டுமே அவர் தக்க வைத்துக் கொள்ள வேண்டும்.

அ.தி.மு.கவுடனான தேர்தல் ஒப்பந்தம் எத்தனை அபாயகரமானது என்பதை எந்த அவசரத்திலும் இக்கட்டிலும் மறந்துவிட முடியாது. அதையும் மீறி அர்ஜுன் சிங், பவார் போன்ற தலைவர்கள் அ.தி.மு.கவுடன் கூட்டணி அமைக்க சோனியாவை வற்புறுத்தவே செய்வார்கள்.

ஆனால் அவர்களுடைய வற்புறுத்தலுக்கு அடிப்படை நாட்டு நலனோ, கட்சி நலனோ கட்சித் தலைவியின் நலனோ அல்ல... சுய நலம்தான்! வரவிருக்கும் தேர்தலில் அ.தி.மு.க-காங்கிரஸ் கூட்டணி தோல்வியுறும் வாய்ப்பே அதிகம். அத் தோல்வி சோனியாவின் தலைமைப் பதவிக்கே வேட்டு வைத்து விடக் கூடும்.

இதை உணரும் அரசியல் அனுபவம் காங்கிரஸ் தலைவருக்கு இல்லை என்றாலும், இந்த அபாயத்தைச் சுட்டிக் காட்டி எச்சரிக்கக் கூடிய த.மா.கா. தலைவரின் விச்வாசத்தை அவர் பெற்றுள்ளார்.

தவறான அறிவுரையை ஒதுக்கி, சரியான அறிவுரையை ஏற்கும் பக்குவம் சோனியாவுக்கு இல்லாது போனால், மூன்றாவது அணி ஒன்று உருவாகி வாக்குகள் பிளவுபட்டுப் போவதே மிச்சமாகும்.

வாக்குகள் பிளவுபடும்போது விரும்பத்தகாத அரசியல் சக்தியான அ.தி.மு.கதான் ஆதாயம் அடையும்.

ஆக, சோனியாவின் தவறான முடிவினால் பாதிப்பு அவருக்கும் அவர் கட்சிக்கும் மட்டும் அல்ல... தமிழ்நாட்டுக்கும் இந்தியாவுக்கும்கூட!




சோனியா சரியான முறையில் காய்களை நகர்த்தியிருந்தால் த.மா.கா. ஆதரவோடு தி.மு.க. ஆதரவையும் கூட அவர் கோரிப் பெற்றிருக்க முடியும். தமிழகத்தில் ஒரு பாதுகாப்பான தொகுதியில் அவர் போட்டியிட்டு அமோக வெற்றி பெறுவதும் சாத்தியமாகியிருக்கும். ஆனால், இப்போது அவர் தேர்தலில் பி.ஜே.பியின் கடுமையான எதிர்ப்பைச் சந்திக்கப் போகிறார்.

அனுபவ முதிர்ச்சியுள்ள தலைவர்களைக் கொண்ட பி.ஜே.பியும் சில தவறான முடிவுகளை எடுத்துள்ளது. ஒட்டு மொத்தமாக அரசாங்கச் செயலாளர்களைப் பணிமாற்றம் செய்துவிட்டு, 'எல்லாம் முறைப்படி நிகழ்த்திய மாற்றங்கள்தான்' என்று சப்பைக்கட்டு கட்டுகிறது.

பி.ஜே.பியின் விருப்பத்துக்கு எதிராக ஜூன் மாதத்தில் தேர்தல் நடத்த இயலாது என்று தேர்தல் கமிஷனரிடம் கருத்துச் சொன்னதற்காக உள்துறைச் செயலர் மாற்றப்பட்டிருப்பதாக நம்பத் தகுந்த வதந்தி!

ஒரு காபந்து அரசாகச் செயல்பட்டு வரும் பி.ஜே.பி, இது போன்ற அதிரடிகளில் ஈடுபடுவதும் அல்லாமல், அவற்றை நியாயப்படுத்தவும் முயற்சி செய்வது ஆரோக்கியமானதல்ல.

வாக்காளர்களிடையே அக்கட்சிக்கு ஆதரவாகத் தோன்றியிருக்கக் கூடிய அனுதாபத்தை இத்தகைய அடாவடி நடவடிக்கைகள் அடித்துக் கொண்டு போய்விடும்.

செப்டம்பர் வரை தேர்தல் ஒத்திப்போடப்பட்டுள்ளது நாட்டுக்கு நல்லதன்று. எனினும் தேர்தல் கமிஷன் ஒரு முடிவு எடுத்த பிறகு, அதற்கு அனைவரும் உடன்பட்டு ஒத்துழைப்பதே ஜனநாயகப் பண்பு.

அவ்வாறு காபந்து அரசும் ஒத்துழைத்து, இருக்கிற காலத்தில் கொஞ்சம் நல்ல பெயர் சம்பாதித்துக் கொண்டால் ஆதாயம் அடையலாம்.

ஏற்கெனவே ஏற்பட்டுள்ள அனுதாபத்துடன் இந்த கௌரவமான நடத்தையால் விளையும் நல்லெண்ணமும் வாக்குகளாக அறுவடையாகக் கூடும். இது நிகழ்ந்து பி.ஜே.பி. மீண்டும் ஆட்சி அமைக்குமானால், அதை ஆட்டி வைக்கும் அடிப்படைவாத சக்திகள் மீண்டும் தலையெடுக்கவே செய்யும். அவற்றுக்கு விலங்கிட்டு கட்டுப்பாட்டில் வைத்திருக்கும்படி பி.ஜே.பியை வற்புறுத்தும் பொறுப்பு மதவாதத்தை எதிர்க்கும் தி.மு.க. போன்ற கூட்டணிக் கட்சிகளிடம்தான் இருக்கிறது. ○

# ஒரு ரன்னில் தோல்வி!

**சோனியா :** ஹர்கிஷன் சிங் சுர்ஜீத்தான் அம்பயர். இன்னொரு அம்பயர் ஏ.பி. பர்தான். சரியா?

**வாஜ்பாய் :** எல்லாம் உங்க இஷ்டத்துக்கே பண்ணுங்க. அப்போ தேர்ட் அம்பயர் யாரு? கருணாநிதியைப் போடலாமா?

**சோனியா :** தேர்ட் அம்பயர் ராஷ்டிரபதி பவன்ல இருக்கார். அங்க இருந்தே மாட்சைப் பார்த்துட்டிருப்பார்.

**அசாருதீனும், ஜடேஜாவும், சச்சினும், கங்கூலியும்தான் கிரிக்கெட் ஆட வேண்டுமா என்ன! நம் அரசியல் தலைவர்கள் ஆடினால் இன்னும் சுவாரசியமாய் இருக்குமே?**

**வாஜ்பாய் :** பூவா - தலையா போட்டுப் பார்க்கணும். சோனியா வந்தாச்சா?

**அத்வானி :** சேலை கட்டிட்டு ஆடறதா, பேண்ட் போட்டுட்டு ஆடறதான்னு இன்னும் அவங்க முடிவு செய்யலையாம்.

**அர்ஜுன் சிங் :** (அவசர அவசரமாக ஓடி வந்து) சோனியா வந்துட்டே இருக்காங்க. டாஸ் போடச் சொல்லிட்டாங்க.

**அத்வானி :** ஓகே. அப்புறம் பேச்சை மாத்தக் கூடாது. சரியா?

**அர்ஜுன் :** நோ பிராப்ளம். நான்தான் சோனியாவோட அதிகாரபூர்வ ஆள்.

**வாஜ்பாய் :** எத்தனை நாளைக்கோ! ம்.... அத்வானிஜி, ஒரு ரூபா காயின் இருந்தா டாஸ் போட்டுடலாம். எடுங்க.

**அத்வானி :** (ஜிப்பா பாக்கெட்டில் துழாவி எடுத்து) இதோ போடறேன்.

**வாஜ்பாய் :** ஹையா! நான் கேட்ட மாதிரி தலைதான் விழுந்திருக்கிறது. ஸோ, நாங்க பேட் பண்ணப் போறோம். பிரமோத் மகாஜன்னும், ரங்கராஜன் குமாரமங்கலமும் தான் ஓபனிங் பேட்ஸ்மென்.

*(சோனியா அரக்கப் பரக்க வர, அவர் பின்னால் சரத் பவார், அர்ஜுன் சிங், பிரணாப் முகர்ஜி, அஜித் ஜோகி, கிரிஜா வியாஸ், மாதவராவ் சிந்தியா, கருணாகரன், விஜயபாஸ்கர ரெட்டி, கிரிதர் கோமாங், மன்மோகன் சிங், சிவசங்கர் எல்லாரும் மைதானத்தில் வருகிறார்கள்)*



**அத்வானி :** சரி பந்தை வீசுங்க.

*(முதல் பந்தை வீசுகிறார் சோனியா)*

**ரங்கராஜன் :** ஐயோ, இது நோ-பால். விளாசுங்க பிரமோத். காட்ச் பிடிச்சாலும் அவுட் இல்லே. அடிங்க பவுண்டரி.

**சோனியா :** இதுவா நோ-பால்? அம்பயர் சொல்லவே இல்லியே?

## வாஜ்பாய் Vs சோனியா :

**ரங்கராஜன்** : அவர் எப்படிச் சொல்லு வார்? அவர்தான் உங்க ஆளாச்சே?

**கர்ஜித்** : நான் ஒருத்தன் அம்பயர்னு எதுக்கு இங்க மெனக்கெட்டு வேகாத வெயில்ல நிக்கறேன்? நீங்களா சண்டை போட்டுக்கக் கூடாது. அது நோ-பால் இல்லே. கிரீசுக்கு உள்ளேதான் சோனியா வோட கால் இருந்தது. கோட்டைத் தாண்டலே.

**ரங்கராஜன்** : அக்கிரமம், அக்கிரமம்! அது நோ-பால்தான். ஒரு ரன் கொடுத்தே ஆகணும்.

**கர்ஜித்** : சோனியா போட்டா கரெக்டா தான் இருக்கும். அவங்க இதாலிலே கிரிக்கெட் ஆடினவங்க. இதாலில ஆடினாலும், இந்தியாவுல ஆடினாலும் கிரிக்கெட், கிரிக்கெட்தான்.

**பர்தான்** : சும்மா லொள்ளு பண்ணாதீங்க. ஒழுங்கா பேட்டிங் பண்ணி நாலு ரன் எடுக்கப் பாருங்க. நீங்க சிக்ஸர் அடிச்சாக் கூட பவுண்டரியாத்தான் எடுத்துக்கணும்னு லாலு வேற ஆட்ட ஆரம்பத்துலயே எங்கிட்ட சொல்லியிருக்கார்.

**ரங்கராஜன்** : ஐயோ ஆர்.எஸ்.பி. காரங்க யாரும் அம்பயராக் கிடைக்கலியா!.... தொலையுங்க. பந்தைப் போடுங்க.

(மறுபடி சோனியா பந்து வீச, மன்மோகன் சிங் விக்கெட்கீப்பராக இருந்து அந்தப் பந்தைப் பிடித்து விடுகிறார்.)

**சோனியா** : ஹவ்'ஸ் தட்?

**மகாஜன்** : பேட்ல படவே இல்லே. எதுக்காக அநாவசியமா ஹவ்'ஸ்தட்னு க்ளெயிம் பண்ணணும்?

**சோனியா** : அவரோட பேட் நுனிலே பந்து பட்டுச்சே! மன்மோகன் சிங் அதான் காட்ச் பிடிச்சார். இல்லியா சிங்ஜி?

**மன்மோகன்** : அ.....அ...ஆமாம். பேட்ல பட்டுது. நான் உடனே பிடிச்சிட்டேன். அம்பயர், அவுட் குடுக்கப் போறீங்களா இல்லியா?

**கர்ஜித்** : குடுத்துட்டாப் போச்சு! (வலது கையைத் தூக்குகிறார்) ஐயோ, வலிக்குதே....

**மகாஜன்** : வேணும்னே அவுட் குடுத்தா அப்படித்தான் வலிக்கும். நியாய அநியாயம் பார்க்காம இப்படியா அவுட் குடுப்பாங்க?

**கர்ஜித்** : சரி. தேர்ட் அம்பயர் என்ன சொல்றார்னு கேட்போம்.

**தேர்ட் அம்** : என்ன அம்பயர் நீங்க? சோனியா, முதல்ல ஹவ்'ஸ் தட்னு கேட்ட உடனேயே வலதுகை விரலைத் தூக்கி அவுட் குடுத்திருக்க வேணாமா நீங்க? இப்படியா டிலே பண்றது? சோனியா கோவிச்சுக்க மாட்டாங்க?

(மகாஜன் முறைத்துப் பார்த்துக் கொண்டே பெவிலியனுக்குப் போக, வாஜ்பாய் பேட்டுடன் வருகிறார்.)

**சோனியா** : யாரைக் கேட்டு நீங்க ஒன்-டௌன்ல வந்தீங்க? அசார் இப்படித்தான் வாரரா? திரும்பிப் போங்க. போய் முரளி மனோகர் ஜோஷி, இல்லேன்னா சிக்கந்தர் பக்த்னு ஒருத்தர் இருந்தாரே. அவரை வரச் சொல்லுங்க.



**வாஜ்பாய்** : இதென்ன அக்கிரமமாப் போச்சு! எங்க பேட்டிங் ஆர்டரை நாங்க தானே முடிவு பண்ணணும். நீங்க ஏன் அதுல குறுக்கிடறீங்க?

**சோனியா** : இப்படி எல்லாம் நீங்க என்னைக் கேள்வி கேக்கக் கூடாது. தேர்ட் அம்பயருக்குத் தெரிஞ்சா, நீங்க ஆட ஆரம்பக்கறதுக்கு முன்னாடியே உங்களுக்கு அவுட்

கொடுத்துருவார். ஒழுங்காத் திரும்பிப் போங்க பெவிலியனுக்கு. இல்லேன்னா நான் டாக்டர் சுப்பிரமணியன் சுவாமியை இங்க கூப்பிட வேண்டியிருக்கும். அப்புறம் அவர் வந்தார்னா, கூடவே ஜெயலலிதாவும் வந்துரு வாங்க. அவங்க பந்து வீசினா, நீங்க ஆஸ்பத் திரிலதான் அட்மிட் ஆக வேண்டியிருக்கும்.

**வாஜ்பாய்** : நானென்ன ஆடிட்டரா?

**சோனியா** : கொஞ்சம் டீசன்டா பேசக் கத்துக்கணும் நீங்க. இல்லேன்னா தேர்ட் அம்பயர்கிட்ட சொல்லி....

**வாஜ்பாய்** : ஆ-ஊன்னா தேர்ட் அம் பயர், தேர்ட் அம்பயர்னு ஆரம்பிச்சிடறீங்க. உங்க கூட ஆட வந்ததே தப்பு. முலாயம் சிங் அப்பவே முட்டிக்கிட்டார். நாங்கதான் கேக்காம ஆட வந்தோம்.

**சோனியா** : முலாயம் சிங் மோசமான ஆள். அவருக்கு கிரிக்கெட்னாலே என் னன்னு தெரியாது.

**வாஜ்பாய்** : கிரிக்கெட் தெரியாம இருக்க லாம். உங்களை நல்லாவே தெரியும்!

**சோனியா** : சரி, போனாப் போவுது. இந்தத் தடவை உட்டுடறோம். போய் பேட் பண்ணுங்க. *(பந்தை வேகமாகக் கன்னா பின்னா என்று வீசுகிறார்.)*

**வாஜ்பாய்** : இது வைடு-பால். எப்படிங்க அடிக்கறது? அம்பயர் நீங்க சொல்லுங்க!

**சுர்ஜித்** : எப்படி அடிக்கறதுன்னு எல் லாம் நானா சொல்லறது? நீங்கதானே பாட்ஸ்மன்?

**சோனியா** : நீங்க அடிக்கக் கூடாதுங்கற துக்குத்தான் அப்படித் தள்ளிப் போடறேன்!

**வாஜ்பாய்** : ஆனாலும் அநியாயத்துக்கு லெக் அம்பயர் கிட்ட போட்டா, எப்படி அடிக்கிறது? ஒரு ரன் குடுத்தாகணும்.

**சோனியா** : வைடு - பால்னு அம்பயர் சொல்லலே. அதனால ஒரு ரன் எல்லாம் கொடுக்க முடியாது!

**வாஜ்பாய்** : எப்படியோ தொலையுங்க. ஆறு பந்து வீசியாச்சுன்னா, அடுத்த போலர் கிட்ட பந்தைக் கொடுங்க. நீங்களே போட் டுட்டு இருக்க வேணாம்.

*(சோனியா பந்து வீச, பவுண்டரியும், சிக்ஸருமாக ரன்கள் குவிகின்றன. சரத் பவார் தொந்தி குலுங்க ஓடி வரும்போது வாஜ்பாய் சிரிப்புத் தாங்காமல் விக்கெட் டைக் கோட்டைவிட, அவுட்!*

*எப்படியோ எல்லாரும் சளைக்காமல் ஆடி ரன் எடுக்கிறார்கள். மாறன் ஆறு எடுக்க, சௌதாலா நாலு எடுக்க, ஸ்கோர் 269ல், ஐம்பது ஓவர் முடிகிறது.)*

**வா**ஜ்பாய் அணி ஃபீல்டில் இறங்கு கிறது. மாதவராவ் சிந்தியாவும் அஜித் ஜோகியும் ஓபனர்களாக வருகிறார்கள்.

**சிந்தியா** : உங்க சைடுல போலர்கள்னு யாரும் சொல்லிக்கிற மாதிரி இல்லே. அது னால முப்பது ஓவர்லயே நாங்க 270 எடுத் துருவோம்!

**அப்பாஸ் நக்வி** : நான் இருக்கேன். அடிங்க பார்க்கலாம்!

**சோனியா** : நான் காப்டன். அதனால என்னைப் பார்த்து, பந்தை வீசக் கூடாது. பேட் கிட்ட பந்தைக் கொண்டு வந்து மெது வாப் போடணும்.

**வாஜ்பாய்** : அந்த மாதிரி எல்லாம் ரூல்ஸ் கிடையாது!

**அத்வானி** : நீங்களே பந்தையும் கையோடு வச்சுக்குங்க. இடது கையால தூக்கிப் போட்டு, வலது கை பேட்டால அடிங்க!

**சோனியா** : கிண்டலா பண்றீங்க? தேர்ட் அம்பயர் பார்த்துக்கிட்டேதான் இருக்கார்!

**வாஜ்பாய்** : *(தலையைப் பிய்த்துக் கொண்டு)* ஐயோ, மறுபடி ஆரம்பிச்சுட்டாங் களே தேர்ட் அம்பயர்னு! நக்வி, போடுப்பா பந்தை!

*(நக்வி போட்டு முடிக்க, வெங்கய்ய நாயுடு மறு பக்கத்திலிருந்து பந்து வீசுகிறார்.)*

**நாயுடு** : நான் எவ்வளவு ஸ்பீடா பேச றேனோ, அவ்வளவு ஸ்பீடுல பந்தும் வீசு வேன். அடிங்க பார்க்கலாம்!

**சிந்தியா** : எங்கிட்ட உங்க பாச்சா எல் லாம் பலிக்காது. அதுக்கு அர்ஜுன் சிங்கைப் பாருங்க! அவர் எங்க ஊர்க்காரரு. கொஞ்சம் மெதுவாத்தான் ஆடுவார்!

*(நாயுடு பந்து வீச பவுண்டரி, சிக்ஸர் என்று வெளுத்துக் கட்டுகிறார் சிந்தியா. ஆனால் ஒரு பந்தை உயரே அடிக்க, ஓடிப் போய் காட்ச் பிடிக்கிறார் குஷாபாவ் தாக்ரே.)*

**சிந்தியா** : இது காட்ச் இல்லே. கையால மட்டும்தான் கீழே வர்ற பந்தைப் பிடிக் கணும். இப்படி ஜிப்பா பூராவையும் விரிச்சுப் பிடிச்சா அவுட் இல்லே!

*(அதற்குள் சுர்ஜித் கை விரலைத் தூக்கி விட முணுமுணுத்துக் கொண்டே போகிறார் சிந்தியா. சரத் பவார் வருகிறார்.)*

**பவார்** : நான் விக்கெட் முன்னால நின்னா, உங்களால விக்கெட்டையே பார்க்க முடியாது! அதுனால என்னை அவுட் ஆக்க யாராலயும் முடியாது!

*(பவார் இரண்டு, நாலு என்று அடித்துத் தள்ளுகிறார். ஸ்கோர் 250 ஐ எட்டி விடுகிறது. ரன் அவுட் ஆகி பெவிலியனுக்குத் திரும்புகிறார் பவார். மன்மோகன் சிங் வருகிறார்.)*

**மன்மோகன்** : கொஞ்சம் பார்த்துப் போடுங்க. நான் வேர்ல்ட் பாங்க் டீம்லதான் ஆடியிருக்கேன். இந்த மாதிரி பிட்ச் எல்லாம் எனக்குப் பழக்கமே இல்லே... ப்ளீஸ்... ப்ளீஸ்...

*(ர. குமாரமங்கலம் வீச்சில் விக்கெட் தெறிக்க, தலை தெறிக்க பெவிலியனுக்கு ஓடுகிறார் மன்மோகன் சிங்.)*

**கருணாகரன்** : நான் பந்தை மட்டும்தான் அடிப்பேன். ஓட எல்லாம் என்னால முடியாது. நீங்களே ஒரு கணக்குப் பார்த்து ரன் போட்டுக்குங்க!

**வாஜ்பாய்** : ஏ.கே. அந்தோணிய நெனச்சுக்கிட்டு விளாசுங்க. சிக்ஸருக்குப் போயிடும் பந்து! ஓடவே வேணாம்!

*(ஸ்கோர் 269 இருக்கும் போது 49.5 ஓவர் முடிந்து விடுகிறது. எல்லாரும் அவுட், வாஜ்பாய் சந்தோஷமாக அத்வானியைப் பார்த்துச் சிரிக்கிற போது, அவசர அவசரமாக அலறிப் புடைத்துக் கொண்டு கிரிதர் கோமாங் வந்து, பேட் பண்ண நிற்கிறார்.)*

**அத்வானி** : (இடுக்கிட்டு) நீங்க பேட் பண்ண முடியாது. நீங்க ட்வெல்த் மேன்!

**கிரிதர்** : ட்வெல்த்தோ, தர்ட்டீன்த்தோ, நான் மேன். ஆடுவேன்!

**சோனியா** : நாங்க ஜெயிக்கணும்னா அவர் ஆடித்தான் ஆகணும். அப்படியே நில்லுங்க. டோன்ட் கோ, கோமங்கோ!

**வாஜ்பாய்** : அக்கிரமமா இருக்கே? ஏற்கெனவே உங்க சைடுல பதினொரு பேருகூட ரெண்டு அம்பயர், ஒரு தேர்ட் அம்பயர். இப்ப ட்வெல்த் மேனும் ஆடணும்னா எப்படி?

**சோனியா** : இன்னும் ஒரு பந்து இருக்கே. இல்லியா 50 ஓவர் முடிய? அப்ப ஆடத்தான் ஆடுவோம். அடிங்க, கோமங்!

**அத்வானி** : போட்டுத் தொலையுங்க பந்தை! பால யோகி வேற தொலையட்டும்னு கையக் காமிச்சுட்டார். இல்லேன்னா தேர்ட் அம்பயர்னு ஆரம்பிச்சுடுவாங்க இவங்க!

*(வெங்கய்ய நாயுடு பந்து வீச, கிரிதர் கோமங் ஒரு ரன் எடுக்க –)*

**சோனியா** : ஜெயிச்சுட்டோம்! ஜெயிச்சுட்டோம். ஹய்யா, ஹய்யா நாங்க ஜெயிச்சுட்டோம்! இனிமே ஒரு நிமிஷம் கூட நீங்க இந்த கிரவுண்டுல இருக்கக் கூடாது!

**வாஜ்பாய்** : நாங்க எல்லாரும் போயிடறோம், அப்புறம் இந்த கிரவுண்ட்ல நீங்க மட்டும் என்ன பண்ணுவீங்க...?

**சோனியா** : தட் இஸ் நன் அஃப் யுவர் பிஸினஸ்! அனாவசியமா கேள்வி கேட்டா தேர்ட் அம்பயர்ட்ட மாட்டிவிடுவேன்.

கற்பனை : **சாருகேசி**

---

# மியான்தாத்தின் சாதனை!



● 1979ல் கனடா – இங்கிலாந்து மேட்ச்சில், கனடா அணி 45 ரன்கள் மட்டுமே எடுத்து நாற்பதே ஓவர்களில் ஆட்டம் இழந்தது. இங்கிலாந்து இரண்டு விக்கெட் இழந்து. 46 ரன்கள் எடுத்து வெற்றி பெற்றது. இதுவே மிகக் குறைந்த ரன்கள் எடுக்கப்பட்ட மேட்ச்.

● சச்சினுக்கு ஒரு தனிப்பெருமை. 96-ம் வருட உலகக் கோப்பைப் போட்டியில், எல்லா மேட்ச்களிலுமாக மொத்தம் எடுத்த ரன்கள் 523. இதை சச்சின் மறுபடி முறியடிப்பார் என்பது ரசிகர்களின் எதிர்பார்ப்பு.

● முதலில் பூஜ்ஜியம் ரன் எடுத்த பெருமைக்குரியவர் ஸ்ரீலங்காவின் அனுரா தென்கூன். 1975 போட்டியில், மே. இந்திய அணிக்கு எதிரான ஆட்டத்தில்தான் இவர் டக் அடித்தார்.

● இதுவரை நடந்த ஆறு உலகக் கோப்பைப் போட்டிகளிலும் ஆடிய கிரிக்கெட்டர் என்ற பெருமைக்குரியவர் பாக். வீரர் ஜாவித் மியான்தாத். மொத்தம் 33 மேட்சுகள் ஆடியுள்ளார்.

— சி.எம்.

"1952 பாராளுமன்றத் தேர்தலில், தர்ம புரி பாராளுமன்றத் தொகுதி உறுப்பினராக காங்கிரஸ் சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்டவர் என்.எஸ். சத்யா பிள்ளை. இவர் ஒரு பஸ் முதலாளி. தேர்ந்தெடுக்கப்பட்ட சத்யா பிள்ளை 1954ல் பதவியிழக்க நேரிட்டது. காரணம் தெரியுமா? இவருக்குச் சொந்தமான பஸ்களில்தான் தபால் மூட்டைகள் எடுத்துச் செல்லப்பட்டு மொரப்பூர் ரயில் நிலையத்தில் சேர்க்கப்படும். இந்த ஒப்பந்தத்தை அவரது பஸ் கம்பெனி பெற்றிருந்தது. 'அரசாங்க காண்ட்ராக்ட் பெற்றவர் பாராளுமன்ற உறுப்பினராக இருக்கக் கூடாது' என்று ஒருவர் வழக்குத் தொடுக்க, சத்யா பிள்ளையின் பதவி போயிற்று.

"இதன் விளைவாக வந்த இடைத்தேர்தலில் சோஷலிஸ்ட் கட்சியின் சார்பாக நான் போட்டியிட்டேன். என்னை எதிர்த்து காங்கிரஸ் சார்பில் சுப்பிரமணிய செட்டியார் போட்டியிட்டார்.

"இப்போது தர்மபுரி பஸ் ஸ்டாண்டாக இருக்கும் இடம் அப்போது பொதுக்கூட்டத் திடலாக இருந்தது. நான் முனிசிபாலிட்டியில் இரண்டு ரூபாய் கட்டி எங்கள் கட்சி பொதுக் கூட்டத்துக்காக மைதானத்தை ரிசர்வ் செய்து வைத்திருந்தேன். அப்போது தேர்தல் பிரசாரத்துக்காக முதல்வர் காமராஜ் தர்மபுரிக்கு வந்திருந்தார். நான் பணம் கட்டிய மைதானத்திலேயே முதல்வருக்கும் மேடை போட்டு விட்டார்கள், காங்கிரஸ்காரர்கள். எனக்கு மிகுந்த கோபம். 'அன்றைய தேதியில் மைதானத்தில் கூட்டம் நடத்த எனக்கு மட்டுமே உரிமை உண்டு. எப்படி காங்கிரஸ் நடத்துகிறது? பார்க்கலாம்' என்று என் ஆதரவாளர்களுடன் மைதானத்துக்குச் சென்றேன். எங்கள் தொண்டர்கள் காங்கிரஸ் தோரணங்களைப் பிய்த்து எறிந்தார்கள்... காங்கிரஸார் போட்ட அதே மேடையில் இரவு ஏழு மணிக்கு ஏறி பேசத் துவங்கினேன். விடிய விடியப் பேசிக் கொண்டிருந்தேன். கூட்டம் அசையவில்லை. சர்க்யூட் ஹவுஸில் இருந்த முதல்வர் காமராஜுக்கு செய்தி போயிற்று. ஆத்திரப்பட்ட காங்கிரஸ்காரர்களை அடக்கி, 'சரி.. வடிவேலுவே பேசிக்கட்டும்' என்று கூட்டத்தை ரத்துச் செய்து விட்டு, மறுநாள் காலை கிளம்பி விட்டார்.

"இந்தப் பிரச்னை நடந்து ஒரு வாரம் கழித்து ஒரு சிபாரிசுக்காக சென்னை வந்து காமராஜைப் பார்த்தேன். நான் அமர்வதற்காக நாற்காலியை அவரே தூக்கி வந்து போட்டது மட்டுமல்லாமல் நடந்த விவகாரத்தைப் பற்றி எதுவும் பேசாமல், என் சிபாரிசில் உள்ள நியாயத்தை ஏற்று காரியத்தையும் முடித்துக் கொடுத்தார்! அப்படிப்பட்ட பரந்த மனது கொண்ட தலைவர்கள் தமிழ்நாட்டில் இருந்தனர். இப்போது அது கனவாய், பழங்கதையாகப் போய் விட்டதே" என்று வருத்தப்படுகிறார் தமிழ்நாடு ஜனதாதளத்தின் தலைவராக இருக்கும் ஜி.ஏ. வடிவேலு.



## வி.ஐ.பியைத் தெரிஞ்சுக்கங்க!

அடுத்த வருடம் தமது பவள விழாவைக் கொண்டாட இருக்கும் வடிவேலுவுக்குச் சொந்த ஊர் தர்மபுரியிலிருந்து இரண்டு கி.மீ தொலைவில் இருக்கும் கொல்லப்பட்டி. தந்தை அப்பாவு என்கிற வெங்கடாச்சலம், இரண்டரை ஏக்கர் நிலம் வைத்திருந்த விவசாயி. தர்மபுரி பள்ளியில் ஒன்பதாவது படிவம் படிக்கும்போது விடுதலைப் போராட்டத்தில் குதித்து விட்டார்.

"தனி நபர் சத்தியாக்கிரகத்தில் கலந்து கொள்ள பெயர் கொடுத்து விட்டேன். அப்போது மாவட்ட காங்கிரஸ் செயலாளராக இருந்த நடராஜன் 'நீ பொடிப் பையன்; உனக்கு அனுமதி கிடையாது' என்று ஒதுக்கி விட்டார். போராட்டத்தில் பங்கு கொண்டு ஜெயிலுக்குச் செல்ல வேண்டும் என்ற என் ஆர்வம் நிறை

வேறியது 1942ம் ஆண்டு 'வெள்ளையனே வெளியேறு இயக்கத்தின்போதுதான். பள்ளி இறுதி வகுப்பு முடித்திருந்த நான், தபால் ஆபீஸ் முன்னால் மறியல் செய்ததற்காக கைது செய்யப்பட்டு சேலம் ஜெயிலில் அடைக்கப் பட்டேன்" என்கிறார்.

அரசுப் பணி கிடைத்தும் அதைத் தூக்கி எறிந்துவிட்டு முழு நேர அரசியலில் குதித்தவர் வடிவேலு. காங்கிரஸில் இருந்த சோஷலிஸ்ட் தலைவர்களான ஜெயப்பிரகாஷ் நாராயண், ஆச்சாரிய நரேந்திர தேவ், ஜேபி.கிருபளானி ஆகியோரை ஆதர்ச தலைவர்களாக ஏற்றுக் கொண்ட வடிவேலுவுக்கு தமிழ்நாட்டைப் பொறுத்தவரை எஸ்.ஆர். சுப்பிரமணியமும், வி.ஆர். ராதாகிருஷ்ணனும் நெருங்கிய தோழர்களாகவும், வழிகாட்டிகளாகவும் ஆனார்கள். சோஷலிஸ்டுகள் காங்கிரஸிலிருந்து பிரிந்து தனிக்கட்சி கண்டபோது வடிவேலுவும் மாறினார். அதன் பின் சோஷலிஸ்டுகள் பல அவதாரங்கள் எடுத்த போதும் 1977ல் ஜனதா கட்சி உருவாகும்வரை சோஷலிஸ்ட் இயக்கத்திலேயே பணிபுரிந்தார்.

# காமராஜரையே திரும்பிப் போகச் செய்தவர்!

அந்தக் கால கட்டத்தில் விவசாயிகள் மற்றும் தொழிலாளர்களுக்காக, தர்மபுரி, சேலம் மாவட்டங்களில் நடந்த போராட்டங்களில் பங்கு கொண்டு பதினேழு முறை ஜெயிலுக்குப் போயிருக்கிறார்.

"முன்னுக்குப் பின் முரணாகப் பேசும் நேருவின் போக்கு எனக்குப் பிடிக்காததால் தான் சோஷலிஸ்டுகளுடன் இணைந்தேன். என் மனத்தில் பட்டதை, எவ்வளவு பெரிய மனிதரிடமும் கேட்டு விடுவேன். சென்னை இந்தி பிரசார சபாவில் காந்தி தங்கியிருந்தபோது எஸ்.ஆர்.எஸ், ராதாகிருஷ்ணன் ஆகியோரோடு பார்க்கப் போனேன். "ஐயா... காந்தியத்துக்கும் சோஷலிஸத்துக்கும் கம்யூனிஸத்துக்கும் என்னென்ன வேறுபாடுகள்?" என்று மகாத்மாவைப் பார்த்துக் கேட்டேன். உடனிருந்தோர் என்னைக் கொஞ்சம் அதிர்ச்சியோடு பார்க்க, மகாத்மா எனக்கு பொறுமையாகப் பதில் சொன்னதை வாழ்நாளில் மறக்க முடியாது" என்று சொல்லும் வடிவேலு ஓர் எழுத்தாளரும் கூட. 'ஜனதா' என்ற பத்திரிகையில் 1946லேயே உதவி ஆசிரியராக இருந்திருக்கிறார். அதன்பின் 'சமுதாயம்' 'புதுவாழ்வு' ஆகிய பத்திரிகைகளை நடத்தியிருக்கிறார். முப்பதுக்கும் மேற்பட்ட புத்தகங்கள் எழுதியிருக்கிறார். "சரித்திர நாயகர் கல்கி அவர்கள் எழுத்துக்கள்தான் சரித்திர கதையை எழுத வேண்டும்' என்ற விதையை என்னுள் தூவின. பன்னிரண்டாம் நூற்றாண்டு சோழர்களை அடிப்படையாகக் கொண்டு 'செம்பியத் திலகம்' என்ற சரித்திர நாவலையும் எழுதியிருக்கிறேன்!"

வடிவேலு சதா அரசியல் என்று சுற்றிக் கொண்டிருக்க, நான்கு பெண்களையும் வளர்த்து ஆளாக்கியவர் திருமதி வடிவேலு தான். விடுதலைப் போராட்டத்தில் பங்கு கொண்டதற்காக பென்ஷன் வாங்க மனம் ஒப்பவில்லை. "தேசப் பணிக்கு கூலியா?" என்று கடுமையாகக் கேட்கிறார்.

இன்றைக்கும் வடிவேலுவின் குடும்பத்துக்கு அதே இரண்டரை ஏக்கர் நிலம்தான் இருக்கிறதாம். "தம்பிகளோடு இணைந்த கூட்டுக் குடும்பம்தான். ஏதோ வாழ்க்கை ஓடுகிறது. 'கோடானு கோடி மக்கள் நரகத்தில் துன்பப்படும்போது சொர்க்கத்தில் இடம் கேட்க உனக்கு மட்டும் என்ன உரிமை இருக்கிறது?' என்பார் லியோ டால்ஸ்டாய். எனக்குப் பிரச்னைகள், சோதனைகள் வரும் போது இதைத்தான் நினைத்துக் கொள்வேன்!"

— ப்ரியன்

படம்: வெங்கடேஷ்

# ஒரு கோப்பையிலே மேட்ச்




''என்னடா டீ.வில ஒரே சத்தம்? வேர்ல்ட் கப்பா? சட்ட சபையா?''






'' என்ன சார் இது அநியாயம், யாரோ பாதி ஆட்டத்தில் பாட்ஸ்மனோட பாண்ட் ஷர்ட்ட உருவறாங்க!''

''அந்த ஸ்பான்சரோட காண்ட்ராக்ட் ஆறு மணியோட முடியுதாம்!''








''வோர்ல்ட் கப்பிலேயே முக்கியமான மாட்ச்!''

''பார்த்தாலே தெரியுதே!''





''வெறியோட ஆடு வெறியோட ஆடுன்னு ஏத்தினா இப்படித்தான்!''

''என்னாச்சு?''

''நம்ம காப்டன் டாஸ் பண்ணின காசு பத்து நிமிஷமா கீழவே வரலே!''

"ஷோஅப் அக்தர் மாதிரி ரொம்ப தூரம் ஓடி வந்து போடுவேன்னு அடம் பிடிக்காதே, க்ரீஸுக்கு வர்றதுக்குள்ளே எதுக்கு ஓட ஆரம்பிச்சோம்னே மறந்திடும்னு சொன்னேன், கேக்கல."





**கற்பனை: மாதுரி**

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1999

**வாசகர்களையும் எழுத்தாளராக்கும் போட்டி!**

**ரொக்கப் பரிசோடு புத்தகப் பரிசு!**

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!

**முதல் பரிசு — ரூ. 5000**

**இரண்டாம் பரிசு — ரூ. 3000**

**மூன்றாம் பரிசு — ரூ. 2000**




தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

இவற்றோடு, பரிசு பெறுபவர்களுக்கு மட்டுமல்ல; பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளை எழுதிய கதாசிரியர்களுக்கும் **சுந்தா** எழுதிய **பொன்னியின் புதல்வர்** (அமரர் கல்கியின் வாழ்க்கை வரலாறு) நூலும் பரிசாக அளிக்கப்படும்.

***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்படமாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1999'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 1 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

— **ஆசிரியர்**

எங்களிடம் ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறும்
அனைவருக்கும் எங்களது வாழ்த்துக்கள்

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி




# P.R. JEWELLERY

GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES
102, USMAN ROAD, T. NAGAR, CHENNAI - 600 017.
PH: 434 4442, 432 7764 TUESDAY HOLIDAY



P.R. ஜுவல்லரியில் ராசிக்கல் மோதிரம் வாங்கி
அணிந்துபயன்பெறுங்கள். ஒவ்வொரு ராசிக்கும்
மோதிரம் ரூ. 400/-

(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)

குறிப்பு: எங்கு ஜோதிடம் பார்த்தாலும் எங்களிடம் வந்து ரூ. 400/-க்கு ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறுங்கள். ஒரிஜினல் கல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.

---

நகைக் கடைக்கு நிறைய அனுபவம் தேவை. எனக்கு 20 வருட அனுபவம் உள்ளது. P.R. ஜுவல்லரி நிறுவனம் தொடங்கி 13 ஆண்டுகள் ஆகிறது. எங்கள் கடைக்கு நிறைய வாடிக்கையாளர்கள் உள்ளனர். ஆர்டரின் பேரில் வைர நகைகள், தங்க நகைகள், வெள்ளிப் பாத்திரங்கள், ராசிக்கல் மோதிரங்கள் சிறந்த முறையில் செய்து தருகிறோம். பரிசுப் பொருட்கள் ரூ. 50 முதல் ரூ. 10,000 வரை கிடைக்கும். அனைத்து ராசிக் கற்களும், ஸ்படிக மாலைகள், ஸ்படிக விநாயகர், ஸ்படிக லிங்கம், பவழ விநாயகர், பவழ மாலைகள், முத்து மாலைகள் அனைத்தும் கிடைக்கும்.

ராஜாக்கள் காலத்தில் இருந்தே வைரங்கள், வைடூரியங்கள், இரத்தினங்கள், நவரத்தினங்கள் உபயோகத்தில் உள்ளன. தற்போது 5 வருடமாக அனைவரும் ராசிக்கற்களை விரும்பி வாங்குகிறார்கள். எந்த ஜோதிடராக இருந்தாலும் ஒருவருக்கு இராசிக்கல் தேர்ந்தெடுக்க அவரது ராசிப்படியும், நடப்பு திசைப்படியும், என் படியும்தான் எழுதித் தருகிறார்கள். இதில் ராசிப்படி அணிவதுதான் மிகச் சிறந்தது. உதாரணமாக, நாம் கோவிலுக்குச் சென்று அர்ச்சனை செய்யும் பொழுதும், வீட்டில் நடைபெறும் ஹோமங்களின் போதும் ஜென்ம நட்சத்திரம், இராசி சொல்லித்தான் அர்ச்சனை செய்கிறோம். அதனால், அதன்படி அணிவதுதான் மிகச் சிறந்தது. அனைவரும் நவரத்தின மோதிரம் அணியலாம். மிகவும் நல்லது. இது 9 கிரகங்களின் பலனைத் தரும். 6 கிராம் தங்கத்தில் 5 CENT வைரம் வைத்து நவரத்தின மோதிரம் ரூ. 6,250/-

| ராசி | ராசி மோதிரம் | விலை விவரம் |
|---|---|---|
| மேஷ ராசி, விருச்சிக ராசி | 2 CARAT பவழம் வைத்து வெள்ளி மோதிரம் | ரூ. 400/- |
| ரிஷப ராசி, துலாம் ராசி | 5 CENT வைரம் வைத்து 4 கிராம் தங்கத்தில் | ரூ. 4250/- |
| ரிஷப ராசி, துலாம் ராசி | 5 CENT வைரம் வைத்து வெள்ளி மோதிரம் | ரூ. 2250/- |
| மிதுன ராசி, கன்னி ராசி | 20 CENT மரகதப் பச்சை வெள்ளி மோதிரம் | ரூ. 400/- |
| கடக ராசி | 2 CARAT முத்து வைத்து வெள்ளி மோதிரம் | ரூ. 400/- |
| சிம்ம ராசி | 20 CENT மாணிக்கம் வைத்து வெள்ளி மோதிரம் | ரூ. 400/- |
| தனுசு ராசி, மீனராசி | 1 CARAT புஷ்பராகம் வைத்து 4 கிராம் தங்கத்தில் | ரூ. 2300/- |
| தனுசு ராசி, மீனராசி | ½ CARAT கனக புஷ்பராகம் வைத்து 4 கிராம் தங்கத்தில் | ரூ. 3000/- |
| தனுசு ராசி, மீனராசி | 1 CARAT புஷ்பராகம் வைத்து வெள்ளியில் | ரூ. 400/- |
| தனுசு ராசி, மீனராசி | 25 CENT கனக புஷ்பராகம் வைத்து | ரூ. 500/- |
| மகர ராசி, கும்ப ராசி | 20 CENT நீலம் வைத்து வெள்ளி மோதிரம் | ரூ. 400/- |

அனைவரும் அணியக் கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம். விலை ரூ. 400/- இதை அணிவதால் படிப்பு, ஞாபகசக்தி, வேலை வாய்ப்பு, வியாபாரம், செல்வ வளம் பெருகும். நம்பிக்கை, உழைப்பு, முயற்சி செய்தால் ராசிக்கல் மோதிரம் அணிந்து 100 சதவீத வெற்றி பெறலாம். எங்களிடம் ஜாதகம் கொண்டு வந்தால் என்ன கல் போட வேண்டும் எனச் சொல்கிறோம். கட்டணம் கிடையாது. ஜாதகம் இல்லாதவர்கள் பிறந்த தேதி, நேரம், ஊர் ஆகியவற்றைக் கொண்டு வந்தால் கம்ப்யூட்டர் மூலம் ஜாதகம் கணித்து தருகிறோம். கட்டணம் ரூ. 50/- தபால் மூலம் ஜாதகம் பெற பதிவுத் தபால் கட்டணம் ரூ. 20/- சேர்த்து ரூ. 70/-க்கு D.D. (OR) M.O. அனுப்பவும். தபால் மூலம் ராசிக்கல் மோதிரம் பெற மோதிரம் ரூ. 400/- இன்சூர் பதிவுத் தபால் ரூ. 50/- சேர்த்து ரூ. 450/-க்கு D.D. (OR) M.O. அனுப்பவும். மெலிதான கம்பியில் அளவு அனுப்பவும். முகவரி தெளிவாக பின் கோடுடன் எழுதவும்.

எங்கு ஜோதிடம் பார்த்தாலும் எங்களிடம் வந்து ரூ. 400/-க்கு ராசிக் கல் மோதிரம் வாங்கிப் பயன்பெறுங்கள். நாங்கள் தரும் கல் ஒரிஜினல் என முழு உத்திரவாதம் தருகிறோம். தபால் எழுதினால் முழு விவர பாம்லெட் இலவசமாக அனுப்புகிறோம்.

**எமது சிறப்புப் பேட்டியை ராஜ் ப்ளஸ் டீ.வி.யில் திங்கள், புதன், வெள்ளி காலை 8.30 மணிக்கும் சனிக்கிழமைதோறும் காலை 8.30 மணிக்கு விஜய் டீ.வி.யிலும் காணத் தவறாதீர்கள்!**

WE ACCEPT MASTER CARD/VISA CARDS

ADVT.

# இந்தியா ஜெயிக்க வேண்டும்... ஆனால்..!

வெயிலோடு போட்டி போட்டுக் கொண்டு கிரிக்கெட் ஜுரம் ஏறுகிறது. பங்கேற்கும் ஒவ்வொரு நாடும் ஜெயிக்கும் வெறியில் இருக்கிறது. அனைத்து அணிகளின் பலம், பலவீனம்...? பட்டியலிடுகிறார் தமிழக ரஞ்சி அணியில் இடம்பெற்ற வி. சிவராம கிருஷ்ணன்.

• சச்சின்

• கும்ப்ளே

• ஸ்ரீநாத்

## தென்னாப்பிரிக்கா

பலம் :

1. அற்புதமான கூட்டுச் செயல்பாடு (டீம வொர்க்)

2. அருமையான ஃபீல்டிங். ரோட்ஸ், (Rhodes) க்ருக்ஸ் (Crookes) கிப்ஸ் (Gibbs)! ஃபீல்டிங் மூல மாக மட்டுமே மேட்ச்சை தங்களின் பக்கம் திருப்பக் கூடியவர்கள் இவர்கள்.

3. ஓடி ஓடி இவர்கள் ரன்கள் எடுக்கும் அழகே தனி.

4. ஆலன் டொனால்டு (Allan Donald) மற்றும் பொல் லாக் (Pollock) போன்ற சிறந்த பௌலர்கள் உள்ள அணி.

5. அணிக்கு வாய்த் திருக்கும் பொறுப்பான கேப்டன் க்ரோன்ஜ் (Cronje)

6. அற்புதமான விக் கெட் கீப்பர் பௌச்சர் (Boucher).

பலவீனம் :

1. இவர்கள் பேட்டிங் செய் வது முன்பே திட்டமிடப்பட்ட தாக, ஒரே மாதிரியான தன்மையுடன் இருக்கிறது. இவர்கள் அணியில் புதுப்புது பாணியில், பரி சோதனை முயற்சியில் பேட் டிங் செய்பவர்கள், க்ளு சனரைத் (Klusener) தவிர யாரும் இல்லை.

2. இவர்களிடம் சிறந்த ஸ்பின் பௌலர் கள் இல்லை.

3. தங்களின் சில பழக்க வழக்கங்களால் இறுதிப் போட்டியில் தோற்கிற நிலை (எப் போதாவது!)

## மேற்கிந்தியத் தீவு

பலம் :

1. ஆம்புரோஸ் (Ambrose), வால்ஷ் (walsh) போன்ற அற்புதமான ஒருநாள் ஆட்ட பௌலர் கள்.

2. தன்னுடைய சிறந்த பேட்டிங்கைத் துணை கொண்டு, தனியாக அணிக்கு வெற்றி பெற்றுத்

தரக்கூடிய பிரையன் லாரா (Lara) உள்ள அணி.

3. ரிட்லி ஜேகப்ஸ் (Riddley Jacobs) என்ற சிறந்த விக்கெட் கீப்பர் & பேட்ஸ்மேன் உள்ள அணி.

4. மிக அருமையாக விளையாடக்கூடிய சந்தர்பால் (chanderpaul) என்கிற பேட்ஸ் மேன்.

**பலவீனம் :**

1. மிகவும் சீரில்லாத ஆட்டங்கள்.

2. மதிப்பெண் வழங்குகிற மாதிரியான ஃபீல்டிங் இல்லை.

3. சமீபத்தில் ஹூப்பர் (Carl Hooper) அணியிலிருந்து ஓய்வு பெற்றது அணியின் பலத்தைக் குறைத்திருக்கிறது.

## ஜிம்பாப்வே

**பலம் :**

1. மிகத் திறமையான கட்டுக் கோப்பான ஃபீல்டிங்

2. அலிஸ்டெய்ர் கேம்ப்பெல் (Alistair Campbell), கிரேவி & ஆன்டி ஃபிளவர் (Grawy & Andy Flower), முரே குட்வின் (Murray Goodwin) போன்ற சிறந்த பேட்ஸ்மேன்கள்.

3. பால் ஸ்ட்ரேங்க் (Paul strang) ஹீத் ஷேக் போன்ற நல்ல பௌலர்கள்.

4. ஒருநாளில் மற்ற எந்த அணியையும் வெல்லக்கூடிய பலம்.

**பலவீனம் :**

1. ஜெயிக்கும் பழக்கம் இல்லை.

2. மிகக் குறைவான, பலமில்லாத பந்து வீச்சு.

## இங்கிலாந்து

**பலம் :**

1. சொந்த மண்ணில் விளையாடுகிறார்கள். மற்றவர்கள் சிம்ம சொப்பனமாகக் கருதும் வானிலை இவர்களுக்குப் பழக்கமானது.

2. மேட்சை வெற்றிபெறச் செய்கிற டரன் கஃப் (Darren Gough) என்கிற சிறந்த பௌலர்.

3. ஆஸ்டின் (Austin), எல்ஹாம் (Ealham) போன்ற ஸ்லோ, மீடியம் என்று பந்து வீசக்கூடியவர்களின் ஸ்டைல் வானிலைக்குச் சாதகமாக இருக்கும். சிறந்த பௌலர்கள்.

4. துவக்க ஆட்டக்காரர்களாக அலெக்ஸ் ஸ்டூவர்டும் (Alex Stewart), நிக்ஸைட்டும் களமிறங்கினால் ஆட்டத்தில் ஜெயிக்கும் தீர்மானத்துடன் ஆடுவார்கள்.

**பலவீனம் :**

1. சாதாரணமான ஃபீல்டிங்.

2. விளையாட்டின் போக்கை மாற்றக்கூடிய உத்வேகமான, எழுச்சியான (Exciting) வீரர்கள் இல்லை.

3. சொந்த மண்ணில் விளையாடுவதால், இவர்களிடம் மிக அதிகமாக எதிர்பார்க்கப்படுகிறது. அதனாலேயே விமர்சனங்களையும் சந்திக்க வேண்டி வரும்.

## ஆஸ்திரேலியா

**பலம் :**

1. நல்ல கூட்டுச் செயல்பாடுள்ள அணி (Team spirit)

2. அருமையான ஃபீல்டிங்.

3. ஆடம் கில்க்ரிஸ்ட் (Adam Gilchrist), மார்க் வா (Mark Waugh) போன்ற புதுப் புது பாணியில் ஆடக்கூடிய திறமையான பேட்ஸ்மேன்கள்.

4. வார்னே (Warne), க்லென் மெக்கிராத் (Clen Mc Grath), ஃபிளெமிங் (Fleming) போன்ற சிறந்த பௌலர்கள் விளையாட்டை வெற்றிக்குத் திருப்பக்கூடியவர்கள்.



• லாரா

**பலவீனம் :**

1. எதிரணி பேட்ஸ்மேன்கள், அதிரடி ஆட்டத்தில் இறங்கினால் தடுமாறிப் போவார்கள்.



• ஜெயசூர்யா

## இலங்கை

**பலம் :**

1. ஜெயசூர்யா, அரவிந்த் டி சில்வா போன்ற பிரமாதமான பேட்ஸ்மேன்கள். இவர்கள் ஏற்கெனவே பல ஒருநாள் போட்டிகளில் வெளுத்துக் கட்டியவர்கள்.

2. அர்ஜுன ரணதுங்கே என்ற சிறந்த கேப்டன்.

3. அருமையான ஃபீல்டிங்.

**பலவீனம் :**

1. சாதாரணமான பௌலிங்.

2. சமீப கால மோசமான ஆட்டங்களால், அணியினரிடையே குலைந்திருக்கும் ஒழுங்கு முறை.



• ரோட்ஸ்



• அக்ரம்

## இந்தியா

**பலம் :**

1. சச்சின் டெண்டுல்கர். தம் பேட்டிற்கு எதிரே வரும் எந்தப் பந்தையும் அடிக்கக் கூடிய வர். தனியாக விளையாடியே இந்தியாவுக்கு வெற்றி வாங்கித் தர இவரால் முடியும்.'

2. கும்ப்ளே, ஸ்ரீநாத், பிரசாத் போன்ற சிறப் பான பௌலர்கள் உள்ள அணி.

3. சௌரவ் கங்குலி, ஜடேஜாவின் பந்து வீச்சு, இங்கிலாந்து சூழ்நிலைக்கு ஏற்ப இருப்பது கூடுதல் சிறப்பு.

4. ராகுல் டிராவிட் போன்ற நின்று விளை யாடும் வீரர்கள்தான் இங்கிலாந்து வானிலைக் குத் தேவை.

**பலவீனம் :**

1. மதிப்பெண் வழங்குகிற மாதிரியான ஃபீல்டிங் இல்லை.

2. 'இந்திய அணி ஒரு நல்ல துவக்கத்திற்கு சச்சினை மட்டுமே நம்பியிருக்கிறது' போன்ற செய்திகள் உலவுவது கூட பலவீனம்தான்.

3. வானிலை சாதகமாக இருக்காது.

## நியூசிலாந்து

**பலம் :**

1. அருமையான ஃபீல்டிங்.

2. நார்தன் ஆஸ்டிஸ் தன்னுடைய பௌலிங் மூலம் அணிக்கு வெற்றி தேடித் தரக்கூடியவர்.

3. காவின் லேஸர், க்ரிஸ் ஹாரிஸின் பந்து வீச்சு, இங்கிலாந்து சூழ்நிலைக்கு ஏற்ப இருக்கும் என்பது பிளஸ் பாயிண்டுகள்.

4. தம் சொந்த மண்ணிலேயே விளையாடுகிற மாதிரியான வானிலை.

**பலவீனம் :**

1. ஆட்டத்தில் சீரான தரம் இல்லை.

2. கரத்தில்லாத பேட்டிங்.

## பாகிஸ்தான்

**பலம் :**

1. வாஸிம் அக்ரம், சோயிப் அக்தர், சக்லேன், யூனிஸ் போன்ற சிறந்த பௌலர்கள்.

2. மிக புத்திசாலித்தனமான விளையாட்டு வீரர்கள்.

3. மொயின்கான் என்ற திறமையான விக்கெட் கீப்பர். சிறந்த பேட்ஸ் மேனாக இஜாஸ்.

4. சயீத் அன்வர், இன்ஸமாம் இஸாஸ் போன்று பயங்கர மாக ஆடக்கூடிய பேட்ஸ் மேன்கள்.



• ரணதுங்கே

**பலவீனம் :**

1. மோசமான ஃபீல்டிங்

2. அணியினரி டையே ஒற்றுமை யின்மை.

3. ஜாவிட் மியான்தத் தமது கோச் பதவியை திடீரென ராஜினாமா செய்தது.

இவையெல்லாம் பொதுவான பலம், பலவீனம் என்றாலும் மற்ற இந்தியர்களைப் போலவே, நானும் இந்தியா உலகக் கோப் பையை கைப்பற்ற வேண்டும் என்று விரும்பு கிறேன். அதற்காகப் பிரார்த்திக்கிறேன். சச்சின் டெண்டுல்கரின் பேட்டிங், மற்ற வீரர்களின் சிறப்பான ஆட்டம், நம் அன்பு எல்லாம் சேர்ந்து இந்திய அணி வெற்றிபெறத் தூண்டும்.

ஆனாலும் யதார்த்தத்தில் தென்னாப் பிரிக்க அணி வெற்றி பெறுவதற்கான வாய்ப்புதான் அதிகம் என்று கருதுகிறேன். ஒருநாள் போட்டி களில் விளையாடக்கூடிய ஆல்ரவுண்டர்கள் அதிகமுள்ள அணி இது. அணியின் ஒற்றுமை ஒரு பக்கம், மற்றொருபுறம் ஒவ்வொரு வீரரும் தாம் என்ன செய்ய வேண்டும் என்பதைச் சரி யாக உணர்ந்து, தம் பங்கைச் சிறப்பாகச் செய் வதும் வெற்றிக்கு வழிவகுக்கும்.

தென் ஆப்பிரிக்காவுக்கு அடுத்து வெற்றி வாய்ப்பு அதிகமுள்ள அணி ஆஸ்திரேலியா!

குழந்தை அவன் மடியில்தான் இருந்தாள். சொப்பு வாய் இலேசாகத் திறந்திருந்தது. புதுப் பற்கள் தெரிந்தன. கடைவாயிலிருந்து விடுபட்ட வலக்கை கட்டைவிரல் ஈரத்தில் ஊறிக் கிடந்தது. அழுது ஓய்ந்த கண்கள் அவன் பாடிய நீலாம்பரியில் சொக்கி மூடிக் கொண்டன. சோர்வா அமைதியா என்று அனுமானிக்க முடியாத நித்திரை.

அபயாம்பாள் தலை ஈரத்தைத் துவட்டிய படி கவனித்தாள்.

"அம்பா... நீலாயதாக்ஷி...!"

– அந்த அழைப்பே சாந்தியின் நெற்றியை வருடியது.

"கருணா கடாக்ஷி..."

– அந்த பிரார்த்தனையே கட்டைவிரலின் நசநசப்பை ஒற்றி விலக்கியது...

குழந்தையின் சொப்பு வாய் மூடியது.

அபயாம்பாள் அருகே வந்து உட்கார்ந்தபடி பார்த்தாள்.

ராமன் பாட மட்டுமே பிறந்ததுபோல் பாடிக் கொண்டிருந்தான்.

எவர்சில்வர் பாத்திரம் கழுவும் நாராசம், எரிய மறுக்கும் டியூப் லைட், டிகாக்ஷன் இறங்கும் வாசனை, ஒட்டடை, தூசி, பக்கத்து ஜன்னலிலிருந்து வரும் மிக்ஸி ஓசை என்ற மத்தியதர தொந்தரவுகள் அவனைத் தொட்டசைக்காதது ஆச்சர்யமில்லை... ஆனால் மடியில் ஒரு மலர்மொட்டு கிடக்கும் பிரக்ஞைகூட இன்றி ராமன் பாடிக் கொண்டிருந்தான்.

அபயாம்பாள் பயந்தாள். அடிவயிற்றில் இளம்பிய பயம் மார்புக்கூட்டை வந்து தாக்கி மோதியது.

அப்பாவை அச்செடுத்த குறு வடிவமாக அவள் அகன்ற மடியில் கிடக்கும் குழந்தை – அது தாமரை இலையில் உருளும் தண்ணீர் முத்தாக மாறிவிட்ட பிரமை உண்டானது.

தூங்கிய குழந்தையை மிக மெதுவாக எடுத்து, விரித்திருந்த துணியில் கிடத்தினான் ராமன். கழுத்தடியில் கொடுத்த கையணைப்பின் லாகவம்; அதிராமல் தரை தொடச் செய்த கவனம் – எல்லாம்தான் இருந்தன... கூடவே அந்தச் செய்கைகளின் ஆதுரத்தைக் கடந்த ஒரு விலகல்; காட்சியின் அழகைத் தாண்டிய அந்நியம்...

'இது ஒரு குழந்தை' என்ற கவனம் எப்போதும் இருந்தது ராமனிடம். ஆனால், 'இது என் குழந்தை' என்ற அந்நியோன்னியம் இந்த எட்டு மாதங்களில் அவன் உணர்த்த அபயாம்பாள் பார்க்கவில்லை.

மார்பில் புதைத்துப் பாலூட்டி, மூச்சுத் திணற கட்டியணைத்து, நாளொன்றுக்கு ஆயிரம் முத்தமிட்டுக் கொஞ்சுவாள் அவள். அதெல்லாம் போதாது! தூங்கும் குழந்தையைக் கடந்து செல்லும் கணத்தில் நின்று களிக்காமல் இருக்க முடிவதில்லை. கையையோ காலையோ ஒரு வருடல். கன்னத்தை வழித்து திருஷ்டி கழிப்பு. 'இதோ வந்தேன் கண்ணு' என்று மனம் வழி அனுப்பும் தந்திச் செய்தி... உனக்கு நான், எனக்கு நீ என்று சதா உணர்த்திக் கொண்டேயிருக்கும் சின்ன சின்ன செய்கைகள்.

இது எதுவுமேயின்றி திகம்பர நிலையில் இருக்கிறான் ராமன்!

வயிறு நிறைந்த சமயங்களில் கீழே கிடத்தினால் சாந்தி உலகை வென்ற உற்சாகத்துடன் கூவுவாள்.

கை வேலையை அப்படியே போட்டு விட்டு ஓடி வருவாள் அபயாம்பாள்.

"என்னடி வம்படிக்கறே...?"

அவள் குரல் கேட்டு சாந்தி இன்னும் செய்திகள் சொல்ல,

"அப்படியா சங்கதி...? ஆகட்டும்...

# ஏகாந்த ராமன்

சரி!" - அர்த்தமற்ற உரையாடலின் ஆனந்தம் அந்த அறையையே நிறைத்துக் கொள்ளும்.

ராமன் அங்கேயேதான் இருப்பான். ஏதாவது எழுதிக் கொண்டோ, படித்துக் கொண்டோ, தம்பூராவில் சுருதி சேர்த்துக் கொண்டோ இருப்பான்.

மிக இலேசான புன்னகைதான் அவன் அங்கீகரிப்பு. 'இது வேறு இரு ஜீவன் களிடையே நடக்கும் மாயா நாடகம்' என்பது போல...

மாமியார் எச்சரித்தது ஞாபகமிருந்தது:

"அவன் சாதாரண ராமனில்லைடீ அபயம்! ஏகாந்த ராமன்! இலேசுல அவனை நெருங்கிட முடியாது. பத்து வயசுல மோட்டு வளையைப் பார்க்க ஆரம்பிச்சவன்தான்... ஜன்ம ஜன்மாந்திரத்துக் கேள்விக்கெல்லாம் அங்கே பதிலைக் கண்டுட்ட மாதிரி ஒரு அமைதி! தீபாவளின்னா அவனொத்த பசங் களெல்லாம் சீனா வெடியும் பட்சணமும் கேட்டுப் பிடுங்கும். புதுத் துணியை மாஞ்சு மாஞ்சு தொட்டுப் பார்த்துக்கும். இவனானா, பத்தாவது நிமிஷம் புதுச்சட்டையைக் கழட்டிட்டு, பாயை விரிச்சு உட்கார்ந்து பாடிண்டிருப்பான். வெடியாவது வேட் டாவது... ஒண்ணு விழாது காதுல!"

அப்போது பெருமையாக இருந்தது. 'ஏகாக்ர சித்தம் என் புருஷனுக்கு' என்று கர்வமாக எண்ணிக் கொண்டாள் அபயாம் பாள்.

"சொல்றேன்னு பயப்படாதே... அவ னோட குடும்பம் நடத்தறது கஷ்டமில்லே. ரொம்ப அலுப்பாச்சுன்னா நேரா கிளம்பி இங்கே மூலங்குடிக்கு வந்துடு. நான் பார்த்துக்கறேன் உன்னை."

அபயாம்பாள் சிரித்தாள். "ஆறு மாசம் கழிச்சு நீங்க அங்க வாங்கோ - மெட் ராசுக்கு... உங்க பிள்ளையான்னு ஆச்சர்யப் படுவேள். இந்த அபயாம்பாள் யாருன்னு அப்ப தெரியும்."

அபயாம்பாள் யாருமில்லை என்றாகிப் போனது.

ஒரு சக ஜீவன் என்பதற்கு மேலாக எந்த சிறப்புறவும் கொண்டாடாத மனிதனுடன் அவள் வாழ்க்கை நடத்த வேண்டியிருந்தது.

உயிர், உடல், உணர்வு என்று வகுக்க முடியாதபடிதான் தன்னை ஒப்படைத்தாள் அபயாம்பாள். ஆனால் பெற்றுக் கொண் டவனின் கரங்கள் சலனமற்றிருந்தன. எந்தப் பரவசமும் அநாவசியம் என்பது போல; உன் தேவைகளைப் பூர்த்தி செய்வது வெறும் கடமை என்பதாக!

இந்த இடைவெளி அபயாம்பாளுக்குப் புதிராயிருந்தது. எப்போதுமே திறந்திருக்கும் கதவினுள் யார் வேண்டுமானாலும் நுழைய லாம். அது ஓர் அழகுதான். ஆனால் அவள் விழைந்தது சிறப்பிடம். சில சமயங்களி லேனும் தன்னைத் தவிர மற்றவர்களுக்கு அக் கதவுகள் மூடப்பட வேண்டும். ராமன் யாருக்குமே கதவுகளைத் திறக்க வில்லை என்பது எப்படி ஆறுதலளிக்க முடியும்?

எந்த மொழியிலும் உணர்த்த இயலாத தனிமை அவளைத் தொடர்ந்து வருத்தியது.

நான் அழகா? எப்படி? என்னைப் பிடித் திருக்கிறதா? - கேட்டு கேட்டு விடைபெற - முயன்று கொச்சைப்பட்டுப் போன கேள்விகள்.

இத்தனைக்கும் அழகுணர்ச்சி அற்ற வனில்லை ராமன். ஒரு ராகத்தைப் பிடித்துக் கொண்டானானால் மேய்ச்சலுக்குப் போன பசுமாடு மாதிரி சுவைத்துப் பாடுவான். அத்தனை அலைதல் திரிதலிலும் ஒரு சொட்டுக்கூட அழகற்றிருக்காது.

அபயாம்பாள் இந்த ஆற்றலை வியக்காத நாளில்லை. அந்த சுவை நுகர்ச்சியை வாழ்க் கையின் இதர பரிமாணங்களில் அவன் கைக் கொள்ளவில்லையே என்று வருந்தாத நொடியுமில்லை.

ஒரு குழந்தை பிறந்தால் அவன் மாறக் கூடும். தன்னுள்ளும் அமைதி பிறக்கும் என்று நம்பினாள். சாந்தி என்று பெயரிட் டதும் அதைக் கருதித்தான்.

சாந்தி பிறந்ததாலேயே அபயம் ராமனை வழிக்குக் கொண்டு வந்து விட்டதாக உலகம் ஏமாந்திருந்தது.

அபயாம்பாள் புத்திசாலி. தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்ள அவள் தயாராயில்லை.

அவள் வாழ்க்கையில் இன்னொரு ஜீவன் புகுந்திருக்கிறது. இப்போதைக்குச் சகலத் தையும் பகிர்ந்து நினைக்கும் ஜீவன். தற் சமயம் அப்பாவின் அருகே பழைய துப் பட்டியில் பாதுகாப்பாக உறங்கும் ஜீவன்.

சொல்லுவதற்கில்லை... பத்து வயதாகும் போது, இதுவும் மோட்டு வளையையோ முழு நிலவையோ பார்த்து, ஜன்ம ஜன் மாந்திரத்துக் கேள்விகளுக்கெல்லாம்

பதிலுணர்ந்து...

அபயாம்பாளுக்கு அச்சத்தையும் மீறி கொஞ்சம் சிரிப்பு வந்தது. உள்ளுணர்வின் உந்துதலால் அவளை ஏறிட்டுப் பார்த்தான் ராமன்.

"என்ன சிரிக்கறே...?"

எதிர்பார்க்கவில்லை அபயாம்பாள்.

அந்தக் கேள்வியே மிக மிக அதிகம். அவள் அந்தரங்கத்தை அணுகப் பார்க்கும் சின்ன அசைவு அவனிடமிருந்து வெளிப் பட்டிருக்கிறது.

"யோசிச்சேன்..."

"என்னன்னு...?"

"பத்து வயசானா, சாந்தி எப்படியிருப் பான்னு யோசிச்சேன்... பயமாயிருந்தது!"

"எதுக்கு பயப்படணும்? அபயாம் பான்னு பெயர் வைச்சிருக்கா உனக்கு..."

என்ன பதில் சொல்வது...? பயமற்றவர் களுக்கு பயம் புரியாது. வியர்வை முத் துக்கள் அவள் நெற்றியில் பூத்தன. பெரிதாக விம்மி அழ வேண்டும் போலிருந்தது.

அவன் காகிதங்களை அடுக்கியபடி மெதுவாகச் சொன்னான்:

"நாளையிலேருந்து டியூஷனுக்கு ஒரு பையன் வருவான். சங்கரன். கச்சேரி சம்பாத்தியத்துக்கு மேலே ஃபீஸ் வந்தால் செலவுக்கு சௌகரியம்னு பார்த்தேன். உனக்கு ஒண்ணும் சிரமமில்லையே...?"

இதிலொன்றும் குறைவேயில்லை! புறத் தேவைகளை கவனித்துக் கொள்வதில் அவன் வழுவியதில்லை. வீட்டு நிர்வாகம் அவள் பொறுப்பு. அதில் அவளைக் கேட் காமல் அவன் மாற்றங்கள் செய்வதில்லை. 'சிரமமில்லையே...?' என்று அனுமதி கேட்பது அந்த மரியாதையில்தான்.

யாருக்கு வேண்டும் இந்த மரியாதை! கொண்டு உடைப்பில் போடுங்கள்!

"வரட்டுமே!" என்றாள் அபயாம்பாள். அலுப்பை மறைத்துக்கொண்டு. "பேர் என்ன சொன்னேள்...?"

"சங்கரன்."

**ப**தினைந்து வயதிருக்கும். ராமனைப் பிரதியெடுத்தது போல் பாடினான் சங்கரன். நுணுக்கமான நெளிவு சுளிவுகளை முயற்சி யின்றி கிரஹித்துக் கொண்டான்.

குரலின் யௌவனத்தை மட்டும் நீக்கி விட்டால் ராமனே பாடுவதாகத்தான் தோன்றும்.

அதனினும் ஆச்சர்யம் அவன் ஏகாக்கிர சித்தம். பதினைந்தாவது வயதில் ராமன் இப் படித்தான் இருந்திருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள் அபயாம் பாள்.

மின்வெட்டில் வியர்த்துக் களைத்தாலும் சரி.

வாசலில் கலவை இயந்திரம் கரகரக்க சாலை போடும் வேலை நடந்தாலும் சரி.

சாந்தி தவழ்ந்து வந்து அவன் அருகில் சட்டென்று உட்கார்ந்து மெதுவாக மடியைத் தொட்டுக் கூப்பிட்டாலும் சரி...

சங்கரன் பாடிக் கொண்டேயிருந் தான்.

அப்படியொருமுறை தவழ்ந்துபோன சாந்தியைத் தூக்கியபோது கவனித்தாள் அபயாம்பாள்.

சங்கரன் கண் மூடிப் பாடிக் கொண்டே யிருந்தான்.

---

**ச**மீப காலமாக இண்டர்நெட்டில், சர்வதேச அரட்டை அரங்கம் என்ற புதுமை இளைஞர்களிடையே ஜுர வேகத்தில் பரவி வருகிறது. பொழுது போகாத போது கிடைத்தவர்களுடன் தகவல் பரிமாறிக் கொள்கிறார்கள்.

குறிப்பிட்ட துறை பற்றியோ அல்லது மனம் போன போக்கில் எல்லாவற்றையுமோ அலசுகிறார்கள். சிறிய மானிட்டர் திரையில் சுருக்கமாகத் தகவலைப் பதிக்க இவர்களிடையே ஒரு 'நெட் ஷார்ட்ஹேண்ட்' முறையே உருவாகிறது. (உதாரணமாக, **FYI** = **(for your information)** உங்கள் தகவலுக்கு. = என்றால் **(I agree)** இதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஒருவர் ஒரு ஜோக் சொன்னால் மற்றவர் அதை எப்படி ரசித்தார் என்பதற்குச் சில சந்தேகக்குறிகள்: **s** = **(smile)** புன்முறுவல். **ESE** **(Ear to ear smile)** = காதுகள் வரை உதடு விரிய புன்னகை (மிக ரசித்தேன்). **LL** = **(Loud laughter)** வாய் விட்டுச் சிரித்தேன். ⩓ = ஐயே! இது ஒரு ஜோக்கா? கோமாளித்தனமாக இருக்கிறது. **O** = கொட்டாவிதான் வருகிறது!

நன்றி: ஹிந்து

**— அ. ஷண்முகசுந்தரம்.**

## குவியப் போகிறது போலீஸ்!

கயானாவில் மேற்கிந்திய அணியின் பந்து வீச்சாளர் கேய்த் ஆர்த்தர்டனும், ஜார்ஜ் டௌனில், ஆஸ்திரேலிய பாட்ஸ்மென் ஸ்டீவ் வாகும் அனுபவித்த அவஸ்தை கொஞ்ச நஞ்சமல்ல. மைதானத்துக்குள் பாய்ந்து வந்த தீவிர விசிறிகள் அவர்களை முற்றுகையிட்டு, 'பேட்'டைப் பிடுங்கி மகிழ்ச்சியில் என்ன செய்கிறோம் என்று அறியாமல் அவர்களைக் குதறி எடுக்கும் முயற்சியில் ஈடுபட, மீண்டு வருவதற்குள் அவர்களுக்கு போதும் போதும் என்றாகி விட்டது.



• 1983 - உலகக் கோப்பையின்போது மைதானத்திற்கு வந்த ரசிகர்கள்.

உலகக் கோப்பை என்றால் ரசிகர்களின் உற்சாக ஜுரம் உச்சத்துக்கு எகிறுமே. அப்போதும் இது போன்ற அநாகரிக நிகழ்ச்சிகள் நடக்காதென்பது என்ன நிச்சயம்? இந்தக் கேள்வியை பல அணிகளின் பிரதிநிதிகள் எழுப்ப, உலகக் கோப்பைப் பந்தயங்களின் மானேஜரான மைக்கேல் ப்ரௌனிங் என்பவர், இங்கிலாந்து போலீஸின் பெரும்பகுதி கிரிக்கெட் மைதானங்களில் குவிக்கப்பட்டிருக்கும் என்று உறுதி கூறியிருக்கிறார்.

தவிர இங்கிலாந்து நாட்டின் வரலாறு காணாத வகையில் வேறொரு கட்டுப்பாட்டையும் கொண்டு வரப் போகிறாராம். மொத்தம் இருபத்தியொரு மைதானங்களில் உலகக் கோப்பை பந்தயங்கள் நடக்கப் போகின்றன. இவற்றில் ஏழு மைதானங்களைத் தவிர, மற்றவற்றுக்குச் செல்லும் பார்வையாளர்கள் எந்த வித மதுபானத்தையும் எடுத்துச் செல்ல அனுமதியில்லை. (மது மயக்கத்தில் விபரீதமாக நடந்து கொள்ளும் வாய்ப்பு மேலும் அதிகம் என்பதால்) விதிவிலக்கு தரப்பட்டிருக்கும் ஏழு ஸ்டேடியங்களில்கூட, பந்தய நாட்களின்போது, ஒருவருக்கு அதிக பட்சம் நாலு கேன் பீர் எடுத்துச் செல்ல மட்டுமே அனுமதி உண்டு!

– குல்லு

எதிரே ராமன் விழி மலர்ந்து கனிவுடன் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

பாடலும் பார்வையும் ஒரு புள்ளியில் இணைந்திருந்தன.

ஏகாந்தம் தகர்ந்த ராமனாக அவன் ஆனந்திப்பதைக் கண்டாள் அபயாம்பாள். காட்சியின் காவிய அழகைக் கிழித்துக் கொண்டு ஒரு பொறாமைப் பொறி புறப்பட்டுப் போய் அவளுக்குள் தீ மூட்டியது.

''இன்னைக்கு கிளாஸ் போதும்...'' என்றாள்.

"ஏன் நடுவிலே வந்து நிறுத்திட்டே?" - ராமனுக்குச் சாப்பாடு செல்லவில்லை.

அபயாம்பாள் குற்ற உணர்வு மறைத்து அவனைப் பார்த்தாள்.

"உங்கம்மா சொன்ன மாதிரி நீங்க ஒண்ணும் ஏகாந்த ராமனில்லே..."

"என்ன...?"

"அந்தப் பிள்ளை உங்களை மாதிரியே பாடறதுன்னவுடனே ஆடிப் போயிட்டேளில்லையா...? உங்க ஏகாந்த சாம்ராஜ்யத்துக்குள்ளே அவனைக் கை கோத்து அழைச்சுண்டுட்டேள்... எங்களாலேயெல்லாம் அப்படிப் பாட முடியாது."

அவள் சிந்தனைச் செறிவை அவன் எதிர்பார்க்கவில்லை. அடர்ந்த மௌனம் தொடர்ந்தது.

எழுந்து போய் கை கழுவினான் ராமன். அழுது கொண்டிருந்தவளின் கண்ணைத் துடைத்து விட்டு மெதுவாகப் பேசினான்.

"தப்பு அபயா! சங்கரனோட நான் கை கோத்துக்கலை. நான் நினைச்சாலும் அது முடியாது. யார் நினைச்சாலும் முடியாது. அவனோட ஏகாந்தத்தை நான் எட்டயிருந்து பார்த்து சந்தோஷப்பட்டேன். அவ்வளவுதான்."

அவன் குரலில் ஒரு துளி ஏக்கம் தொனிக்கறதோ...? அபயாம்பாள் அவன் முகத்தை ஆழ்ந்து கவனித்தாள்.

ராமன் சின்னதாகப் பெருமூச்சு விட்டான்.

அவள் பயம் இலேசாக விலக ஆரம்பித்தது.

# பொன்னியின் செல்வன்

பன்னிரண்டாம் அத்தியாயம்

## "தீயிலே தள்ளு!"

கொல்லன் சிறிது நேரம் தன் வேலையிலேயே கவனமாயிருந்தான். வந்தியத்தேவன் இரண்டு மூன்று தடவை கனைத்த பிறகு நிமிர்ந்து பார்த்தான்.

"யார், அப்பனே, நீ! உனக்கு என்ன வேண்டும்? வாள், வேல் ஏதாவது வேண்டுமா? வாளுக்கும் வேலுக்குந்தான் இப்போதெல்லாம் தேவையில்லாமல் போய் விட்டதே? நீ வாளுக்கு எங்கே வந்திருக்கப் போகிறாய்?" என்றான் கொல்லன்.

"என்ன ஐயா, இவ்வாறு சொல்கிறீர்? உம்முடைய கையில் வாளை வைத்து வேலை செய்துகொண்டே வாளுக்குத் தேவையில்லையென்கிறீரே?" என்றான் வந்தியத்தேவன்.

"இது ஏதோ அபூர்வமாக வந்த வேலை; பழைய வாளைச் செப்பனிடுவதற்காகக் கொண்டு வந்தார்கள். சில வருஷங்களுக்கு முன்னால் பாண்டிய நாட்டுப் போரும் வட பெண்ணைப் போரும் நடந்து கொண்டிருந்தபோது இந்தப் பட்டறையில் மலை மலையாக வேலும் வாளும் குவிந்திருக்கும். இலங்கை யுத்தம் ஆரம்பமான புதிதில்கூட ஆயுதங்களுக்குக் கிராக்கியிருந்தது. இப்போது வாளையும் வேலையும் கேட்பாரில்லை. பழைய வாள்களையும் வேல்களையும் என்னிடம் கொண்டு வந்து விற்பதற்காக வருகிறார்கள். நீகூட அதற்

அமரர் கல்கி




கல்கி கலெக்ஷன்

காகத்தான் ஒருவேளை வந்தாயா, என்ன?"

"இல்லை; இல்லை! இன்னும் சில காலத்துக்கு எனக்கு வாள் தேவையாயிருக்கிறது. ஒப்புக்கொண்ட வேலையை முடித்துவிட்டால், அப்புறம் கையில் தாளத்தை எடுத்துக்கொண்டு தேவாரம் பாடிக்கொண்டு சிவ ஸ்தல யாத்திரை புறப்படுவேன். அப்போது வேணுமானால் என் ஆயுதங்களை உம்மிடமே கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன்."

"பின்னே, இப்போது எதற்காக என்னைத் தேடி வந்தாய்?"

"என்னுடைய குதிரையைக் காட்டிலும் மேட்டிலும் விட்டுக்கொண்டு வந்தேன். இன்னும் வெகு தூரம் போயாக வேண்டும். குதிரைகளின் கால் குளம்புக்கு இரும்புக் கவசம் போடுவதாமே? அது உம்மால் முடியுமா?"

"ஆம்; அரேபியா தேசத்தில் அப்படித்தான் வழக்கம். இங்கேயும் சிலர் இப்போது குதிரைக் குளம்புக்கு இரும்பு லாடம் அடிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். எனக்கும் கொஞ்சம் அந்த வேலையில் பழக்கம் உண்டு."

"என் குதிரைக்கு லாடம் போட்டுத் தருவீரா?"

"அதற்கு நேரம் அதிகம் பிடிக்கும். கையில் உள்ள வேலையை முடித்துவிட்டுத்தான் உன் வேலையை எடுத்துக் கொள்ள முடியும்.

வந்தியத்தேவன் யோசித்தான். அவனுக்கும் களைப்பாயிருந்தது. குதிரையும் கஷ்டப்பட்டுப் போயிருந்தது. சிறிது நேரம் காத்திருந்து அதன் குளம்புகளுக்குக் கவசம் போட்டுக்கொண்டே போவது என்று முடிவு செய்தான்.

"கைவேலை முடியும் வரையில் காத்திருக்கிறேன். அப்புறமாவது உடனே செய்து தருவீர் அல்லவா?

"அதற்கென்ன, ஆகட்டும்!"

வந்தியத்தேவன் சற்று நேரம் கொல்லன் காய்ச்சிச் செப்பனிட்ட வாளையே பார்த்துக்கொண்டிருந்தான்.

"இந்த வாள் அபூர்வமான வேலைப்பாடு அமைந்ததாயிருக்கிறதே? இராஜ குலத்து வாள் மாதிரி அல்லவா இருக்கிறது? இது யாருடைய வாள்?" என்றான்

"அப்பனே! இங்கிருந்து கொஞ்ச தூரத்தில் அரிச்சந்திர நதி என்று ஓர் ஆறு ஓடுகிறது."

"நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். அதனால் என்ன?"

"நான் அரிச்சந்திர நதிக்குச் சென்று அடிக்கடி தலைமுழுகி வருவது வழக்கம்."

"மிக்க நல்ல காரியம். போகும் இடத்துக்குப் புண்ணியம்."

"ஆகையால் கூடிய வரையில் மெய்யே சொல்லுவதென்றும் பொய் சொல்லுவதில்லையென்றும் வைத்துக் கொண்டிருக்கிறேன்."

"அதற்கு என்ன ஆட்சேபம்? உம்மை யார் பொய் சொல்லச் சொன்னது? நான் சொல்லவில்லையே?"

"நீ என்னை இந்த வாளைப் பற்றி ஒன்றும் கேள்வி கேட்காமலிருந்தால் நானும் பொய் சொல்லாமலிருக்கலாம்!"

ஓஹோ! அப்படியா சமாசாரம்? - என்று வந்தியத்தேவன் மனத்திற்குள் எண்ணிக்கொண்டான்.

"நான் கேள்வியும் கேட்கவில்லை. நீர் விரத பங்கமும் செய்ய வேண்டாம். கை வேலையைச் சீக்கிரம் முடித்துவிட்டு என் வேலையை எடுத்துக்கொண்டு செய்து கொடுத்தால் போதும்!"

கொல்லன் மௌனமாகத் தன் வேலையில் கவனம் செலுத்தினான்.

வந்தியத்தேவன் வாளைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அதன் அடிப்பகுதியில், பிடியின் பக்கத்தில், மீன் உருவம் பொறிக்கப் பட்டிருப்பதைப் பார்த்து வியந்தான். மீன் உருவம் எதற்காக? அதற்கு ஏதேனும் பொருள் உண்டா! வெறும் அலங்காரத் துக்குத்தானா?

கொல்லன் அந்த மீன் உருவம் உள்ள இடத்தை மறுபடியும் தீயில் காட்டிக் காய்ச்சி அதன் பேரில் சுத்தியால் அடித்தான். மீன் உருவம் தெரியாமல் மறைப்பது' தான் அவனுடைய நோக்கம் என்று தோன்றியது.

எதற்காக இந்தக் காரியம் என்று வல்லவரையன் யோசனை செய்தான். யோசனை செய்து கொண்டிருந்தபோதே, அவன் கண்கள் சுழலத் தொடங்கின. பல நாட்களாக அவனால் விரட்டியடிக்கப் பட்டு வந்த நித்திராதேவி இப்போது தன் மோக மாய வலையை அவன் பேரில் பலமாக வீச ஆரம்பித்தாள். வந்தியத்தேவன் அதிலிருந்து தப்ப முடியவில்லை. சிறிது நேரம் உட்கார்ந்தபடியே ஆடி விழுந்தான். பிறகு அப்படியே, கொல்லன் உலைக்குப் பக்கத்தில், படுத்துத் தூங்கிப் போனான்.

தூக்கத்தில் வல்லவரையன் பல பயங்கரக் கனவுகள் கண்டான். கத்தியைப் பற்றியே

ஒரு கனவு ... ஒருவன் வந்து கொல்லனிடம் கத்தியைத் திரும்பக் கேட்டான். கொல்லன் கொடுத்தான். "என்ன கூலி வேண்டும்?" என்று அவன் கேட்டான். "கூலி ஒன்றும் வேண்டாம். பழுவூர் இளைய ராணிக்கு நான் அளிக்கும் காணிக்கையாயிருக்கட்டும்" என்றான் கொல்லன்.

"ஜாக்கிரதை! இந்த விஷயம் யாருக்கும் தெரியக் கூடாது. முக்கியமாக, பழுவூர் இளையராணியின் பெயரைச் சொல்லவே சொல்லாதே! சொன்னால் என்ன செய்வோம் தெரியுமா...?

"நான் எதற்காக ஐயா, பழுவூர் ராணியின் பெயரைச் சொல்லப் போகிறேன்? ஒருவரிடமும் சொல்ல மாட்டேன்."

"இதோ இங்கே யாரோ ஒரு வாலிபன் படுத்திருக்கிறானே! சத்தம் போட்டுப் பேசுகிறாயே?"

"அவன் ஆழ்ந்த நித்திரையில் இருக்கிறான். இடி இடித்தாலும் அவனுக்குக் காது கேட்காது."

"ஒருவேளை அவனுக்குத் தெரிந்து விட்டது என்று தோன்றினால், இந்த உலைக்களத்தின் நெருப்பில் அவனைத் தூக்கிப் போட்டு வேலை தீர்த்து விடு!"

இந்தச் சம்பாஷணையின் முடிவில் கொல்லனும் கத்திக்கு உடையவனும் வந்தியத்தேவனை இழுத்துப் போய் உலைக்களத்தில் போடப் போவதாக வந்தியத்தேவன் கனவு கண்டான். பிறகு அந்தக் கனவு மாறியது.

வந்தியத்தேவனை யம தூதர்கள் நரகத்துக்கு அழைத்துச் சென்றார்கள். யமதர்மராஜன் பூலோகத்தில் வந்தியத்தேவனுடைய நடவடிக்கைகளைப் பற்றி விசாரித்தான். "பொய் சொல்லுவதில் இவன் நிபுணன்; எத்தனை பொய்தான் சொல்லியிருக்கிறான் என்பதற்கு அளவே கிடையாது" என்றான் சித்திரகுப்தன், கையிலிருந்த ஓலையைப் பார்த்துவிட்டு.

"இல்லை, இல்லை! எல்லாம் சக்கரவர்த்தி குடும்பத்தாரின் சேவையிலேதான் சொன்னேன். எடுத்த காரியத்தைச் செய்து முடிப்பதற்காகச் சில பொய்களைச் சொன்னேன்."

"எதற்காகச் சொல்லியிருந்தாலும் பொய் பொய்தான். தள்ளுங்கள் இவனை நரகத்தின் பெரிய நெருப்புக் குழியில்!" என்றான் யமன். உடனே நரகத்தின் உட்புறத்திலிருந்து நூறாயிரம் குரல்கள் பயங்கரமாக ஊளையிட்டன.

யம தூதர்கள் அவனை அழைத்துப் போனார்கள். பயங்கரமாகக் கொழுந்து விட்டெரிந்த பெரு நெருப்பில் அவனைத் தள்ளுவதற்கு ஆயத்தம் செய்தார்கள். அந்த யம தூதர்கள் இருவரையும் பார்த்தால், முகங்கள் பழுவேட்டரையர்களின் முகங்களைப் போலிருந்தன. அதைப் பற்றி அவன் திடுக்கிட்டு நிற்கையில் குந்தவை தேவி அங்கே வந்தாள். "என்னுடைய கட்டளையை நிறைவேற்றுவதற்காகவே அவர் பொய் சொன்னார். ஆகையால் அவருக்குப் பதிலாக என்னை நெருப்பிலே போடுங்கள்!" என்று கூறினாள்.

இந்தச் சமயத்தில் நந்தினி தேவியும் அங்கே எப்படியோ வந்து சேர்ந்தாள். "இரண்டு பேரையுமே சேர்த்து நெருப்பிலே போட்டு விடுங்கள்!" என்றாள் அந்தப் புண்ணியவதி. யம தூதர்கள் அவர்கள் இருவரையும் பிடித்து நெருப்பில் தள்ளப் போனார்கள். "ஐயோ! வேண்டாம்!" என்று வந்தியத்தேவன் அலறிக் கொண்டு திமிறினான்; கண் விழித்து எழுந்து உட்கார்ந்தான். கண்டது கனவு என்ற எண்ணம் ஆறுதல் கொடுத்தது. ஆனால் எல்லாம் உண்மையாக நடந்தது போலவே தோன்றியபடியால் அவன் உடம்பு இன்னும் நடுங்கிக் கொண்டிருந்தது.

சேச்சே! இனிமேல் எக்காரணத்துக்காகவும் பொய் சொல்லக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டான்.

"ரொம்ப நேரம் தூங்கிப் போய் விட்டேனா?" என்று கொல்லனைப் பார்த்துக் கேட்டான்.

"அப்படி ரொம்ப நேரம் ஆகிவிடவில்லை. இரண்டு ஜாமம்தான், அப்பனே! நீ கும்பகர்ணன் வம்சத்தில் வந்தவனோ? பட்டப் பகலில் இப்படித் தூங்குகிறாயே? இரவிலே எப்படித் தூங்க மாட்டாய்?" என்றான் கொல்லன்.

"கடவுளே! இரண்டு ஜாம நேரமா தூங்கி விட்டேன்? குதிரைக் குளம்புக்குக் கவசம் செய்தாகி விட்டதா?"

"இனிமேல்தான் செய்ய வேண்டும். ஆனால் உன்னைப் போன்ற தூங்கு மூஞ்சிக்கு அதனால் என்ன பயன்? நீ குதிரையையே பறி கொடுத்து விடுவாய்!

வந்தியத்தேவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவன் மனத்தில் ஒரு சந்தேகம் உதித்தது. எழுந்து ஓடிப் போய் வாசற்பக்கம் பார்த்தான். குதிரையை நிறுத்திய இடத்தில் அதைக் காணோம்.

"ஐயோ! குதிரை எங்கே?" என்று இரைச்சல் போட்டுக்கொண்டே உடைவாளின் பிடியில் கை வைத்தான்.

வந்தியத்தேவன் குதிரை அருகில் சென்று அதைத் தடவிக் கொடுத்துக் கொண்டு நின்றான்.

பையன் குதிரையின் குளம்புக்கு அளவு எடுத்தான்.

"இதை யார் இங்கே கொண்டு வந்து கட்டினார்கள்?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"நான்தான் கட்டினேன்."



"பயப்படாதே! உன் குதிரை பத்திரமாயிருக்கிறது. கொல்லைப்புறத்தில் போய்ப் பார்!"

வந்தியத்தேவன் கொல்லைப்புறம் சென்று பார்த்தான். அங்கே மூன்று பக்கம் அடைக்கப்பட்ட கீத்துக் கொட்டகையில் அவனுடைய குதிரை நின்று கொண்டிருந்தது. கொல்லன் உலைக்களம் ஊதிய சிறு பிள்ளை அதன் வாயில் புல் கொடுத்துக் கொண்டிருந்தான். வந்தியத்தேவனைப் பார்த்ததும் குதிரை உடலைச் சிலிர்த்துக் கொண்டு கனைத்தது.

"ஐயா! இங்கே வந்து கொஞ்சம் உங்கள் குதிரையைப் பார்த்துக் கொள்ளுங்கள். இதன் குளம்புகளுக்கு அளவு எடுக்க வேண்டும்!" என்றான் பையன்.



வந்தியத்தேவனுக்குப் பழைய ஞாபகம், - திருநாராயணபுரத்து ஞாபகம், - வந்தது. தான் செய்த தவறை எண்ணி வெட்கம் அடைந்தான். கொல்லனிடமும் அவன் மகனிடமும் மனத்திற்குள் நன்றி உணர்ச்சி கொண்டான்.

குதிரையின் குளம்புக்கு அளவு எடுத்துக்கொண்டதும் இருவரும் உலைக்களத்துக்குள் வந்தார்கள்.

கொல்லன் இரும்புத் துண்டை எடுத்துக் குளம்பைப் போல் வளைத்து வேலை செய்யத் தொடங்கினான்.

"என் குதிரையைக் காப்பாற்றிக் கொடுத்தீரே? அதற்காக மிக்க வந்தனம்" என்றான் வல்லவரையன்.

"என்னைத் தேடி வருகிறவர்களுடைய உடைமையை நான் காப்பாற்றிக் கொடுக்க வேண்டுமல்லவா? அது என் கடமை."

"பழுவேட்டரையர் பரிவாரம் இந்தப் பக்கம் போய் எத்தனை நேரமிருக்கும்?"

"எதற்காக?"

"அப்பா கட்டச் சொன்னார்."

"அது எதற்காக?"

"இந்த ஊர் வழியாகச் சற்று முன்னால் பெரிய பழுவேட்டரையரும் அவர் பரிவாரங்களும் போனார்கள். குதிரையை வாசலில் பார்த்திருந்தால் கட்டாயம் கொண்டு போயிருப்பார்கள்."

"இரண்டு நாழிகைக்கு மேலேயிருக்கும். அவ்வளவு ஆர்ப்பாட்டத்துக்கும் நீ தூங்கிக் கொண்டிருந்தாயே, அதை நினைத்தால்தான் எனக்கு வியப்பாக இருக்கிறது."

"நான்தான் தூங்கிப் போய்விட்டேன். இத்தனை நேரம் நீர் வீணாக்கி விட்டீரே? அவர்கள் போன பிற்பாடாவது வேலையை உடனே ஆரம்பித்திருக்கலாமே?"

"எப்படி ஆரம்பிப்பது? அவர்கள் கொண்டு வந்த செய்தியைக் கேட்ட பிறகு யாருக்கு வேலை செய்ய மனம் வரும்? உனக்காக மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு இதை நான் செய்கிறேன். எங்கிருந்து அப்பனே, நீ வருகிறாய்?"

அவர்கள் கொண்டு வந்த செய்தி என்னவாயிருக்கும் என்று யோசித்துக் கொண்டே வந்தியத்தேவன், "இலங்கையிலிருந்து வருகிறேன்" என்றான்.

கொல்லன் அவனுடைய முகத்தை ஏற இறங்கப் பார்த்தான். பிறகு குரலைத் தாழ்த்திக் கொண்டு, "இலங்கையில் இருந்தபோது இளவரசர் அருள்மொழி வர்மரைப் பார்த்தாயா?" என்றான்.

உண்மையே சொல்லுவதென்று சற்று முன்பு சங்கல்பம் செய்து கொண்டிருந்த வந்தியத்தேவன், "பார்த்தேன்" என்றான்.

"கடைசியாக அவரை நீ எப்போது பார்த்தாய்?"

"இன்று காலையில் பார்த்தேன்."

கொல்லன் வந்தியத்தேவனைக் கோபமாய் நோக்கினான்.

"விளையாடுகிறாயா, தம்பி!"

"இல்லை, ஐயா, உண்மையைத்தான் சொன்னேன்."

"இளவரசர் இப்போது எங்கேயிருக்கிறார் என்று கூடச் சொல்வாய் போலிருக்கிறதே!"

"ஓ! கேட்டால் சொல்லுவேன்!"

"இளவரசர் எங்கே இருக்கிறார்? சொல் பார்க்கலாம்."

"நாகைப்பட்டிடம் சூடாமணி விஹாரத்தில் இருக்கிறார்!"

"அப்பனே! நானும் எத்தனையோ பொய்யர்களைப் பார்த்திருக்கிறேன். உன்னைப் போல் கட்டுக்கதை புனைந்துரைக்கக் கூடியவர்களைப் பார்த்ததேயில்லை."

வந்தியத்தேவன் தன் மனத்திற்குள் சிரித்துக் கொண்டான். புனைந்து கூறும் பொய்யை நம்புவதற்கு எல்லோரும் ஆயத்தமாயிருக்கிறார்கள். உண்மையைச் சொன்னால் நம்ப மறுக்கிறார்கள். இது நமது ஜாதக விசேஷம் போலும்!"

"தம்பி! நீ இலங்கையிலிருந்து எப்போது புறப்பட்டாய்?"

"நாலு நாளைக்கு முன்னால்!"

"அதனாலேதான் உனக்குச் செய்தி தெரியவில்லை."

"என்ன செய்தி ஐயா!"

"பொன்னியின் செல்வரைக் கடல் கொண்டு விட்டது என்ற செய்திதான்!"

வந்தியத்தேவன் கஷ்டப்பட்டுத் திடுக்கிடுவதுபோல் பாசாங்கு செய்தான்.

"ஐயோ! அப்படியா? யார் சொன்னார்கள்!"

"நேற்று முதல் இங்கெல்லாம் அப்படிப் பேச்சாயிருந்தது. இன்றைக்குப் பழுவேட்டரையர் இவ்வழியாகப் போனபோது ஊர்த்தலைவர்கள் அவரைக் கேட்டார்கள். அந்தச் செய்தி உண்மைதான் என்று பழுவேட்டரையர் கூறினார். அந்தச் சண்டாளப் பாவியின் தலையில் இடி விழவில்லையே!"

"ஏன் அந்தக் கிழவரை வைகிறாய்?"

"அவராலேதான் இது நடந்திருக்கிறது. ஏதோ சூழ்ச்சி செய்து இளவரசரை அவரே கடலில் மூழ்க அடித்து விட்டார் என்று ஊரார் சொல்லுகிறார்கள். அதனால் அவருக்காக ஏற்பாடு செய்திருந்த உபசாரங்களையும் நிறுத்தி விட்டார்கள்."

"இளவரசர் மீது இந்த ஊராருக்கு அவ்வளவு பிரியமா?"

"கேட்க வேண்டுமா? ஊர் மக்கள் அவ்வளவு பேரும் இப்போது கண்ணீரும் கம்பலையுமாயிருக்கிறார்கள். இந்த ஊரார் மட்டும் என்ன? சோழ நாடு முழுவதும் ஓலமிட்டு அழப் போகிறது. பழுவேட்டரையர்களைச் சபிக்கப் போகிறது. ஏற்கெனவே சக்கரவர்த்தி நோய்வாய்ப்பட்டிருக்கிறார். இந்தச் செய்தி கேட்டு என்ன பாடு படுவாரோ தெரியாது. இன்னும் என்னவெல்லாம் விபரீதங்கள் நடக்குமோ? சில நாளாக வானத்தில் தூமகேது தோன்றி வருகிறதே? அதற்கு ஏதேனும் நடந்துதானே தீர வேண்டும்?"

நடக்கக் கூடிய விபரீதங்கள் என்னவாயிருக்கக் கூடும் என்று வந்தியத்தேவன் எண்ணிப் பார்த்தான். தான் கூறியதை இந்தக் கொல்லன் நம்பாமலிருந்ததே நல்லதாய்ப் போயிற்று. தான் இனி மேல் பொய் சொல்லாவிட்டாலும் இளவரசரைப் பற்றிய உண்மையைச் சொல்ல வேண்டிய அவசியமும் இல்லை. இளைய பிராட்டி ஏதோ முக்கிய காரணத்திற்காகத்தானே அவரைச் சூடாமணி

விஹாரத்தில் இருக்கச் சொல்லியிருக்கிறார்! இளவரசியைக் கண்டு பேசிய பிறகு, அவர் சொல்லும் யோசனைப்படி நடந்து கொள்ள வேண்டும்.

"தம்பி! என்ன யோசிக்கிறாய்?" என்றான் கொல்லன்.

"நடுக்கடலில் சுழற்காற்றில் நானும் அகப்பட்டுக் கொண்டேன். கடவுள் அருளால் நான் தப்பிப் பிழைத்ததை நினைத்துப் பார்த்துக் கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன்."

"கடவுள் அருள் என்பது ஒன்று இருக்கிறதா, என்ன?"

"பெரியவரே! அது என்ன அப்படிச் சொல்லுகிறீர்?"

"கடவுள் அருள் என்பதாக ஒன்று இருந்தால் பழுவேட்டரையர்களின் அக்கிரமங்கள் இன்னும் நடந்து கொண்டிருக்குமா? பொன்னியின் செல்வர் கடலில் மூழ்கியிருப்பாரா?"



"பெரியவரே! பழுவேட்டரையர்கள் அதிகாரத்தில் உள்ளவர்கள், அவர்களைப் பற்றி இப்படியெல்லாம் பேசலாமா? யார் காதிலாவது விழுந்தால்? கொஞ்சம் ஜாக்கிரதையாயிருங்கள்."

"என்னை விட நீதான் ஜாக்கிரதையா யிருக்க வேண்டும். நானாவது விழித்துக் கொண்டிருக்கும்போது பேசுகிறேன். நீ தூக்கத்தில் உளறுகிறாய்!"

"ஐயையோ! என்ன உளறினேன்?"

"பழுவேட்டரையர்களை யமதூதர்கள் என்று சொன்னாய். பழுவூர் இளைய ராணியைப் பெண் பேய் என்று சொன்னாய். நீ சொன்னது என்னமோ உண்மை தான். ஆனால் என்னைத் தவிர வேறு யார் காதிலாவது விழுந்தால் உன் கதி என்ன? நீ அப்படிப் பிதற்றிக் கொண்டிருக்கிற சமயத்திலேதான் இந்தச் சாலை வழியாகப் பழுவேட்டரையர்களின் பரிவாரங்கள் போயின. எனக்கு ரொம்பத் திகிலாய்ப் போய்விட்டது."

"நீர் என்ன செய்தீர்?"

"வாசற்பக்கம் போய் நின்று இந்த உலைக்களத்தின் கதவையும் சாத்திக் கொண்டேன். அதற்கும் முன்னால் உன் குதிரையைக் கொல்லைப்புறம் கொண்டு போய்க் கட்டியாயிற்று."

"தூக்கத்தில் நான் இன்னும் ஏதாவது உளறினேனா?"

"உளறலுக்குக் குறைவேயில்லை."

"ஐயோ! என்ன உளறினேன்?"

"நீ இளவரசரைப் பழையாறைக்கு வரும்படி வற்புறுத்தினாய். அவர் பழுவேட்டரையர் கட்டளைப்படி சிறைப் படுவேன் என்றார். இன்னும் என்னவெல்லாமோ சொன்னாய், தம்பி! பழையாறை இளையபிராட்டியைக் குறித்துக்கூட ஏதேதோ சொன்னாய், ஜாக்கிரதை, அப்பனே, ஜாக்கிரதை!"

வந்தியத்தேவன் வெட்கித் தலை குனிந்தான். இளையபிராட்டியைக் குறித்து அனுசிதமாக ஏதாவது பேசி விட்டோமா என்று பீதி அடைந்தான். இனிமேல் தூங்குவதாயிருந்தால் தனி அறையில் கதவைத் தாளிட்டுக் கொண்டு தூங்க வேண்டும். அல்லது மனித சஞ்சாரம் இல்லாத காட்டிலோ, பாலைவனத்திலோ, மலைக் குகையிலோ தூங்க வேண்டும்.

"தம்பி! சுழற் காற்றில் நீ எப்படி அகப்பட்டுக் கொண்டாய்? எப்படித் தப்பிப் பிழைத்தாய்?"

"நான் ஏறி வந்த கப்பல் இடி விழுந்து கடலில் மூழ்கி விட்டது. முறிந்த பாய் மரத்தைப் பிடித்துக்கொண்டு வெகு நேரம் மிதந்தேன். பிறகு ஓடக்காரப் பெண் ஒருத்தியின் உதவியால் தப்பிக் கரையேறினேன்."

"இளவரசரும் ஒருவேளை அவ்விதம் தப்பிப் பிழைத்திருக்கலாம் அல்லவா?"

"கடவுள் சித்தமிருந்தால் தப்பிப் பிழைத்திருக்கலாம்."

"நேற்றிரவு நீ எங்கே தங்கினாய்?"

"கோடிக்கரையிலேதான். கடற்கரையோரத்தில் பழுவேட்டரையர் பரிவாரங்கள் ஒரே கூட்டமாயிருந்தது. ஆகையால் குழகர் கோவிலில் சிறிது நேரம் படுத்துத் தூங்கினேன். பொழுது விடிவதற்குள் புறப்பட்டு விட்டேன்."

"அதனால்தான் உனக்கு இளவரசர் செய்தி தெரியவில்லை போலிருக்கிறது."

"நீர் தெளிவுபடுத்தியதற்காக வந்தனம். ஐயா! நான் பழையாறைக்குக் கூடிய சீக்கிரம் போக வேண்டும். பழுவேட்டரையரின் பரிவாரத்திடம் சிக்காமல் போக வேண்டும். எந்த வழியாகப் போவது நல்லது?"

"பழுவேட்டரையர் தஞ்சாவூர் இராஜ பாட்டையில் போகிறார். நீ முல்லையாற்றங்கரையோடு போனால் பழையாறையை அடையலாம்."

"நீங்கள் கொஞ்சம் சீக்கிரமாகவே குதிரைக் குளம்புக்குக் கவசம் அடித்துக் கொடுத்தால் நல்லது."

"இதோ!" என்றான் கொல்லன்.

வளைத்துக் காய்ச்சியிருந்த இரும்பைச் சுத்தியினால் அடிக்கத் தொடங்கினான்.

"இது பெரிய பழுவேட்டரையருக்கு! இது சின்னப் பழுவேட்டரையருக்கு! இந்த அடி சம்புவரையருக்கு! இது மழவரையருக்கு!" என்று சொல்லிக்கொண்டே அடித்தான். இதிலிருந்து அந்தச் சிற்றரசர்கள் பேரில் நாட்டு மக்கள் எவ்வளவு கோபம் கொண்டிருக்கிறார்கள் என்பதை ஒருவாறு வந்தியத்தேவன் தெரிந்து கொண்டான்.

குதிரைக் குளம்புகளுக்கு லாடம் அடித்து முடிந்தது. செய்து கொடுத்த வேலைக்காகக் கொல்லனுக்குக் காசு தர வந்தியத்தேவன் யத்தனித்தான். கொல்லன் அதைப் பெற்றுக் கொள்ளுவதற்கு மறுத்து விட்டான்.

"நீ நல்ல பிள்ளை என்பதற்காகச் செய்து கொடுத்தேன். காசுக்காகச் செய்து தரவில்லை" என்றான்.

வந்தியத்தேவன் மறுபடியும் கொல்லனுக்கு நன்றி கூறி விட்டு விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டான்.

புறப்படும் சமயத்தில் கொல்லன், "தம்பி! பழையாறைக்கு நீ எதற்காகப் போகிறாய்?" என்று கேட்டான்.

"ஐயா! நீங்கள் என்னை அதைப் பற்றி ஒன்றும் கேட்காமலிருந்தால் நான் பொய் சொல்ல வேண்டிய அவசியமும் ஏற்படாது" என்றான் வல்லவரையன்.

கொல்லன் சிரித்துவிட்டு, "அப்பனே! நீ துரிதமாகக் கெட்டிக்காரன் ஆகி வருகிறாய்! தூங்குகிற போதும் இவ்வளவு ஜாக்கிரதையாயிரு!" என்று சொல்லி விடை கொடுத்து அனுப்பினான்.

வந்தியத்தேவன் மறுபடியும் பிரயாணம் தொடங்கியபோது சூரியன் அஸ்தமிக்கும் நேரமாகி விட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் அந்தி மயங்கி இருள் சூழ்ந்து வந்தது. இதற்குள் முல்லை யாற்றங்கரையை வல்லவரையன் பிடித்து விட்டான். அதற்குமேல் ஆற்றங்கரையோடு போக வேண்டியதுதான். வழி விசாரிக்க வேண்டிய அவசியம்கூடக் கிடையாது.

முன்னிருட்டு வேளைதான். ஆனால் வானத்தில் ஆயிரங்கோடி நட்சத்திரங்கள் ஒளிச்சுடர்களாக விளங்கின. முல்லை நதியின் கரைகளில் மரங்கள் அதிகம் இல்லை. சிறிய சிறிய புதர்கள்தான் இருந்தன. ஆகையால் வழி கண்டுபிடித்துப் போவதற்கு வேண்டிய வெளிச்சம் விண்மீன்கள் தந்தன.

வானத்தில் ஜொலித்த நட்சத்திரங்களோடு போட்டியிடுவது போல் ஆயிரக்கணக்கான மின்மினிப் பூச்சிகள் நதிக்கரைப் புதர்களைச் சுற்றி வட்டமிட்டு விளையாடிக் கொண்டிருந்தன.

வந்தியத்தேவனுடைய உள்ளத்தில் உற்சாகம் ததும்பியது. அதற்குப் பல காரணங்கள் இருந்தன. நாடெல்லாம் இளவரசரைப் பற்றிய கவலையில் ஆழ்ந்திருக்கும் போது அவனுக்கு மட்டும் அவர் பத்திரமாயிருக்கிறார் என்ற செய்தி தெரிந்திருந்தது. இளவரசரிடம் சோழ நாட்டு மக்கள் எவ்வளவு பிரியம் வைத்திருக்கிறார்கள் என்பதை அவன் ஓரளவு தெரிந்து கொள்ள முடிந்தது. மந்திரவாதி ரவிதாஸனை அவன் மறுபடியும் ஏமாற்ற முடிந்ததை நினைக்கக் குதூகலமாயிருந்தது. இதையெல்லாம் விடக் குந்தவை தேவியைச் சீக்கிரத்தில் பார்க்கப் போகிறோம் என்ற எண்ணம் அவனுக்கு எல்லையில்லாத மனக்கிளர்ச்சியை அளித்தது.

வெறுமனேயா பார்க்கப் போகிறான்? இளையபிராட்டி கூறிய காரியத்தைச் செய்து முடித்துவிட்டுப் பார்க்கப் போகிறான்! அந்தக் காரியத்துக்கு ஏற்பட்ட தடங்கல்களையெல்லாம் நினைத்து அவற்றையெல்லாம் தான் எதிர்த்து வெற்றி கொண்டதையும் எண்ணி அவன் பெருமிதம் அடைந்தான். நாளை மாலை இந்த நேரத்துக்குள் இளையபிராட்டியைச் சந்தித்து விடுவோம் என்பதில் சந்தேகமில்லை. ஆகா! அந்தச் சந்திப்பைக் குறித்து எண்ணும்போதே அவனுக்கு மெய் சிலிர்த்தது.

நட்சத்திரச் சுடர்களால் விளங்கிய வானமும் மின்மினிகள் பறந்த பூமியும் சலசலவென்ற சத்தத்துடன் ஓடிய முல்லை யாற்று வெள்ளமும் மந்த மந்தமாக வந்த குளிர் பூங்காற்றும் வந்தியத்தேவனைப் பரவசமடையச் செய்தன. வானமும் பூமியும் ஒரே ஆனந்தமயமாக அவனுக்கு அச்சமயம் தோன்றியது. பழைய காதல் பாட்டு ஒன்று அவனுக்கு நினைவு வந்தது. தான் வாய் விட்டு உற்சாகமாகப் பாடுவதற்குத் தகுந்த இடம்தான் இது. சுற்றுப்புறமெங்கும் மனித சஞ்சாரமே கிடையாது. ஏன்? பட்சிகள்கூடக் கூடுகளிலே சென்று அடங்கிவிட்டன. அவன் பாடுவதற்கு என்ன தடை இருக்கிறது? இதோ அவன் பாடிய பாட்டு. யாரை மனத்தில் நினைத்துக்கொண்டு பாடினான் என்று சொல்ல வேண்டியதில்லை அல்லவா?

**"வானச் சுடர்க ளெல்லாம்**
**மானே உந்தனைக் கண்டு**
**மேனி சிலிர்க்குதடி – அங்கே**
**மெய்ம்மறந்து நிற்குதடி!**

**தேனே உந்தன் குரல்தான்**
**தென்றலோ உன் வாய் மொழிகள்**
**மீனொத்த விழி மலர்கள் – கண்டால்**
**வெறி மயக்கம் தருவதேனோ!"**

வந்தியத்தேவன் இப்படிப் பாடி முடித்தானோ இல்லையோ, அவனுடன் போட்டி போடுவது போலத் தூரத்தில் நரிகள் ஊளையிடத் தொடங்கின.

அதேசமயத்தில் மனிதக் குரலில் கலகலவென்று சிரிக்கும் சத்தம் கேட்டது.

வந்தியத்தேவன் சிறிது மிரண்டு சுற்றுமுற்றும் பார்த்தான். அவனுடைய கை உடைவாளில் சென்றது.

புன்னைமரம் ஒன்றின் கரிய நிழலிலிருந்து ஓர் உருவம் வெளிப்பட்டது.

"தம்பி! உன் பாட்டுப் பிரமாதம்! நரிகளின் போட்டி கானம் அதைவிடப் பிரமாதம்!" என்று கூறிவிட்டுத் தேவராளன் மீண்டும் சிரித்தான்.

(தொடரும்)




நமது நாட்டில் வீணையும் வேணுவும் சிறந்த இசைக் கருவிகளாக ஆதிகாலத்திலிருந்து கருதப்பட்டு வந்திருக்கின்றன. மகானாகிய திருவள்ளுவரும் அவ்வாறே குழலும் யாழும்மிக இனிய இசைக் கருவிகள் என்று கருதினார். ஆனால் அவற்றின் இசையைக் காட்டிலும் செவிக்கு இனியது வேறு ஒன்று உண்டு என்றும் கூறினார். அது 'தம் மக்களின் மழலைச் சொல்!'' என்றார்.

சாதாரணமான குரலை உடைய குழந்தையின் மழலையே, அக் குழந்தையைப் பெற்றோர்களுக்கு யாழையும் குழலையும் விட இனியதாகத்தான் இருக்கும். வீணையைக் காட்டிலும் இனிய குரலை ஒரு குழந்தை உண்மையிலேயே இறைவன் அருளால் பெற்றிருக்குமானால், அந்தக் குழந்தையின் மழலையும், மழலைச் சொல்லுடன் கலந்து வரும் குரலிசையும் அக் குழந்தையின் அன்னைக்கு எவ்வளவு ஆனந்தத்தை அளிக்கும்? அதிலும், அந்த மாதரசி வீணை வாத்தியத்தை நன்கு பயின்று நாதோபாசனை செய்து வந்தவரானால், அவர் எத்தகைய பாக்கியத்தைச் செய்த புண்ணியவதியாவார்? தாம் அடைந்த பெறற்கரிய பேற்றைக் குறித்து எப்படி யெல்லாம் அவர் எண்ணி எண்ணி மகிழ்வார்!

அத்தகைய பாக்கியசாலியான அன்னை, மதுரை மாநகரைச் சேர்ந்த ஸ்ரீமதி வீணை சண்முக வடிவு அம்மாள் அவர்கள்.

இன்று அகில இந்தியாவிலும் புகழ் பெற்று விளங்கும் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களைப் பெற்றெடுத்துச் சங்கீத உலகத்துக்கு வழங்கிய பெருமை வாய்ந்த பெண்மணி ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாள்தான்.

• • •

பரம்பரையாகச் சங்கீதக் கலையில் ஆர்வமும் பயிற்சியும் பெற்றிருந்த குடும்பத்தில் வந்தவர் ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாள். இவருடைய தந்தையான ஸ்ரீ எம்.எஸ். சுவாமிநாதம் அவர்கள் நல்ல சங்கீதஞானமும் சாஸ்திர ஆராய்ச்சியும் சிறந்த பண்பாடும் படைத்தவர்; அன்னை ஸ்ரீமதி அக்கம்மாள் வயலின் வாத்தியத்தைப் பயின்று அதில் நல்ல தேர்ச்சி பெற்று விளங்கினார்.

இத்தகைய சங்கீத பரம்பரையில் வந்த பெற்றோர்களின் செல்வப் புதல்வியாக

# சண்முகவடிவு அம்மாள்

ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாள் சர்வதாரி வருடம் (1889-ம் ஆண்டு) பங்குனி மாதம் 17உ பிறந்தார்.

குழந்தைப் பிராயத்திலேயே இவருக்கு இசைக்கலையில் ஆர்வம் உண்டாயிற்று. அந்தக் கலையை நன்கு பயில வேண்டும் என்ற ஊக்கம் கொண்டார். இவருடைய பெற்றோர்களும் இயற்கையிலேயே இசை ஆர்வம் கொண்ட குழந்தைக்கு நல்ல முறையில் சங்கீதக் கலையைப் பயிற்சி செய்விக்க வேண்டுமென்று விரும்பினார்கள். அந்த நாளில் பிரபல வித்வானாக விளங்கிய கரூர் ஸ்ரீ வேங்கடராம பாகவதர் அவர்களிடம் சங்கீத வித்தை பயில ஏற்பாடு செய்தார்கள்.

கச்சேரிகளில் சோபிக்கக் கூடிய அளவுக்கு இவருடைய குரல் எடுப்பாக இல்லையென்று கருதி, இசைக் கருவிகளில் சிறந்ததான வீணை வாத்தியத்தில் இவர் சங்கீத வித்தையைப் பயிலத் தொடங்கினார். தமது சாரீரத்தைப் பற்றி அவருக்கு அந்நாளில் ஏற்பட்டிருக்கக் கூடிய ஆதங்கம், பிற்காலத்தில் அவருடைய நாதோபாசனையின் பயனாக, அவருடைய புதல்வி ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் மூலமாக நீங்கியது. இணையற்ற இனிமையும் காம்பீர்யமும் மற்றும் சங்கீத வித்தைக்குரிய சிறந்த சகல அம்சங்களும் வாய்ந்த குரலைப் பெற்றவர் என்று தேசமெங்கும் இன்று ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி பிரசித்தியுடன் விளங்கி வருகிறார் அல்லவா?

ஸ்ரீமதி சண்முகவடிவு தாம் பயிலத் தொடங்கிய வீணை வாத்தியத்தில் வெகு விரைவில் நல்ல தேர்ச்சி பெற்று வந்தார்.

இவருடைய அன்னை ஸ்ரீமதி அக்கம்மாளின் வயலின் வாசிப்பை அக்காலத்தில் மிகப் புகழ் வாய்ந்த வித்வான்களான திருக்கோடிகாவல் ஸ்ரீ கிருஷ்ணய்யர், மடவார்விளாகம் ஸ்ரீ முத்தையா பாகவதர் முதலியவர்கள் கேட்டு ரஸித்துப் பாராட்டியிருக்கிறார்கள். ஒருசமயம் ஸ்ரீமதி அக்கம்மாளின் பிடில் வாத்தியத்தைக் கேட்ட பிறகு அவருடைய குமாரி சண்முகவடிவின் வீணை வாசிப்பையும் அந்தப் பிரபல வித்வான்கள் கேட்டார்கள். "தாயைப் போல் சேய்" என்று மகிழ்ந்து கூறி, "இந்தக் குழந்தை விரைவில் சங்கீத உலகில் முன்னணிக்கு வருவான்!" என்று ஆசிர்வதித்தார்கள்.

அப் பெரியோர்களின் வாக்கு விரைவிலேயே பலிதமாயிற்று. குருநாதரின் அநுமதியுடன் ஸ்ரீமதி சண்முகவடிவு பதினைந்தாம் பிராயத்திலேயே வீணைக் கச்சேரிகள் செய்யத் தொடங்கினார். பக்க வாத்தியங்களின் உதவியின்றியே மூன்று - நான்கு மணி நேரம் வீணைக் கச்சேரி செய்வார். சங்கீதம் கேட்க வந்த ரஸிகர்கள் நேரம் போவது பற்றிய நினைவே இன்றி மெய் மறந்து கேட்டுக் கொண்டிருப்பார்கள்.

**வ**க்கீல் ஸ்ரீ சோமயாஜுலு அவர்களின் இல்லத்தில் நடந்த கலியாணத்தில் இவருடைய வீணைக் கச்சேரி முதன் முதலாக நடைபெற்றது. அக் கச்சேரியைக் கேட்டவர்கள் பெரிதும் ரஸித்துப் பாராட்டினார்கள். அதிலிருந்து கலியாண வைபவங்களிலும் சங்கீத சபைகளிலும் இவருடைய கச்சேரிகள் அடிக்கடி நடைபெற்று, பிரபலம் அடையத் தொடங்கினார்.

வக்கீல் ஸ்ரீ பி.எஸ். சுப்பிரமணியம் அவர்கள் ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாளின் வாழ்க்கைத் துணைவர் ஆனார். இவர் சங்கீதக் கலையில் ஆர்வம் உள்ள பரம ரஸிகர். இவர் அளித்த உற்சாகத்தினால் ஸ்ரீமதி சண்முக வடிவின்

அமரர் கல்கி

புகழ் மேலும் பரவியது. தஞ்சை, திருச்சி, திருநெல்வேலி, ராமநாதபுரம், சென்னை முதலிய இடங்களில் இவருடைய கச்சேரிகள் அதிகமாக நடந்தன.

1914-ம் ஆண்டில் சென்னை மாகாணத்தின் கவர்னர் பதவி வகித்த லார்ட் பெண்ட்லண்ட் துரை மதுரை நகருக்கு விஜயம் செய்தார். ஸ்ரீ சீனிவாச ராவ் என்னும் பிரமுகரின் இல்லத்தில் கவர்னருக்குச் சிற்றுண்டி விருந்து நடந்தது. அப்போது ஸ்ரீமதி சண்முக வடிவு அம்மாளின் வீணைக் கச்சேரி ஏற்பாடாகியிருந்தது. கவர்னர் பெண்ட்லண்ட் துரை வீணைக் கச்சேரியை மிகவும் ரஸித்துச் சிலாகித்ததுடன், ஸ்ரீமதி சண்முகவடிவுக்குத் தங்கப் பதக்கமும் பாராட்டு இதழும் வழங்கிக் கௌரவித்தார்.

மைசூரில் அச்சமயம் வீணை பக்ஷி சுப்பண்ணா, சேஷண்ணா ஆகியவர்கள் பிரசித்தமான வித்வான்களாக விளங்கினார்கள். அவர்கள் ஸ்ரீமதி சண்முக வடிவு அம்மாளின் வீணை வாசிப்பை அடிக்கடி கேட்டு மகிழ்ந்தார்கள். இவர் வீணை வாத்தியத்தைக் கையாளும் முறையையும், இவருடைய வீணா நாதத்தின் இனிமையையும் அவர்கள் பெரிதும் பாராட்டினார்கள்.

ஸ்ரீமதி சண்முகவடிவின் குழந்தைப் பிராயத்தில் இவருடைய வீணை வாசிப்பைக் கேட்டு ஆசி கூறிய திருக்கோடிகாவல் ஸ்ரீ கிருஷ்ணய்யர் அவர்கள் இவர் பிரபலமாகக் கச்சேரி செய்யத் தொடங்கிய பிறகும் கேட்கும்படி நேர்ந்தது. அப்போது அவர் ஆசி கூறிப் பாராட்டியதுடன் திருப்தி அடையவில்லை. ஸ்ரீமதி சண்முக வடிவின் வித்தைத் திறமையைச் சோதிப்பதற்காகக் கடுமையான சோதனைகள் நடத்தினார். ஏறக்குறைய ஒன்றுபோல் தொனிக்கக் கூடிய சம்மேள ராகங்களாகிய பைரவி – முகாரி, நாயகி - தர்பார், ஆரபி – தேவகாந்தாரி ராகங்களை அடுத்தடுத்து வாசிக்கச் செய்தார். அவ்வாறே கன ராகதானங்கள், சவுக்க கால, மத்தியம கால பல்லவிகளும் வாசிக்கச் சொல்லிக் கேட்டார். இந்தப் பரீட்சைகளில் ஸ்ரீமதி சண்முக வடிவு சிறந்த முறையில் தேறியதைக் கண்டு பரிபூரண திருப்தி அடைந்தார். இவருடைய சங்கீத வித்தைத் திறமையை அந்த மகா வித்வான் பெரிதும் பாராட்டியதுடன் சோழ நாட்டில் சங்கீத ரஸிகர்கள் மிகுந்த பல ஊர்களிலும் இவருடைய வீணைக் கச்சேரி நடப்பதற்கு ஏற்பாடு செய்தார்.

திருக்கோடிகாவல் கிருஷ்ணய்யர் தம்முடைய காலத்தில் சங்கீத உலகத்தில் இணையற்ற பெருமையுடன் விளங்கியது அனைவரும் அறிந்ததே. சங்கீதக் கலையின் மேன்மையை நிலைநாட்டுவதில் மிகவும் கண்டிப்பான கொள்கையைக் கடைப்பிடித்தவர். அத்தகையவர் ஸ்ரீமதி சண்முக வடிவின் வீணை வாசிப்பைப் பெரிதும் மதித்துப் பல இடங்களிலும் கச்சேரி வைப்பதற்கும் ஏற்பாடு செய்தார் என்றால், அந்த சங்கீதம் எவ்வளவு உயர்தரமாயிருக்க வேண்டும் என்பதற்கு வேறு அத்தாட்சியே வேண்டியதில்லை.

ஸ்ரீமதி சண்முக வடிவு சென்னைக்குச் சென்றிருந்த ஒரு சந்தர்ப்பத்தில் இவருடைய வீணைவாசிப்பை வீணை தனம்மாள் கேட்டுப் பரவசமடைந்தார். "என்னைப் போல் நீயும் சங்கீதக் கலைக்குத் தொண்டு செய்து சர்வ மங்களங்களையும் அடைவாய்; நல்ல சங்கீத ஞானமுள்ள குழந்தைகளைப் பெறுவாய்!'' என்று வாழ்த்தினார். நிறைந்த உள்ளத்துடன் வீணை தனம்மாள் கூறிய வாழ்த்து அற்புதமாகப் பலித்துவிட்டது.

மற்றொரு பிரசித்தி பெற்ற வீணை வித்வானாகிய விஜய நகரம் வெங்கடரமணதாஸர் பல வித்வத் சிரோமணிகள் நிறைந்திருந்த சபையில் ஸ்ரீமதி சண்முக வடிவின் வீணை வாசிப்பைப் பாராட்டிப் பேசி மகிழ்ந்தார். வீணா கானத்தில் நிகரற்ற பிராபல்யத்துடன் விளங்கிய காரைக்குடி சகோதரர்களும் ஸ்ரீமதி சண்முகவடிவின் வீணை வாசிப்பைப் பாராட்டி ஆசி கூறினார்கள்.

கச்சேரி செய்து புகழ் பெற்றது மட்டுமல்லாமல் சங்கீதக் கலையின் இலக்கண இலக்கியங்களையும் ஸ்ரீமதி சண்முக வடிவு நன்கு அறிந்திருந்தார். ஆகையால், அவ்வப்போது பல சங்கீத வித்வான்கள் இவரிடம் வந்து சங்கீத சாஸ்திர நுட்பங்களைப் பற்றி விவாதிப்பார்கள்.

ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாள் ஆண்டுதோறும் தம்முடைய இல்லத்தில் ஸ்ரீ தியாகராஜ உத்ஸவம் விமரிசையாக நடத்தி வந்தார். அச்சமயம் தமிழ்நாட்டில் பிரபலம் அடைந்திருந்த சங்கீத வித்வான்

கள் அனைவரும் ஸ்ரீமதி சண்முகவடிவின் இல்லத்தில் நடந்த தியாகராஜ உற்சவத்துக்கு வந்து கச்சேரி செய்து சிறப்பித்தார்கள்.

இத்தகைய சங்கீத மயமான சூழ்நிலையில் பிறந்தவர்தான் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி. பெற்றோர்களும் உற்றார்களும் குழந்தையைக் 'குஞ்சு' என்று செல்லப் பெயரால் அழைத்தார்கள். ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி மழலை மாறாத சின்னஞ் சிறு குழந்தையாயிருந்த போதே அவருடைய தந்தை ஸ்ரீ.பி.எஸ். சுப்பிரமணியம் இறைவனடி சேர்ந்து விட்டார். இந்தச் சம்பவம் ஸ்ரீமதி சண்முகவடிவு அவர்களைத் துயரத்தில் ஆழ்த்தியது.

**வா**ழ்க்கைத் துணைவரைப் பிரிந்த துயரத்தை ஒரளவு மறப்பதற்குக் குழந்தை சுப்புலக்ஷ்மி இசைக் கலையில் காட்டிய ஆர்வம் உதவியாயிருந்தது. குழந்தையின் குரலினிமை அன்னையை மெய்மறக்கச் செய்தது. நாளுக்கு நாள் அக் குழந்தையிடம் வளர்ந்து வந்த சங்கீத ஞானத்தைக் கண்டு ஸ்ரீமதி சண்முக வடிவு பெருமிதம் அடைந்தார். இறைவன் அருளால் குழந்தையிடம் இயற்கையாகப் பொலிந்த இசை அறிவு மேலும் மேலும் வளர்வதற்கு வசதி அளித்து வந்தார்.

குழந்தைக்குப் பத்து வயது பூர்த்தி ஆவதற்குள்ளேயே தம்முடன் கச்சேரி மேடைகளில் அமர்ந்து தமக்கு உதவியாக அவ்வப்போது பாடும்படி செய்தார்.

அவ்வாறு அன்னையும் புதல்வியும் சேர்ந்து கச்சேரி செய்த நாட்களில் அவர்களுடைய கச்சேரியைக் கேட்ட ரஸிகர்கள் இன்றைக்கும் அதை நினைவு வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

அன்னை சண்முகவடிவு அம்மாள் வீணை வாத்தியத்தின் கம்பிகளை மீட்டி உண்டாக்கிய இசை அதிக இனிமையானதா, குழந்தை சுப்புலக்ஷ்மியின் குரலிலிருந்து பெருகிய இசை வெள்ளம் அதிக மதுரம் பொருந்தியதா என்று சங்கீத ரஸிகர்கள் சர்ச்சை செய்தார்கள்.

**"தம்மில் தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க் கெல்லாம் இனிது"**

என்றார் வள்ளுவர் பெருமான். தம்மை விடத் தம் குழந்தைகள் கலைத் துறையில் சிறப்படைந்து புகழ் பெறுவதைப் பார்க்கும் பாக்கியம் உலகில் சிலருக்குத்தான் கிடைக்கக் கூடும். அந்த பாக்கியம் தமக்குக் கிடைக்கப் போகிறதென்பதை ஸ்ரீமதி சண்முகவடிவு உணர்ந்து கொண்டார். வாய்ப் பாட்டுக் கச்சேரியில் தாம் அடைய முடியாமற் போன புகழைத் தம் புதல்வி அடைவாள் என்று நிச்சயம் கொண்டார்.

எனவே, கிராமபோன் கம்பெனியார் ஸ்ரீமதி சண்முகவடிவு அவர்களை இசைத் தட்டுப் பதிவு செய்வதற்காக அழைத்த போது தமது பத்து வயதுக் குமாரியையும் அழைத்துச் சென்றார்.

ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாளின் தானம் வாசிப்பை ஓர் இசைத் தட்டிலும், 'சிவ தீக்ஷா' என்னும் இனிமையான பதத்தை இன்னொரு இசைத் தட்டிலும் கிராமபோன் கம்பெனியார் பதிவு செய்து கொண்டார்கள்.

அந்த இரண்டு இசைத் தட்டுகளும் ஸ்ரீமதி சண்முகவடிவுக்கு மிக்க புகழை அளித்தன. கிராமபோன் கம்பெனியின் ரிகார்டிங் என்ஜினியரான மிஸ்டர் காரின் என்ற ஆங்கிலேயர், ஸ்ரீமதி சண்முக வடிவு அம்மாளின் 'தானம்' இசைத் தட்டைத் தம்முடன் இங்கிலாந்து எடுத்துச் சென்றார். அங்கு பலரும் அதைக் கேட்கும்படி செய்ததுடன், தமது பாராட்டுதலை விரிவாக எழுதித் தெரிவித்தார்.

**ஸ்ரீ**மதி சண்முகவடிவு அம்மாள் இசைத் தட்டில் தம் வீணை வாசிப்பைப் பதிவு செய்த அதேசமயத்தில், குழந்தை சுப்புலக்ஷ்மியின் பாட்டு ஒன்றையும் பதிவு செய்வதற்கு ஏற்பாடு செய்தார். அன்னை கற்பித்திருந்த **'மரகதவடிவம்'** என்று தொடங்கும் செஞ்சுருட்டி ராகப் பாடலைப் பத்து வயது நிரம்பாத குழந்தை பாடினாள். தாயாரைத் திருப்தி செய்வதற்காகக் கிராமபோன் கம்பெனியாரும் அப் பாட்டைப் பதிவு செய்துகொண்டார்கள். அந்த இசைத் தட்டு அவ்வளவு பிரபலம் அடையப் போகிறது என்று யாரும் எதிர் பார்க்கவில்லை. ஆறு கட்டை சுருதியில் குழந்தை சுப்புலக்ஷ்மி பதிவு செய்திருந்த அந்த 'மரகதவடிவம்' என்ற இசைத்தட்டு வெளியான பிறகு, சில காலம் தமிழ் நாடெங்கும் அந்தப் பாட்டு உச்சஸ்தாயி

யில் ஒலித்துக்கொண்டிருந்தது.

இதற்குப் பிறகு ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாளுக்குத் தமது குமாரியின் முன்னேற்றமே முக்கியமான மனோரதம் ஆயிற்று. சில வருஷங்களுக்கெல்லாம் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியைத் தனியாகவே வாய்ப் பாட்டுக் கச்சேரி செய்யப் பண்ணினார். அப்போதெல்லாம் தாம் அருகில் அமர்ந்திருந்து குமாரியின் குரலினிமையில் மெய் மறந்திருந்தார். சபையிலுள்ள ரஸிகர்கள் குழந்தையின் பாட்டை ரஸிப்பதைக் கண்டு அன்னை பெருமிதம் அடைந்தார்.

சங்கீத உலகில் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியின் புகழ் நன்கு நிலை பெற்று விட்டது என்பதைக் கண்ட பிறகு ஸ்ரீமதி சண்முக வடிவு அம்மாள் தாம் வீணைக் கச்சேரி செய்வதை நிறுத்திக்கொண்டார். தமது குமாரியின் புகழே தமது புகழாகக் கருதி மகிழ்ந்து வந்தார்.

ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாள் சிறந்த சங்கீதப் புலமை பெற்றவராயிருப்பதோடு, உயர்ந்த பண்பாடும் பெற்றவர். அவர் வாசிக்கும் வீணை வாத்தியத்தின் இனிமையை அவருடைய சுபாவத்திலும் காணலாம். அவருடைய பேச்சிலேயே இயற்கை மாதுர்யம் கலந்திருக்கும். தற்புகழ்ச்சி சிறிதும் இல்லாதவர். யாரையும் பற்றிக் குறை சொல்லும் வழக்கமில்லாதவர். சங்கீதத் துறையில் ஈடுபட்ட பிற வித்வான்களிடம் பெரு மதிப்பு உடையவர். எந்த வித்வான் பாடினாலும், வீணை முதலிய இசைக்கருவிகளை வாசித்தாலும், அவற்றிலுள்ள நல்ல அம்சங்களைக் கூர்ந்து கவனித்துப் பாராட்டி மகிழ்ச்சி அடையும் இயல்புடையவர்.

ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாளின் மூத்த குமாரர் ஸ்ரீஎம். எஸ். சக்திவேல் இளம்பிராயத்திலேயே மிருதங்க வாத்தியத்தைப் பயின்று, இன்றைக்குச் சிறந்த மிருதங்க வித்வான்களில் ஒருவராக விளங்கி வருகிறார்.

மற்றொரு புதல்வியான ஸ்ரீமதி எம்.எஸ். வடிவாம்பாள், வீணை வாத்தியம் பயின்று அதில் நல்ல தேர்ச்சி அடைந்து வந்தவர், இளம் வயதில் அகால மரணமடைந்துவிட்டார். இந்த துயர சம்பவத்துக்குப் பிறகு ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாளின் உடல் நலம் குன்றியது. வீட்டில் வீணை வாசிப்பதைக்கூட நிறுத்திவிட்டார். ஆத்மார்த்தமான பிரியம் உடையவர்கள் யாராவது வற்புறுத்திக் கேட்டால், சிறிது நேரம் வாசிப்பார். அந்தச் சொற்ப நேர வாசிப்பு அவர் ஒரு காலத்தில் அந்த வாத்தியத்தின் மூலம் சங்கீத உலகில் அடைந்திருந்த கீர்த்தியை நினைவூட்டுவதாயிருக்கும்.

தற்சமயம் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் அகில இந்தியாவிலும் இணையற்ற குரலினிமை வாய்ந்த பாடகியாகப் புகழ் பெற்று விளங்கி, நமது கர்நாடக சங்கீதத்தின் மகிமையை வட நாட்டிலும் நன்கு நிலைநாட்டி வருவதற்கெல்லாம் மூல காரணமானவர் ஸ்ரீமதி சண்முக வடிவு அவர்களே என்று சொல்ல வேண்டியதில்லை. இன்று ஸ்ரீமதி எம்.எஸ். சங்கீத உலகில் அடைந்துள்ள உந்நத நிலைமையைக் குறித்துப் பெருமிதம் கொண்டிருப்பவர்களிலும் ஸ்ரீமதி சண்முக வடிவு அம்மாளே முதன்மையாக இருக்கிறார்.

சென்ற வாரத்தில் மதுரையில் 'ஸ்ரீ சத்குரு சங்கீத சமாஜ'த்தின் ஆதரவில் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் சங்கீதக் கச்சேரி பெருந்திரளான ரஸிகர்களின் மகாசபையில் நடைபெற்றது. அறுபத்தைந்து பிராயத்தை அடைந்து துர்ப்பலமாயிருக்கும் ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாளும் தமது செல்வக்குமாரியின் கச்சேரி கேட்பதற்காக வந்திருந்தார். சங்கீத சபையின் சார்பில், "ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியைச் சங்கீத உலகத்துக்கு அளித்த அன்னை" என்று அறிமுகப்படுத்தி, ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாளுக்கு மாலை சூட்டப்பட்டபோது, சபையோர் புளகாங்கிதம் அடைந்தார்கள். ஸ்ரீமதி சண்முக வடிவு அம்மாள் தமக்குப் போடப்பட்ட மாலையைத் தமது புதல்விக்குத் திரும்பப் போட்டு ஆனந்தக் கண்ணீர் பெருக்கினார்.

இந்தத் தாயும் மகளும் போல் கர்நாடக சங்கீதத்துக்குத் தொண்டு செய்வதற்கு இன்னும் பலரை அளித்து அருளும்படி, வெள்ளைத் தாமரைப் பூவிலும் வீணை செய்யும் ஒலியிலும் விளங்கும் கலை மகளைப் பிரார்த்திப்போமாக.

(கல்கி, பிப்ரவரி 28, 1954)



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

வெயில் வீணா போவுதேன்னு ஏன் இப்படி அலையறீங்க? உடம்பு கெட்டு, உஷ்ணாதிக்கத்தால சில பிரச்னைகள் வரலாம். சகட்டுமேனிக்கு செலவு எகிறும். தேவையில்லாத பொருள்களை வாங்கிக் குவிக்காதீங்க. அப்புறம் ஆபீஸ்ல சில பிரச்னைகள் வரலாம். உணர்ச்சிவசப்பட்டுக் கத்தி பேரைக் கெடுத்துக்காதீங்க. இந்த வாரம் பக்கத்து ஊர் பயணம் கூட வேண்டாம். சிறு விபத்துகளுக்கோ, பண இழப்புக்கோ வாய்ப்பு அதிகம். கணவன் மனைவி உறவுல பிரமாதமான உற்சாகம் இருக்கும்னு சொல்ல முடியாது. சின்ன ஊடல்களைத் தவிர்க்கறது உங்க பொறுப்புதான்.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

மனசுல துணிச்சல் துளிர் விடற நேரம். தன்னம்பிக்கையோட புது முயற்சிகள்ல இறங்கினீங்கன்னா வெற்றி நிச்சயம். கலைஞர்களுக்குப் புகழும் பாராட்டும். அதன் விளைவா சில பேரோட பொறாமையும் சேரும். உங்க கடமைகள்லேருந்து நீங்க தவறாத வரைக்கும் யாராலும் உங்களை ஒண்ணும் பண்ண முடியாது. வெளியூர் பயணம் இருக்கும். சிலருக்கு வீடு வாங்கற யோகம் உண்டு. வீட்டுல மகிழ்ச்சிக்குக் குறைவிருக்காது. ஆனாலும் சில சில்லறைக் குழப்பங்களால ராத் தூக்கம் கெடும்.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

பெரும்பாலான கிரகங்கள் அனுகூலமா இருக்கு. நினைச்ச காரியம் தடையில்லாம நடக்கும். புது வியாபார ஒப்பந்தங்கள், திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள் நிகழும். வெளிநாட்டுச் செய்தி நன்மையே தரும். சிலருக்குக் கல்யாணப் பேச்சு ஆரம்பமாகும். பெண்களுக்குப் புதிய புடைவை, நகை வாங்க சான்ஸ் வரும். வீட்டுப் பெரியவங்க மனசு குளிரும்படி ஒரு காரியம் செய்வீங்க. ஒரு தொலைபேசிச் செய்தி, உங்களுக்கு எதிர் பாராத சந்தோஷம் கொண்டு வரும். பயணங்களால பயன் உண்டு. சிலருக்குப் புது வாகன யோகம் இருக்கும்.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

ஆசிரியர்கள், மத போதகர்கள், சட்ட வல்லுநர்கள் காட்டுல செமை மழை பெய்யப் போவுது. தொட்டதெல்லாம் துலங்கும். புதிய வேலை வாய்ப்புகள், வியாபார ஒப்பந்தங்கள்னு இந்த வாரம் ஓஹோதான். சிலருக்கு வெளிநாடு போகிற சான்ஸ் இருக்கு. ஆபீஸ்ல பழைய பாக்கிகள் இருந்தா, இப்ப வசூலாகும். எதிரிங்க பணாலாயிடுவாங்க. சம்சாரம் நீங்க கிழிச்ச கோட்டை தாண்டாம இருப்பாங்க. வீட்டு உபயோகப் பொருள்கள் சில வாங்குவீங்க. வெளில கண்டதை சாப்பிட்டுட்டு, வயித்துக் கோளாறால கொஞ்சம் அவஸ்தைப் படுவீங்க.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

இதுவரைக்கும் இருந்து வந்த கஷ்டங்கள் விலக ஆரம்பிச்சிரும். கொஞ்சம் கொஞ்சமா வெற்றிப் பாதைல நடக்க ஆரம்பிப்பீங்க. முன் கோபம், பொறாமை குணங்களை விட்டொழிச்சிட்டு, வேலையைப் பாருங்க; வெற்றி நிச்சயம். இந்த வாரம் உங்க பழைய நண்பர் ஒருத்தரைச் சந்திப்பீங்க. பிஸினஸ் ரீதில சில அபிவிருத்திகள் ஏற்படும். விவசாயிகள், பெண்களுக்கு இது ஓஹோ வாரம்! மாணவர்களுக்கு உற்சாகமான வாரமா இருக்கும். சில எழுத்தாளர்களுக்கும் பத்திரிகையாளர்களுக்கும் எதிர்பாராத நல்வாய்ப்புகள் வந்து, நிலை உயரும்.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

இந்த பொம்பளைங்க காட்டுல மழைதான் இந்த வாரம். காட்டன் புடைவை கேட்டா, வீட்டுக்காரங்க பட்டுப் புடைவையே வாங்கித் தரப் போறாங்க. காரணம்? கையில பணம் துள்ளும். வராத பாக்கிகள் வந்து சேரும். ப்ரமோஷன் மாதிரியான லக்கும் சிலருக்கு உண்டு. வெளிநாட்டு வேலை வாய்ப்போ, சம்பந்தமோ குதிரும். சிலருக்கு காசி, ராமேஸ்வரம் போய்வர வாய்ப்பிருக்கு. பொதுப் பிரசனைகள்ல மட்டும் இந்த வாரம் தலையிடாதீங்க. கெட்ட பெயருக்கு வாய்ப்புண்டு. கோர்ட், கேஸ் இருந்தா வாய்தா கேளுங்க. தீர்ப்பு இப்ப உங்களுக்குச் சாதகமா இருக்காது.

**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல்*



*சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

கிரகங்கள் சாதகமா இல்லாததால நீங்க ரொம்ப கவனமா செயல்படணும். இந்த வாரம் எந்த வேலையையும் ஒண்ணுக்கு ரெண்டு தடவை செய்ய வேண்டி வரலாம். எதிர்பார்த்த உதவி கிடைக்கறதுல தாமதம் இருக்கும். நண்பர்கள் சமயம் பார்த்துக் காலை வாரிடுவாங்க. உஷார்! வீட்டுப் பெரியவங்களை எடுத்தெறிஞ்சிப் பேசாதீங்க. மேலதிகாரிகள் இட்டதையும் பவ்யமா நடத்துக்கறது நல்லது. இந்த வாரம் உறவுக்காரங்க வருவாங்க. ஜாலியா பேசிச் சிரிக்க முடியாம ஏதாவது மனக் குழப்பம் இருந்துக்கிட்டே இருக்கும்.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

கிரகங்கள்

# நடக்கும்!

**துலாம் ராசிக்காரரான ஏ.ஆர். ரஹ்மான் இந்த வாரம் ரொம்ப கவனமா செயல்படணுமாம்!**



உங்களுக்கு மெஜாரிட்டி பலம் கொடுக்குது. அதனால, பிரச்னை இல்லாத வாரமா இது இருக்கும். எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள் வாழ்க்கை சொகுசா போகும். புகழும் பணவரவும் உறுதி. பெண்களுக்கு உல்லாச அனுபவங்கள் ஏற்படும். விருந்துகள்ல கலந்துக்கிட்டு ஜமாய்ப்பீங்க. கூடப் பிறந்தவங்களோட மனஸ்தாபத்துக்கு வாய்ப்பிருக்கு. வெளியூர் பயணம் – குறிப்பா இரவுப் பயணம் வேணாம். சிறு விபத்துக்கு வாய்ப்பிருக்கு.



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

செவ்வாயும் புதனும் அனுகூலமா இருக்கறதால, உங்க காரியங்கள் நடைபெற தடை எதுவும் இருக்காது. சட்டம், ராணுவத் துறையினருக்கு வளர்ச்சி உறுதி. உறவினர்களால ஆதாயம் உண்டு. போட்டி பந்தயங்கள்ல கண்டிப்பா ஜெயம்தான். வழக்குகள் இருந்தா, சுமுகமா தீரும். எழுத்தாளர்கள், விஞ்ஞானிகளுக்கு நல்ல முன்னேற்றம் இருக்கும். கூட்டுத் தொழில் பண்றவங்க உஷாரா இல்லாட்டி, பார்ட்னர் கவுத்துடுவாரு. வீட்டுல சில பிரச்னைகள் இருக்கும். பெண்கள் முன் கோபத்தைக் கட்டுப்படுத்தியே ஆகணும்.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

கிரகங்கள் சாதகமாத்தான் இருக்கு. சிலருக்குத் திருமண ஏற்பாடுகள் நடக்கும். நிச்சயம் ஆன ஆண்களும் பெண்களும் 'WOO' லலல்லா பாடுவாங்க. மனசுல மகிழ்ச்சி கொப்பளிக்கும். ஆபீஸ்ல ப்ரமோஷனுக்கு சான்ஸ் இருக்கு. பணம் தண்ணியா செலவாகும்னாலும் எல்லாம் நீங்க விரும்பிச் செய்யற செலவுதானே? சிலருக்கு வீடு, மனை வாங்கற யோகம் இருக்கு. பெற்றோர் உடல் நலத்துல மட்டும் அக்கறை காட்டுங்க. இரவுப் பயணத்தைத் தவிர்த்துடுங்க.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

மனசுல பக்தி ஊற்று கொப்பளிக்குமே! கோயில் கோயிலா சுத்தலாம்னு தோணுமே? ஆனா வீடு உங்களை அவ்ளோ சுலபமா பட்டினத்தாராவோ, காரைக்கால் அம்மையாராவோ ஆக விடாது! கடமை இருக்குதுங்களே! வீட்டுல ஏதோ விசேஷம் நடக்கப் போவுது. வெளிநாட்டுத் தொடர்பால நன்மை கூடப் போவுது. என்ஜாய் பண்ணுங்க. உத்தியோகஸ்தர்களுக்குப் பதவி உயர்வு இருக்கும். பெண்களுக்குத் திருமண யோகம் கூடி வரும். பொருளாதார ரீதில பிரச்னை எதுவும் இருக்காதுன்னாலும் கண்டதையும் வாங்கி தாம்தூம் பண்ணாதீங்க.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

நீங்க கொஞ்சம் கவனமா இருக்கணும். உடல் நலக் கோளாறு அடிக்கடி ஏற்படும். பயணத்துல சில பிரச்னைகள் வரலாம். வீட்டுல மனஸ்தாபங்கள் உண்டாகி, ஆளாளுக்கு மூஞ்சியைத் தூக்கி வெச்சுக்கறதுல என்ன லாபம்? வீண் வம்புகள்ல தலையிடாதீங்க. சிலருக்கு பண இழப்பு ஏற்படும். பிக்பாக்கெட்காரர்கள்கிட்ட உஷாரா இருங்க. தெரு நாய் கூட விளையாட்டு, கொஞ்சலெல்லாம் வேணாம்! வாரக் கடைசில நிலைமை கொஞ்சம் சீராகும். அது வரைக்கும் சைலன்டா இருங்க. வாயைத் திறந்தா ஆபத்து.

**மே 12 முதல் 18 வரை**

# ஒரு காதல் டைரி

வைக்கம் முகம்மது பஷீர்

தமிழில் : வையவன்

சங்கதி என்னவென்று புரியவில்லை.

அம்மா அழுவதைப் பார்த்தேன். அண்ணன்கள் வருவதையும் கோபக்காரரான அப்பா கண்களை உருட்டுவதையும்.

அம்மா சொன்னார்.

"என்னை என் வீட்லே கொண்டு போய் விட்டுடுங்க."

"நான் வரமாட்டேன் அம்மாவோட. எனக்குப் படிக்கணும்" என்று நான்.

அப்பா திக்பிரமித்து விட்டார்.

எனக்கும் விசேஷமாக என்ன செய்வது என்று தோன்றாததால் அங்கிருந்து நகர்ந்தேன்.

அது ஒரு சம்பவம். அதன் விளைவைக் குறித்து நான் யோசிக்கவில்லை. யோசிக்க வேண்டிய அவசியமும் இல்லை.

நான் ஒரு போதும் 'அம்மா அப்பா' விளையாட்டு விளையாட ஆசைப்பட்டதில்லை. அந்த விளையாட்டை மீதி அண்ணன்களும் குழந்தைகளும் விளையாடும் போது நான் பார்த்துக் கொண்டு நிற்பேன். எதிர்பாராத ஓர் உற்சாகத்தோடு காரணமற்ற ஒரு பீதியோடு நான் அப்படியே நின்று விடுவது உண்டு.

ஏழு வயதுச் சிறுமி.

உலகம் அவளை அவ்வாறு வரவேற்றது.

நான் எப்போதும் சிரிப்பேன்; பாட்டுப் பாடுவேன்; விளையாடுவேன். பெரியதொரு வீட்டில் நாங்கள் வசித்தோம்.

எங்கள் கீழே பதினைந்து பேர் கிளார்க் வேலை செய்துக் கொண்டிருந்ததும் அங்கே தான்; ஆபீஸும் வீடும்.

நினைவுகள்.

குழந்தைப் பருவம் கடந்து சென்ற அந்த வெகு தூரத்து நகரம். கொல்லம் கைக்குளங்கரச்சேரி ஆனவாதிலின் சமீபம். சாலையை அடுத்திருந்த வீடு.

அங்கிருந்து பார்த்தால் எப்போதும் கண்ணில் படுவது அரபிக் கடலைக் கம்பீர எழிலுடன் ஆகாயம் தொடும் பகுதி. முடிவில்லாத அலைகள் வந்து அலை மோதும்போது, அவற்றின் அருகே சென்று நிற்க நான் முயல்வேன்.

சுகமான ஒரு வாழ்க்கை.

ஏழாவது குழந்தை

முதலாவது மகள்.

அளவில்லாத மன ஏக்கங்களுக்கு முடிவு வரவழைத்த அருமைப் பிறப்பு.

நினைவுகள்.

அண்ணன்மாருடன் நடக்கும்போதும் விளையாடும் போதும் பிரியமான அப்பாவின் கை பிடித்து 'கொச்சு பிலா மூடு' மைதானத்தில் உலவும் போதும் எனக்கு என்ன ஒரு 'பவர்' தெரியுமா?

மானேஜர் ஜயாவின் மகள்.

எல்லாருக்கும் கண்மணி.

நான் வெற்றிலையையும் மற்றதையும் குமாஸ்தாக்களுக்கு அம்மாவுக்குத் தெரியாமல் எடுத்துக் கொண்டு போய்க் கொடுப்பேன். சிரிப்



பேன்... விளையாடுவேன்... அப்படி... அப்படி...

வயது கடந்து சென்றது. எதையும் வகை வைக்காமல்.

புத்தகங்கள் வாசிப்பதில் எனக்கு மிகவும் ஆர்வம். அந்தக் காலத்திலும் நான் பத்திரிகைகள் படிப்பேன். வாதப் பிரதிவாதம் நடத்து வேன்.

மகாத்மாஜியைப் பற்றிக் கேள்விப்படும்போது (ஒன் றும் தெரியாவிட்டாலும்) மகிழ்ச்சியால் துள்ளுவேன். நான் அவரைப் போல் ஆக வேண்டும் என்று பிரார்த் திப்பேன். அப்பாவிடம் சொல்வேன்.

"அப்பா, நான் பெரியவள் ஆனால் காந்தியாவேன்."

காந்திஜி பெண்ணா ஆணா என்று எனக்குத் தெரியாது. அப்பாவும் அம்மாவும் மற்றவர்களும் விழுந்து விழுந்து சிரிப்பார்கள்.

நினைவுகள்.

படிப்பில் முதலாவதாக வந்த விவரத்தை நான் எல்லோருக்கும் தெரிவிப்பேன். எழுதிய சொற்பொழிவை நான் வாசித்த போது தலைமை ஆசிரியர் என்னைக் கெட்டிக்காரி என்று சொன்னார்.

ஹா! நான் அதை எத்தனை முறை ஒவ்வொருத்தரிடமும் சொல்லியிருப்பேன்.

ஒருநாள் பள்ளி விட்டதும் வீட்டிற்கு வந்த போது அங்கே மகாகவி வள்ளத்தோள் உட்கார்ந்திருந்தார். நாலப் பாடு நாராயண மேனோனும் மற்றும் பலரும்.

தலைமை ஆசிரியர் என்னைக் கெட்டிக்காரி என்று பாராட்டிய சிந்தனையிலேயே நான் இருந்தேன். அப் பாவிடம் சொன்னேன்.

"அப்பா, ஹெட்மாஸ்டர் இன்னிக்கு என்னைக்

கெட்டிக்காரின்னு சொன்னார்."

அப்பா நல்ல வார்த்தை சொல்லித் தட்டிக் கொடுத்தார்.

எல்லோரும் சிரித்தார்கள்.

மகாகவிக்குச் சங்கதி விளங்கவில்லை.

நாலப்பாடன் அவர் கையில் விரலைக் கொண்டு எழுதிப் புரிய வைத்தார். அவருக்கு அருகே போகும்படி என்னிடம் சொன்னார். நான் சென்றேன்.

மகாகவி என்னைச் சாய்வு நாற்காலிக்கு அருகே பிடித்து நிறுத்தி அந்தக் கொடுமையான வரண்ட கரகரத்த தொனியில் சொன்னார். நான் ஒரு பெரிய சொற்பொழிவாளர் ஆவேன் என்று.

எல்லோரும் சிரித்தார்கள்.

மகாகவியின் வாக்குகளுக்கு நான் மதிப்



''வரதட்சணையோடு 'பிக்சட்' டிபாசிட் இருபதாயிரம் போட்டு வைக்கணுமா?''

''ஆமா! ஆயுள் முழுக்க மாப்பிள்ளை குடும்பம் 'சினிமா' பார்க்க அதிலிருந்து வர்ற வட்டியை வச்சுக்குவாங்க!''

– கு. அருணாசலம்

பளிக்கவில்லை. என் கூட்டாளிகள் யாருக்கும் மகாகவியைத் தெரியாது. அவர்கள் அறிந்திருந்தால் தானே நான் பொருட்படுத்த!

"பெண் பிள்ளைகள் இப்படி அடக்க ஒடுக்கமில்லாமல் போய்விட்டால்?" என்று அம்மா கேட்டாள்.

மலரப் போகிற புஷ்பம்–பெண்ணை–பெண்களுக்கே இயல்பான ஒரு சங்கோஜம். அவை எல்லாம் எனக்கு ஒரு புதுமையாக இருந்தன.

அன்று முதல் ஓர் ஆவல் கிளர்ந்து கிளர்ந்து எழுந்தது. சிரிக்க வேண்டும்; விளையாட வேண்டும்; பெரிய உத்தியோகத்திற்குப் போக வேண்டும். சொற்பொழிவாற்ற வேண்டும். மகாகவி ஆக வேண்டும்.

அப்படியும் கழிந்தது சிறிது காலம்.

நினைவுகள்.

நாங்கள் இங்கே வந்து சேர்ந்தோம். எனக்கு வயது பதினான்கு ஆயிற்று. தனித்தங்க நிறம். அண்ணன்கள் என்னை ஃபுட்பால் என்றுதான் கூப்பிடுவார்கள்.

'ஓவல்டின்'னும் 'ஸானடோஜென்'னுமாக அப்படிச் சிறிது காலம். அப்போது சொற்பொழிவு மேடையை விடவில்லை. கவிதையும் எழுதத் தொடங்கினேன். எழுத்துகள் போன்ற கவிதைகள்.

எல்லாரும் சிரிப்பார்கள்.

நானும் சிரிப்பேன்.

சிறுமிகள் சிலர் என்னை அகங்காரி என்று அழைப்பார்கள். யார் பொருட்படுத்தியது? டீச்சருக்கு என்னைப் பிடிக்கும். கிளாஸில் முதலாவது வேறே.

அன்று அப்பாவும் அம்மாவும் கொட்டாரக்கரா போயிருந்தார்கள் ஒரு நாள். தேதி ஞாபகமில்லை (நாங்கள் கொட்டாரக்கரா போயிருந்தோம் பள்ளி விடுமுறையில்)

இரவு தூக்கத்திலிருந்து நான் சட்டென்று விழித்துக் கொண்டேன். இயல்பாகவே பயம் அதிகமுள்ள நான் அம்மாவின் பக்கத்தில் தான் படுப்பது. அம்மாவைத் தடவித் தேடினேன். காணோம்.

அதற்கிடையே ஓர் அழுகை கேட்டது.

மகிழ்ச்சியற்ற ஓர் உரையாடல் (நான் நிறைய கதைகளும் புத்தகங்களும் வாசித்த பதினான்கு வயதான ஒரு சிறுமி என்பதை மறக்க வேண்டாம்)

வீறிட்ட ஓர் அலறல். தலை முழுக்கச் சுற்றியது.

அம்மாவின் கெஞ்சுவதும் பயந்ததுமான குரல்.

''எனக்கு இஷ்டமில்லே. என்னை உபத்திரவம் பண்ணாதீங்கோ'' அம்மாவின் அழுகை. அப்பாவின் குரல்.

நானும் அழுதேன். சத்தமின்றி. மூச்சு விடாமல் அழுதேன்.

ஹோ! அது ஒரு பயங்கர நாடகத்தின் துவக்கம் என்று யாருக்குத் தெரியும்!

பள்ளி தொடங்கியது. நாங்கள் இங்கே வந்தோம். (இடையில் அதாவது நான் 5,6,7 என்ற வகுப்புகளில் படித்துக் கொண்டிருந்த போது அப்பாவுக்கு வேலை இல்லை. அதனால் நான் இங்கே சேர்ந்தேன். பிறகு 'ஸ்டேட்' மாறியதனால் சங்கடம் வந்து விடுமோ என்று கருதி என்னையும் அங்கே

படிக்கின்ற அண்ணன்களையும், அப்பாவின் மருமகளையும் இங்கே கொண்டு வந்து விட்டார்.)

ஒரு கடிதம் வந்தது. அப்பாவுடையது. அம்மாவை அவள் வீட்டில் கொண்டு போய் விட்டுவர அண்ணனை வரச் சொல்லி.

அப்பா இல்லாது அப்பாவினுடைய எந்த ஒன்றையும் அனுபவிப்பது இல்லை யென்று சபதம் செய்து விட்டு அம்மா ஊருக்குப் போனாள்.

இதற்கிடையே தான் சம்பாதித்த சொத்துக்களை எல்லாம் எழுதி வைத்து விட்டிருந்தார். ஒவ்வொருத்தருக்கு இன்னது தான் என்று ரிஜிஸ்தர் செய்த உயில் தான பத்ரம். அதில் அவருடைய செல்வ மகளுக்கு மட்டும் 25,000 ரூபாய் மதிப்புள்ள சொத்து கொடுத்திருந்தார்.

குடும்ப உறுப்பினர் எல்லாருக்கும் தாராளமாக சொத்து கொடுத்திருந்தார். மேற்பார்வை மட்டும் தந்தையின் அதிகாரத்தில்.

எனக்கு வயது பதினைந்து ஆயிற்று. பத்தாம் வகுப்பு.

ஒரு மகா மருமக்கத்தாயக்காரர் ஆன அப்பா எங்களுக்கு சொத்துத் தந்ததில்– குறிப்பாக ஆண் மக்களுக்கு– கவலைப்படத் தொடங்கினார். ஆனால் காரியம் கை மீறிவிட்டது.

உணர்விலும் இயல்பிலும் அவர் விரும்புகிற அப்பாவின் மாமன் மகள்களை மட்டுமே அண்ணன் மார் கல்யாணம் செய்ய வேண்டுமென்று அப்பா உத்தரவிட்டார்.

இருப்பதில் நல்லவளை மூத்த அண்ணன் திருமணம் செய்து கொண்டான்.

பாக்கி இருப்பவர்களை மற்ற சகோதரர்கள் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். ஆக்ஞை!

அதிகம் படித்து நவீன நாகரிகத்தோடு வாழ்ந்து வந்த அண்ணன்கள் அப்பாவின் ஆக்ஞையைப் புறக்கணித்தனர். கல்யாணம் செய்து கொள்ள மறுத்தனர்.

அப்பா குரூரமாக மாறினார்.

ஒருநாள் காலையில் இரண்டாவது அண்ணன் அழுதுகொண்டே இந்தியாவை விட்டு வெளியேறினான்.

மூன்றாவது அண்ணன் ரங்கூனுக்கு போன விவரம் தெரிவிக்கும் கடிதம் மூன்று மாதம் கழித்துக் கிடைத்தது.

அண்ணன்களின் மனோவேதனை.

அந்த மனோவேதனையோடு சொந்தத் தாயிடமும் கூட விடைபெற்றுச் செல்ல முடியாது போன அவர்களை நினைத்து நான் அழுதேன். ஊரில் அங்கே அம்மாவும்... வீட்டில் முழு நேரமும் அழுதோம்.

அப்போது ஓர் உபாயம் தோன்றியது.

ஹிந்தி... டைப் ரைட்டிங்.... ஷார்ட் ஹாண்ட் தவிர பள்ளிப் படிப்பு... வேலையே கவனமானேன்.

வெளியே எல்லோரும் ஆச்சரியப்பட்டனர்.

"அசாத்தியமான புத்திக் கூர்மை!"

"எப்போதும் சிரித்துக் கொண்டிருக்கிற பெண்!"

அஹோ லோகமே! அந்தப் பிஞ்சு



''நம்ம ராமசாமிக்கிட்டே கடன் கொடுத்தா வாங்கவே முடியாதுப்பா?''

''தெரிஞ்சும் பிறகு ஏன் கொடுத்தே?''

''டாக்டர் டெய்லி காலையிலே ஒரு கிலோ மீட்டர் நடக்கச் சொல்லியிருக்காரே... அதனாலேதான் கொடுத்தேன்!''

– சீத்தா தம்பி

இதயம் நொறுங்கிய நொறுங்கல்! நிசப்த முறையீடுகள் ஒரு ஆள் மட்டும் கேட்டுக் கொண்டிருந்தார்.

தெய்வம்.

அவருடைய மார்பிலே தன் தலையைச் சாய்த்து அவள் ஆறுதல் அடைந்தாள்.

அனுதாபங்கள் கண்ணுக்குத் தென்படாதபோது இடைவிடாத பெருமூச்சுகள் அவள் இதயத்தைக் குளிர்வித்தன.

ஏனென்று எனக்குச் சொல்லத் தெரியவில்லை. பன்னிரெண்டு வயது முதல் நான் வெள்ளை உடை அணியத் தொடங்கினேன்.

"பணம் உண்டு. இருந்தாலும் அந்தப் பெண்ணைப் பாரேன்! நிறைகுடம் தளும்



# முக்கியமான மூன்றாவது...!

● சந்தேகம் எழும் போது மூன்றாவது அம்பயரைக் கேட்டு முடிவெடுக்கலாம் என்ற முறை 1992ல் டர்பன் டெஸ்ட் பந்தயத்தில்தான் அறிமுகமானது.

● பலவித டி.வி. ரீப்ளேக்களைப் பார்த்து முடிவெடுக்கும் மூன்றாவது அம்பயர் மேற்படி பந்தயத்தில் சச்சின் டெண்டுல்கர் 'ரன் அவுட்' என்று முடிவு கூறினார். இப்படி 'சிவப்பு விளக்கை எரிய விட்டதன் மூலம் அவுட்டான' முதல் பேட்ஸ்மேன் என்ற பெருமையும் சச்சினுக்குத் தான்!

● மூன்றாவது அம்பயரை நடைமுறையில் சர்வதேச கிரிக்கெட் குழு ஏற்றுக் கொண்டாலும், இதற்கேற்ற வகையில் கிரிக்கெட் விளையாட்டு விதிகளில் இதுவரை எந்தவித மாற்றமும் செய்யப்படவில்லை.

● எவ்வளவு டி.வி. ரீப்ளேக்களை வேண்டுமானாலும் மூன்றாவது அம்பயர் போட்டுப் பார்க்கலாம். ஆனால் முப்பது நொடிகளுக்குள் தம் முடிவை அறிவித்துவிட வேண்டும்.

● 'ரன் அவுட், ஸ்டம்ப்ட், ஹிட் விக்கெட், கேட்ச்'– இந்த வகையில் அவுட் ஆவது தொடர்பாகவும், எல்லைக்கோட்டைப் பந்து தாண்டுவது தொடர்பாகவும் மட்டுமே மூன்றாவது அம்பயரைக் கலந்தாலோசிக்கலாம்.

● மைதானத்தில் உள்ள அம்பயர்கள் மட்டுமே தங்களுக்கு சந்தேகம் எழும்போது மூன்றாவது அம்பயரை அணுகலாம். எந்த ஆட்டக்காரரும் 'நீங்கள் வேண்டுமானால் மூன்றாவது அம்பயரின் உதவியை நாடுங்கள்' என்று அப்பீல் செய்யக் கூடாது.

● மூன்றாவது அம்பயரின் முடிவுகள் கூட எப்போதாவது சந்தேகத்துக்கிடமாவதுண்டு. 1997ல் தென்னாப்பிரிக்காவில் நடந்த முக்கோண கிரிக்கெட் தொடரில், சச்சின் டெண்டுல்கர் அடித்த பந்தை ஜான்ட்டி ரோட் சரியாகப் பிடித்து விட்டதாகவே நினைத்திருக்க, ஸ்லோமோஷனில் காட்டப்பட்ட ரீ–ப்ளேக்கள் வேறு மாதிரி முடிவை (அவ்வளவு தெளிவாக இல்லையென்றாலும்) சுட்டிக்காட்டின.

● மின்வெட்டு காரணமாக, மூன்றாவது அம்பயரால் முடிவெடுக்க முடியாமல் போனால் என்ன செய்வது? அவர் உடனே வெள்ளை நிற ஒளிக் கதிர்களை தம்மிடமுள்ள டார்ச் மூலம் வெளிப்படுத்துவார். இதைக் கண்டதும் களத்திலுள்ள அம்பயர்கள் தாங்களாகவே முடிவெடுத்து அறிவிக்க வேண்டும்.

– ஜி.எஸ்.எஸ்.

பறதில்லே" என்று சொல்வார்கள் சிலர்.

நகைகளையும் உபயோகிப்பதில்லை. ஒரு லட்சியச் சிறுமியைப் போல மிகவும் எளிய நிலையுள்ள ஒரு வாழ்க்கை வாழ்ந்தேன். அன்றும் படிப்பில் முதலாவதாக இருந்தேன். சொற்பொழிவிலும் கவிதை வாசனை குறையத் தொடங்கியது. அன்று என் எடை 116 பவுண்ட்.

இதற்கிடையே அப்பாவைப் பற்றிப் பல கதைகளை நான் கேள்விப்பட்டேன். மிகவும் பயங்கரமான கதைகள். பச்சாதாபத்தினால் என் இதயம் அவருக்காக மிகவும் நொந்தது.

நான் கூட மன்னிப்புக் கொடுக்காவிட்டால்...

அப்பாவுக்காக நான் பிரார்த்திக்கத் தொடங்கினேன். அம்மாவுக்கு அவர் செய்த கொடுமைகள், அம்மா பற்றின்றி யாருக்காக எல்லாம் சகித்தாளோ அந்த பிள்ளைச் செல்வங்கள் அவளை விட்டு விலகின. அன்னிய நாடுகளில்.

அம்மாவின் மனசாந்திக்காகவும் நான் பிரார்த்தித்தேன்.

அப்பாவின் மருமகன் அன்று பி.ஏ. (மாத்ஸ்) படித்துக் கொண்டிருந்தான். அநாவசியமாக வேலையின்றித் திரியும் பெண்கள் வாய்க்கு வந்தபடி பேசும் தோரணையில் என் உறவினர் எங்கள் இருவரையும் ஜோடி சேர்த்துப் பேசத் தொடங்கினர். எனக்காகத் தான் அவரை அப்பா படிக்க வைக்கிறார் என்று.

(தொடரும்)

# ADOPT ONE VEDAMANTRA — BEGET ONE CRORE PUNYA

## தர்மோ ரக்ஷதி ரக்ஷித : – வேதம் காப்பவனை வேதம் காக்கும்!

★ வேதம் உலகின் தொன்மையான நூல். பல காரணங்களால் உலகெங்கும் ஒரு சமயம் பரவியிருந்த வேதம் இன்று ஒரு சிலரிடையே மட்டும் புழங்கி வருகிறது. வேதத்தில் ஆர்வம் குறைந்துவர ஒரு முக்கிய காரணம் அது பாமர மனிதனுக்கு தெரியாத, புரியாத மொழியில் இருப்பதே. மற்றொரு காரணம் வேத மந்திரங்களின் உண்மை அர்த்தங்கள் ஒரு சிலருக்கு மட்டுமே தெரிந்துள்ளதும் ஆகும். வேதம் ஓதுபவர்களில் 100க்கு 99.99% பேர் அர்த்தம் தெரியாமலேயே கற்றும் ஓதியும் வருகிறார்கள். இந்த பெரிய குறை நீக்கப்பட்டால் வேதத்தின் மகிமையும் பெருமையும் பன்மடங்கு உயரும் என்பதில் சந்தேகமில்லை. அது மட்டு மல்லாமல் கற்றுக் கொள்பவர்களின் எண்ணிக்கையும் கண்டிப்பாக உயரும்.

★ இதை கருத்தில் கொண்டு **HAYOGA VEDAS/YOGAKSHEMA TRUST** நான்கு வேதங்களில் உள்ள 20,000த்திற்கும் அதிகமான மந்திரங்களை மொழி பெயர்த்து அவை ஒவ்வொன்றிலும் பொதிந்துள்ள உண்மையான அர்த்தம் மற்றும் தத்துவங்களை விஞ்ஞான ரீதியில் தமிழில் விரிவான விளக்கங்களுடன் வெளியிட முடிவு செய்யப்பட்டுள்ளது. (Laser printing method).

★ மனிதனின் வாழ்க்கை ஆனந்தமாக, அமைதியாக, நோய்களில்லாத, சச்சரவுகள் இல் லாத, எல்லா முன்னேற்றங்களும் தடங்கலில்லாமல் அமைந்திட – அது போலவே நாட்டின் பொருளாதார, அரசியல், சமூக விஞ்ஞான, தர்மங்கள் அமைந்திட, அதர்வ வேதம் ஆக்கப்பூர்வ மான கருத்துக்களை சொல்வதால் முதலில் இந்த வேதத்தின் மொழி பெயர்ப்பு தொடங்கப் பட்டுள்ளது.

★ இன்றைய உலகின் ''வேத வியாசர்'', "Max Mueller" என்று புகழப்படும் **ஸ்ரீ உ.வே. அக்னிஹோத்ரம் ராமானுஜ தாதாசாரி ஸ்வாமி** அவர்கள் இந்த அர்த்தங்களை அளித்திட இசைந்துள்ளது நாம் செய்த மிகப் பெரும் பாக்கியம்.

★ 'A-4' size ல் அமைய இருக்கும் இப்புத்தகங்களின் ஒவ்வொரு பக்கத்திலும் முதலில் சமஸ்கிரதத்தில் வேத மந்திரமும், பிறகு அதனுடைய தமிழாக்கமும், தொடர்ந்து ஆங்கில மொழி பெயர்ப்பும், தொடர்ச்சியாக அவைகளின் பதவுரை, கடைசியில் விரிவான அர்த்தங் களும், வ்யாக்யானங்களும் கொடுக்கப்பட்டிருக்கும்.

★ ஒரு மந்திரம் (பக்கம்) Laser print மூலம் அச்சிட ரூ. 125/- தேவைப்படுகிறது. ஆகவே ''ஒருவர் ஒரு மந்திரம்'' என்ற அடிப்படையில் ஆஸ்திக பெருமக்கள் ஒரு பக்கத்தை 'தத்தெடுத்து'' (Adopt) அதற்கு தேவையான ரூ. 125/- உபயத்தை ஏற்று வேத புருஷனின் ஆசியை பெற்றிட அன்புடன் அழைக்கிறோம்.

ஒவ்வொரு பக்கத்தின் அடியில் உபயதாரரின் பெயரும், புகைப்படமும் அச்சிடப்படும்.

சென்னை வாசிகள் காசோலையாகவும், வெளியூரில் உள்ள உபயதாரர்கள் Demand Draft/ M.O. மூலமாகவும் **HAYOGA VEDAS** என்ற பெயரில் கீழ்கண்ட விலாசத்திற்கு அனுப்பி, தொடர்பு கொள்ளவும். தங்களின் Black and White passport photoவையும் அனுப்பவும்.

**HAYOGA VEDAS (YOGAKSHEMA TRUST)**

**17/16, PEYALWAR KOIL STREET, TRIPLICANE, CHENNAI - 600 005. INDIA.**

குறிப்பு : தபால் செலவு மற்றும் வேறு செலவுகளைக் கருத்தில் கொண்டு வெளி நாட்டில் உள்ளவர்கள் US$10 அனுப்பிட வேண்டுகிறோம்.



• கூடுமா? வேண்டுமா?



• மீண்டும், மீண்டும்

# ஜெயலலிதா செய்த தியாகம்..?

● அ. ராஜா ரஹ்மான், கம்பம்.

? அடுத்த பிரதமர் யாராக இருக்கக் கூடும் என்று கருதுகிறீர்கள்?

! 'கூடும்' என்பது வேறு, 'வேண்டும்' என்பது வேறு. 'கூடும்' என்றால், இன்றையச் சூழலில் கணிக்கும்போது வாஜ்பாய்க்குத்தான் அதிக வாய்ப்பு.

● நாகை சந்திரா, நாகப்பட்டினம்.

? வரலாற்றில் இடம் பெறக் கூடிய வகையில் ஜெயலலிதா தியாகம் செய்திருக்கிறார் என்று சுப்ரமண்ய சுவாமி கூறியிருக்கிறாரே... எதைத் தியாகம் என்று குறிப்பிடுகிறார்?

! கண்ணியம், கௌரவம், அரசியல் நேர்மை, தோழமை - இதையெல்லாம் தியாகம் செய்வது இலேசுப்பட்ட விஷயமா?!

● சு.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

? அரசியலில் இன்று ஒரே மாதிரி சிந்திக்கும் இருவரை உங்களால் அடையாளம் காட்ட முடியுமா?

! அரசியல்வாதிகள் எல்லாருமே ஒரே மாதிரிதான் சிந்திக்கிறார்கள். அதனால்தான் அரசியல் இத்தனை கேடு கெட்டுக் கிடக்கிறது.

● ப. சுகுமார், தூத்துக்குடி - 1.

? பி.ஜெ.பி.யின் மதவாதத்தை விடவும் ஜெயலலிதாவின் லஞ்ச ஊழல், ஆணவப் போக்கு ஆகியன நாட்டுக்கு ஆபத்தானவை என்று கருணாநிதி கருதுவதாகக் கூறியிருக்கிறீர்களே? லஞ்ச - ஊழல் போன்றவற்றை நமது நீதி, சட்டங்கள் மூலம் நிவர்த்தி செய்யலாம். ஆனால் மதவாதம் என்பது நாட்டையே உருக்குலைத்து விடுமே?

! அவருடைய கருத்து என்றுதான் கூறினேனே தவிர, என் கருத்து என்று சொல்லவில்லையே! என் கருத்துப்படி லஞ்ச-ஊழல், மதவாதம் இரண்டுமே சம அளவுக்குக் கண்டனத்துக்கு உரியவைதான். அது சரி, லஞ்ச ஊழலை அவ்வளவு சுலபமாக நமது சட்டங்கள் மூலம் நிவர்த்தி செய்து விட முடியும் என்று நிஜமாகவே நம்புகிறீர்களா? அப்படியானால் நாட்டு நடப்புகளை நீங்கள் சரியாக கவனிக்கவில்லை.

● தி. மகாராசன், கடமலைக்குண்டு

? இந்தியாவின் ஜனநாயகம் அதன் பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக இருக்கிறதா? இல்லையா?

! ஜனநாயகம் தடை அல்ல. ஜனநாயகத்தைச் செருப்பால் அடிப்பவர்கள்தான் தடை.

● அஜார், சென்னை - 18.

? 'என்னை நிதிமந்திரி ஆக்கியிருந்தால் வாஜ்பாய் அரசைக் கவிழ்த்திருக்க மாட்டேன்' என்கிறாரே சு. சுவாமி?

! இதன் பிறகும் அவரது சுயரூபத்தை மக்களும் சக அரசியல்வாதிகளும் அறிந்து கொள்ளவில்லையானால் இந்தியாவை யாருமே காப்பாற்ற முடியாது!

● ஆர். ராம்மோகன், தென்மேனி.

? மதவாதம் பற்றி வாய் கிழியப் பேசும் மார்க்ஸிஸ்ட் தலைவர் ஹர்கிஷன்சிங் சுர்ஜித், சீக்கிய மதத்தின் புறச் சின்னமான தாடியையும் தலைப்பாகையையும் சுமப்பானேன்?

! அது அவரது தனிநபர் சுதந்தரம். அதில் நாம் தலையிட முடியாது. ஆனால் அரசியலில் புகுத்தப்படும் மதவாதம் வேறு. அதிலும் பி.ஜே.பியின் மதவாதம் பிற மத விரோதத்தை விசிறி விடும் தன்மையது. அதை அவர்கள் கைவிடுவார்களேயானால் அரசியல் ரீதியாகவும் சரி, சித்தாந்த ரீதியாகவும் சரி, மிக உயரத்துக்குப் போவார்கள்.

● ஷோபனாதாசன், நாட்டரசன்கோட்டை.

? 'லோக் சபாவுக்கு இடைத்தேர்தல் வருவது நாட்டுக்கு நல்லதல்ல' என்று ஜெ கூறியிருக்கிறாரே?

! அவர்தானே அதற்கு வழி வகுத்தார்! எனவே தேச நலன் கருதாமல் தாம் செயல்

பட்டிருப்பதை ஒப்புக் கொண்டவரா கிறார்.

● டி.எஸ். பானு, சென்னை – 35.

? மக்களின் படிக்கும் பழக்கத்தை அதிகரிக்கச் செய்ய மாவட்டத் தலைநகர்களில் நிரந்தர புத்தகக் கண்காட்சி அமைக்க அரசு முன்வந்தால் என்ன...?

! இருக்கிற நூலகங்களை நன்றாகப் பராமரித்து சிறப்பாக நடத்தினாலே போதுமே. ஆனால் நம் நூலகங்களே 'கண் (கொள்ளா!) காட்சி'யாக அல்லவா விளங்குகின்றன!

● நெய்வேலி க. தியாகராஜன், குடந்தை.

? 'ஒரு கன்னத்தில் அடித்தால் இன்னொரு கன்னத்தைத் திருப்பிக் காட்டு' என்றார் ஏசு. "என்னை யாராவது ஒரு அடி அடித்தால் பத்தாகத் திருப்பிக் கொடுப்பேன்" என்கிறார் ஜெயலலிதா. இதைப் பரிணாம வளர்ச்சி எனக் கூறலாமா?



• பூசி மெழுகி



• சுமக்கும் சின்னம்!?



• வரலாறு...



• சாதனை லெவி!



•... வரைவோர்!

! அல்ல; பரிமாண வளர்ச்சி! இனி அவர் ஜெயித்து வந்தால் முன்பு தம்மைத் தோற்கடித்ததற்காக ஜனங்களை என்ன பாடு படுத்துவாரோ! நினைத்தாலே கதி கலங்குகிறது. மக்கள் யோசித்து வோட்டுப் போட வேண்டும்.

● எம். குணசேகரன்,
வேலாயுதம்பாளையம்.

? உலக அளவில், தொழில் துறையில் மிகச் சிறந்த இளம் சாதனையாளராக சன் டீ.வி. யின் நிர்வாக இயக்குனர் கலாநிதி மாறன் தேர்வு செய்யப்பட்டிருப்பது பற்றி...?

! அரசியல் பின்னணியையும் மீறி சாதிக்கப்பட்டது என்பதால் உண்மையிலேயே அது பாராட்டப்பட வேண்டிய சாதனைதான்.

● கே.ஆர். வெங்கடேஷ், சீர்காழி.

? சென்னையிலிருந்து கிளம்பிய ஓர் 'அழிவு சக்தி', கோமானி சுவாமியின் தேநீர் விருந்தில் 'பூகம்பமாக' மாறி இப்படி இடைத்தேர்தலை ஏற்படுத்தி, சுமார் ஆயிரம் கோடி ரூபாய் நாட்டுக்கு நஷ்டம் ஏற்படுத்தி விட்டதே...?

! ஒரே நாளில் அந்த 'சக்தி' ஆறு நிறுவனங்களைப் பத்திரப் பதிவு அலுவலகத்தில் பதிவு செய்ததாக சிறப்பு நீதிமன்றத்தில் சாட்சி சொல்லப்பட்டிருக்கிறது. ஆயிரம் கோடியை, சொத்துப் பறிமுதல் மற்றும் அபராதங்கள் மூலம் அந்த சக்தியிடமே வசூல் பண்ண வேண்டியதுதான்!

● ஆரூர் அரசு, திருவாரூர்

? 2.5.99 இதழில் 18 கேள்விகளில் 13 கேள்விக்கு ஜெயலலிதா பற்றியே கூறியிருக்கிறீர்கள். ஆத்திரம் தணிந்து விட்டதா?

! அப்படியானால் ஜெ பற்றி எத்தனை கேள்விகள் வந்திருக்கும், யோசித்துப் பாருங்கள்!

● ப. இராம் முருகன்,
சிவகங்கை.

? தேச நலனுக்காகத்தான் இந்த அரசைக் கவிழ்த்தோம் என்கிறாரே சேடப்பட்டி முத்தையா?

! கவிழ்ப்பு முயற்சியில் ஒத்துழைக்காத காரணத்தைப் பூசி மெழுக இப்படிப் பேசுகிறார் போலிருக்கிறது.

● பி.எம். வள்ளி, மதுரை.

? மீண்டும் மீண்டும் சந்தன வீரப்பனின் கடத்தல் தொடர்கிறதே? இதற்கு முடிவுதான் என்ன?

! வீரப்பனைக் கடத்தி வந்து சிறை வைப்பதுதான்.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர்:

ஆர். ராம்மோகன்,
என். மேட்டுப்பட்டி,
நென்மேனி 626 202
சாத்தூர் தாலுகா.

# வட்டமேஜை

✉ 'குடியரசுத் தலைவரா? காங்கிரஸ் தலைவரா?' போன்ற துணிச்சலான விமர்சனத்தை நான் இதுவரை எந்த இதழிலும் காணவில்லை. ஜனாதிபதியே ஆனாலும் குற்றம் குற்றமே! என்ற நக்கீர விமர்சனம் வாழ்க! வளர்க!
கோட்டையூர், நா. சங்கர்.

✉ 'குடியரசுத் தலைவரா? காங்கிரஸ் தலைவரா?' தலையங்கம் இந்திய மக்கள் இதயங்களில் எழுந்த ஐயங்களை அப்படியே பிரதிபலித்தது.
பெங்களூர் - 47, மு. புஷ்பராசன்.

✉ தேர்தல் அறிவிப்பைத் தாமதப்படுத்துவதன் காரணமாக குடியரசுத் தலைவரை, காங்கிரஸ் தலைவர் எனக் குறிப்பிட்டிருப்பது சற்று மிகையே! கே.ஆர். நாராயணன், தம்மைப் பிற குடியரசுத் தலைவர்களிடமிருந்து மாறுபட்டவர் என்று பல சந்தர்ப்பங்களில் வெளிப்படுத்தியிருக்கிறார்.
தூத்துக்குடி - 1, ப. சுகுமார்.

✉ மரணத்தின் போது பணம் தருவது பிலிப்பைன்ஸில் மட்டுமல்ல; நமது தென் மாவட்டங்களில் கூட 'கட்டை மொய்' என்ற

## நக்கீரத் தலையங்கம்!

பெயரில் எழுதப்படுகிறது! இது இறந்தவரின் ஈமச் சடங்கு செலவுகளுக்குப் பயன்படுத்தப்படுகிறது!
அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

✉ ஆர். பத்மநாபனின் வ.கு, மா.சி. சினிமாக் கவிதை அற்புதம்! கல்கியின் கதாபாத்திரங்களை வைத்து நகைச்சுவைக் கவிதை எழுதினால் கல்கியின் எழுத்து போலவே நயமான நகைச்சுவை அமைவது ஆச்சர்யம். பாடலில் ஆங்காங்கே கோரஸ் என்று சில வரிகள் மறுபடி மறுபடி வருவது சிரிப்பை வரவழைத்தது.
சென்னை - 91, பாலகல்கி.

✉ பொன்னியின் செல்வன், சிவகாமியின் சபதம் பற்றி கிண்டல் பாடல்களா? இதற்கு கல்கியே தளம் அமைத்துக் கொடுக்கலாமா? மனம் ஒப்புக் கொள்ளவில்லை!
மதுரை, இரா. கல்யாண சுந்தரம்.

✉ ரஜினி ரசிகர்களுக்கு சுமி, ரஜினியின் ரியல் மெஸேஜ்ஜை எடுத்துச் சொல்லியிருக்கும் விதம் சூப்பர்!
சென்னை - 73, கே. வி. ராமன்.

✉ 'மோனிஷா என் மோனலிசா' படத்தின் விமர்சன வரிகள் ஒவ்வொன்றிலும் பறந்தது நெருப்பு. எனவே அப்படம் பார்க்க எனக்கு இல்லை விருப்பு!
மதுரை - 16, நெல்லை. வி. சிவா.

✉ 25.4.99 கல்கி இதழில் அக்னி சர்மா பக்கத்தில் "சிம்ம ராசிக்காரரான ஜெவுக்கு கிரகங்கள் சாதகமாக இல்லையாம்" என்ற கணிப்பை வெளியிட்டிருந்தீர்கள். அது அப்படியே பலித்து, மாற்று அரசு அமைக்கும் முயற்சியில் தோல்வி கண்டு ஜெ. சென்னை திரும்புகிறார்! அக்னிசர்மா, நடக்கும் என்று சொன்னது நடந்து விட்டது!
மதுரை - 1, வி.எஸ். கோவிந்தன்.

✉ நான் எந்த ஒரு அரசியல் கட்சியையும் சேர்ந்தவள் அல்ல. பல பத்திரிகைகள் ஜெயலலிதாவின் ஊழல் ஆட்சியைப் பற்றிக் கண்டனம் செய்யும் பொழுது எனக்கும் அவர் மேல் நல்ல அபிப்பிராயம் வருவதில்லை. ஆனாலும் என்னுடைய சொந்த வாழ்க்கையில் மிகவும் துணிவான முடிவுகள் எடுக்கும்பொழுது அவரைத்தான் என்னுடைய மானசீக குருவாக நினைக்கிறேன்! ஆனால் ஒரு வருத்தம் உண்டு. இவ்வளவு தைரியசாலியான பெண்மணி நல்ல வழியில் போயிருக்கக்கூடாதா? ஏன் இப்படி அடிக்கடி திசை மாறுகிறார் என்பதுதான் அது!
பெங்களூர் - 3, தேன்மொழியாள்.

✉ தேக்குமரத் திட்டம் போன்ற திட்டங்களில் முதலீடு செய்து ஏமாறுவதை விட, முத்துமல்லா பாணியில், தம்மால் முடிந்த அளவு தமது வீட்டுத் தோட்டத்திலோ அல்லது குறைந்த அளவு நிலம் வாங்கி அதில் பயன்தரும் மரங்களைப் பயிரிட்டோ பலன் பெறலாமே! இதனால் நாட்டுக்கும் நலமல்லவா?
காரைக்குடி, பாலு.




## மேஜிக் நிபுணர் கே. லால்

# தலையெழுத்தை மாற்றிய இரண்டு அணா!

குஜராத்தில் ஜமீந்தார் குடும்பத்தைச் சேர்ந்தவன் நான். எங்கள் ஜமீனுக்கு வரும் இசைக் கலைஞர்கள், நாட்டியக் கலைஞர்கள். ஆன்மீகவாதிகள், புலவர்கள் என்று அனை வரும் எங்கள் பங்களாவில்தான் தங்குவார்கள். ஒரு சில தடவைகள், தெருக்களில், வித்தை காட்டும் கழைக் கூத்தாடிகளும் எங்கள் பங்களாவில் தங்கியது உண்டு. கழைக் கூத்தாடிகளின் கயிறு, நாணயம் இவற்றை வைத்துச் செய்கிற மேஜிக்குகள் என்னை மிகவும் கவர்ந்தன. என் ஆர்வத்தை அவர்களிடம் சொல்லி, அவற்றை நான் கற்றுக் கொண்டேன். அப்போது எனக்கு ஏழு, எட்டு வயதுதான் இருக்கும்.

ஒருமுறை என் உறவினர் ஒருவருடன் கல்கத்தா சென்றிருந்தேன். அங்கே மேஜிக் சக்ர வர்த்தி என்று புகழப்பட்ட கணபதி சக்ரவர்த்தியின் மேஜிக் நிகழ்ச்சி, ஒரு பொருட்காட்சியில் நடந்து கொண்டிருந்தது. நான் மேஜிக் பார்க்க விரும்பினேன். என் மாமா "மேஜிக் பார்க்கக் கூடாது; மந்திரவாதி சூன்யம் வைத்து விடுவான் என்று பயமுறுத்தினார். (அவர் என்னை பயமுறுத்தினார் என்பதைவிட, அவருக்கே உள்ளூர பயம் என்பதுதான் உண்மை!) நான் அடம் பிடித்தேன். வேறு வழியில்லாமல், அவர் இரண்டு அணா டிக் கெட் இரண்டு வாங்கி, என்னை மேஜிக் பார்க்க அழைத்துச் சென்றார்.

மேஜிக் காட்சி முடிந்தது. நான் கணபதி சக்ரவர்த்தியை சந்திக்க வேண்டும் என்றேன். என் மாமா என்னை மறுபடி பயமுறுத்தி, அந்த இடத்திலிருந்து அழைத்துப் போவதிலேயே குறியாக இருந் தார். நான் விடாப்பிடியாக இருந்தேன். 'சும்மா, பார்த்து

விட்டு வந்துவிட வேண்டும்; மந்திரவாதியுடன் பேசக் கூடாது'' என்று சொல்லி, அழைத்துக் கொண்டு போனார்.

கணபதி சக்ரவர்த்தியைப் பார்த்ததும், எனக்குப் புல்லரித்தது. கழைக் கூத்தாடிகளிடம் கற்றுக் கொண்ட மேஜிக் தவிர நான் அடிக்கடி மேஜிக் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பவன் என்பதால், நானே யூகித்து, இந்த மேஜிக்கில், ட்ரிக் இதுதானே என்று பேச ஆரம்பித்தேன். மாமா, ஒன்றும் செய்ய முடியாமல் சும்மா நின்று கொண்டிருந்தார். நான் பேசப் பேச, ஆர்வமாகக் கேட்டுக் கொண்டிருந்த கணபதி சக்ரவர்த்தி, மிகவும் மகிழ்ந்து போனார்.

"நீ பிறவி மேஜிஷியன்; நீ பெரிய மேஜிக் நிபுணர் ஆகி, உலகையே அதிசயப்பட வைக்கப் போகிறாய்'' என்றார். என் மாமாவிடம், "இவனை என்னிடம் விட்டு விடுங்கள்; இவனை, உலகப் புகழ் பெற வைக்கிறேன்'' என்றார். மாமா சம்மதிக்கவில்லை. மறுபடி பிடிவாதம். ஒருவழியாக கணபதி சக்ரவர்த்தியிடம் சிஷ்யன் ஆனேன். இரண்டு அணா கொடுத்து வாங்கின டிக்கெட் என் வாழ்க்கையையே திசை மாற்றியது.



**க**ணபதி சக்ரவர்த்தியிடம் மேஜிக் கற்றுக் கொண்டபின், மறுபடி ஊருக்கு (குஜராத்) போய் விட்டேன். நான் மேஜிக் செய்தது கண்டு, என் உறவினர்கள் என்னை சாத்தான் பிடித்துக் கொண்டிருக்கிறது, நான் பில்லி சூனியம் வைக்கத் தெரிந்தவன் என்றெல்லாம் நம்பத் தொடங்கினார்கள். என் பெற்றோர் மேஜிக்கை விட்டு ஒழித்து விடு என்றார்கள். எங்கள் குடும்பத்துக்கும், மற்ற உறவினர்களுக்குமான உறவே அறுந்து போய் விடும் சூழ்நிலை ஏற்பட்டது. "எனக்குக் கொஞ்சம் பணம் கொடுங்கள்; தனியே போய் பிழைத்துக் கொள்ளுகிறேன்'' என்று என் அப்பாவிடம் கேட்டபோது ஐயாயிரம் ரூபாய் கொடுத்தார். நான் பிஸினஸும் செய்து சம்பாதிக்க வேண்டும்; மேஜிக்கையும் தொடர வேண்டும் என்ற எண்ணத்துடன், கல்கத்தாவுக்கு ரயில் ஏறினேன்.

கல்கத்தாவில் என் அப்பா கொடுத்த ஐயாயிரம் ரூபாயை முதலீடு செய்து, துணி வியாபாரம் ஆரம்பித்தேன். மும்பையிலிருந்து, பல வகைத் துணிகளையும் வரவழைத்து, வியாபாரம் செய்தேன். நல்ல பிசினஸ். ஒரே வருடத்தில் சொந்த வீடு வாங்கினேன். என் செலவிலேயே என் குடும்பத்தினரை கல்கத்தாவுக்கு வரவழைத்தேன். மேஜிக்கும் தொடர்ந்தது; முன்னிலும் தீவிரமாக!

**இ**ந்தியாவெங்கும் எனது மேஜிக் நிகழ்ச்சிகளுக்கு பலத்த வரவேற்பு. அந்தக் காலத்தில் ஒரு ஷோவுக்கு ஒரு லட்சம் ரூபாய் வசூலானது மாபெரும் சாதனை. உலகின் பல நாடுகளுக்கும் சென்று, மேஜிக் நிகழ்ச்சிகள் நடத்தி, பெரும் புகழும், பணமும் நிறைய சம்பாதித்தேன். உலகின் அதிவேக மேஜிக் நிபுணர் என்ற பெருமையும் எனக்குக் கிடைத்தது. ஏராளமான பணம் பார்த்து விட்டாலும், நான் பிறந்த குஜராத் மாநிலத்தின் அரசாங்கம், என்னை கௌரவிக்கும் விதமாய் ஐம்பதாயிரம் ரூபாய் பரிசளித்ததை நான் பெருமையாக இன்றும் நினைக்கிறேன்.

இதுவரை பதினேழாயிரத்துக்கும் மேல் மேடை நிகழ்ச்சிகள் வழங்கியிருக்கிறேன். ஆனால், ஆண்டவன் அருளால், இன்று வரை ஒரு விபத்தும் நடந்ததில்லை. ஒரு தடவை மும்பையில் என் மேஜிக் நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது. இறுதிக் கட்டத்தில், படுக்க வைக்கப்பட்ட பெண்ணை ஒரு பெரிய ரம்பத்தால், இரண்டு துண்டாக அறுக்கும் நிகழ்ச்சி. அதைப் பற்றி ஆடியன்சுக்கு அறிவித்து விட்டேன். தயாராய் இருக்கும் ராட்சஸ ரம்பத்தைப் பிடித்தேன். பளீரென்று ஒரு மின்னல் அடித்தது போல உணர்ந்தேன். ஒரு பெரிய கை என் முன்னே தோன்றி 'நிறுத்து' என்று கட்டளை இட்டது போல இருந்தது. தலையைத் திருப்பி, ரம்பத்தை உற்று கவனித்தேன். ரம்பம் சுழலும் அச்சில், பொருத்தப்பட்டிருந்த நட்டுகள் தளர்த்திவிடப்பட்டிருந்தன. அதை மட்டும் கவனிக்காமல், நான் மோட்டாரை இயக்கி, ரம்பத்தைச் சுழல விட்டிருந்தால் மேஜிக்கிற்காக இல்லாமல் நிஜமாகவே அந்தப் பெண் வெட்டுப்பட்டிருப்பார். பெரிய, வட்ட

விடிவ ரம்பம் கைநழுவி மேடையிலிருந்து ஆடியன்ஸ் பகுதிக்கு உருண்டு போய், விபரீத விளைவுகளை ஏற்படுத்தி விட்டிருக்கும். மானசீகமாக கடவுளுக்கு நன்றி சொன்னேன்.

ஆனாலும் நிகழ்ச்சியை ரத்து செய்ய நான் விரும்பவில்லை. அதே நேரம், தளர்த்தி விடப்பட்ட நட்டுகளையும் டைட் செய்யவில்லை. நிகழ்ச்சி தொடர்ந்தது. நான் டைட்டாக அச்சினைப் பிடித்துக் கொண்டு, ஜாக்கிரதையாக ரம்பத்தைச் சுழல விட்டேன். வெற்றிகரமாக நிகழ்ச்சி முடிந்தது. ரம்பத்தின் அச்சை, அழுத்திப் பிடித்திருந்த என் உள்ளங்கையில், ரத்தம் வடிந்தது. இந்த திரில்லிங்கான நிகழ்ச்சிக்கும் பணத்துக்கும் என்ன சம்பந்தம்? என்று நினைக்கிறீர்களா? என்னுடைய மரியாதைக்குரிய எதிரி (சக மேஜிக் கலைஞர்தான்) ஒருவரது விருப்பப்படி பத்தாயிரம் ரூபாய் வாங்கிக் கொண்டு, ரம்பத்தின் நட்டுகளைத் தளர்த்தி விட்டவர். எங்கள் நிகழ்ச்சியை மும்பையில் ஏற்பாடு செய்த ஏஜெண்டே தான்!

எனக்கு வயது எழுபத்து ஐந்து. இப்போது கூட நான் மேடையில் ஏறி விட்டால், சுறுசுறுப்பும் புத்துணர்ச்சியும் வந்து விடுகிறது. சில வருடங்களுக்கு முன்பு என் மனைவியும் மருமகளும் "உங்களுக்கு வயதாகிவிட்டது; இன்னமும் எதற்கு மேஜிக் செய்து கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் ரிடையர் ஆகிவிடுங்கள். ஜூனியர்லால் மேஜிக்கைத் தொடரட்டும்" என்றார்கள். எனக்கு இஷ்டமில்லை. அவர்கள் வற்புறுத்தலுக்காக, ஒப்புக் கொண்டேன். இரண்டே மாதத்தில் என் உடம்பு ரொம்ப வீக்காகி விட்டது. உடலும், மனசும் அடிக்கடி சோர்ந்து போயின. டாக்டர்கள் உடம்பில் எந்தவித பிரச்னையும் கிடையாது என்றார்கள். வீட்டிலே இருப்பது ஜெயில் தண்டனை போல இருந்தது. இனியும் தாக்குப்பிடிக்க முடியாது என்ற நிலையில் மறுபடி மேஜிக் ஷோவுக்குப் போனேன். மேக்அப் போட்டுக் கொண்டு மேடையேறிய மறு விநாடியே புதுப் பிறவி எடுத்தது போல உணர்ந்தேன். ஆக பணம் ஏராளமாக இருந்தும் கிடைக்காத நிம்மதியும் சந்தோஷமும் அன்று மேஜிக் ஷோ பார்த்தவர்களின் கைத்தட்டலிலும் பாராட்டிலும் கிடைத்தது. இந்த வார்த்தைகளில் மாயம் இல்லை. மந்திரம் இல்லை. நிஜம்!

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

ஏற்பாடு: **ராஜேஸ்வரி ஃபைன் ஆர்ட்ஸ் சுந்தரமூர்த்தி**

# வள்ளுவர் கோட்டம் சொன்ன பாடம்!

எங்களுக்குக் கொடுத்திருந்த விளையாட்டு மைதானத்தை, வள்ளுவர் கோட்டம் கட்டுவதற்கு எடுத்துக் கொண்டு விட்டபின், அங்கே பின்புறமிருந்த இடத்தை எங்களுக்குக் கொடுத்தார்கள். அதனால் விளையாடுமிடப் பிரச்னை தீர்ந்தது. ஆனால் புதிய பிரச்னையை நாங்கள் சந்திக்க வேண்டியிருந்தது.

வள்ளுவர் கோட்டம் கட்டுவதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட இடம் மிகவும் தாழ்வான பகுதி. எனவே, கட்டட வேலைகளை ஆரம்பிப்பதற்கு முன்பாக, அந்த பள்ளமான பகுதியை மேடாக்க வேண்டியிருந்தது. அப்படி மேடாக்குவதற்கு, அரசாங்கம் கையாண்ட முறை என்ன தெரியுமா? முதல் கட்டமாக அதை ஒரு பிரம்மாண்டமான



குப்பை மேடு ஆக்கினார்கள். ஆமாம்! நகரமெங்குமிருந்து கொண்டு வரப்பட்ட குப்பைகளை வள்ளுவர் கோட்டம் கட்டப்படவிருந்த இடத்தில் குவித்தார்கள்.

அந்தப் பகுதி முழுவதும், அதனால் துர்நாற்றம் வீசத்தொடங்கியது. எங்கள் பள்ளிக் கூடம், குப்பை கொட்டும் அந்த இடத்துக்கு வெகு அருகில் இருந்ததால் மூக்கைத் துளைக்கும். இதை என்ன செய்து சமாளிக்க முடியும் என்று எங்களுக்குப் புரியவில்லை. குப்பை மேட்டை ஒட்டிய ஜன்னல் கதவுகளை பர்மனென்ட்டாக மூடி வைத்தும், ஒரு பிரயோஜனமும் இல்லை. இதற்காக, பள்ளிக் கூடத்தை வேறு இடத்துக்கு மாற்றுவது என்பதெல்லாம் சாத்தியமில்லை என்பதால், நிலைமை என்ன என்பதை நானே மாணவர்களிடம் நேரடியாகப் பேசிப் புரிய வைத்தேன்.

எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. ஒவ்வொரு வகுப்புக்கும் போவேன். மாணவ, மாணவிகளிடம் உங்களில் எத்தனை பேருக்குப் பெரியவர்களானதும் டாக்டர் ஆக வேண்டும் என்று ஆசை? என்று கேட்பேன். மாணவர்களில் சிலர் கைதூக்குவார்கள். உடனே நான், "டாக்டராவது என்பது அத்தனை சுலபமானது கிடையாது. இறந்தவர் உடல்களை அறுக்க வேண்டும். அது போன்ற சமயங்களில் நீங்கள் ரொம்ப சங்கடப்படலாம். அதற்கெல்லாம் ஒரு டிரெயினிங் போல இந்த குப்பை நாற்றத்தை நீங்கள் நினைத்துக் கொள்ள வேண்டும்."

கேட்பதற்கு இது கொஞ்சம் வேடிக்கையாக இருந்தாலும், இதன் பின்னால் உள்ள பிராக்டிகல் உண்மையை மாணவர்கள் புரிந்து கொண்டார்கள்.

சில மாதங்களில், குப்பைகள் கொட்டி, தாழ்வான பகுதியை மேடாக்கி விட்டார்கள். அடுத்து கட்டட வேலை ஆரம்பித்தது. ஆழ் துளை அஸ்திவாரம் (பைல் பவுண்டேஷன்) போடத் தொடங்கியவுடன், டங்... டங்... என்று சப்தம் காதைக் கிழித்து விடும். வகுப்பில் பாடம் எடுக்கவே ரொம்பவும் கஷ்டப்

பட்டார்கள் ஆசிரியர்கள். உரக்கக் கத்தி பாடம் சொல்லிக் கொடுத்ததால் ஒரு சில டீச்சர்களுக்கு தொண்டை கூட பாதிக்கப் பட்டது.

மறுபடியும் பழைய பல்லவிதான். நான் வகுப்பு, வகுப்பாகப் போனேன். "யார் யார் எல்லாம் படித்து, பெரியவனானபின் எஞ்ஜி னியர் ஆக ஆசைப்படுகிறீர்கள்? என்று கேட்பேன். மாணவர்கள் கையை உயர்த்து வார்கள். "பெரிய பெரிய கட்டடங்களை எல்லாம் நீங்கள் கட்ட வேண்டி இருக்கும். கன்ஸ்டிரக்ஷன் சைட்டில் நீங்கள் இது போன்ற சப்தங்களுக்கிடையில்தான் பணி புரிய வேண்டி இருக்கும். அந்த சப்தத்தையும் மீறி உரத்த குரலில் தொழிலாளர்களுக்கு உத்தரவுகள் தர வேண்டியிருக்கும். இதெல் லாம் வருங்கால எஞ்ஜினியர்களான உங்க ளுக்கு ஒருவித டிரெயினிங்" என்று சொல்லு வேன்!

பல வருடங்கள் கழித்து, என்னை ஒரு மாணவன் சந்தித்தபோது, "நான் எஞ்ஜி னியரிங் முடித்துவிட்டு, வடக்கே நிலக்கரிச் சுரங்கத்தில் வேலை செய்கிறேன். சுரங் கத்தின் உள்ளே, நிலக்கரி வெட்டி எடுக்கிற போது, பயங்கர சப்தம் இருக்கும். முதல் நாள் அந்த சப்தத்தை நான் கேட்ட போது உங்க ளுடைய நினைவுதான் வந்தது. வள்ளுவர் கோட்ட கட்டடப் பணியின்போது நீங்கள் வகுப்புக்கு வந்து ஒருநாள் சொன்னீர்களே, அதை நினைத்துக் கொண்டேன்!" என்றான்.

முதல் வருடம், மெட்ரிகுலேஷன் பரீட்சைக்கு எங்கள் பள்ளியிலிருந்து ஐந்து மாணவர்கள் அனுப்பி வைக்கப்பட்டனர். எங்கள் பள்ளியில் முதல் மார்க் வாங்கின மாணவன், தமிழ் நாட்டிலேயே இரண்டா வது இடம் பெற்றிருந்தான். முதல் வருஷம் நூற்றுக்கு நூறு சதவீத வெற்றி என்பதோடு எங்கள் பள்ளி மாணவனுக்கு மாநில அளவில் ரேங்க் கிடைத்தது எங்களுக்குப் பெரும் சந்தோஷத்தையும், அதே நேரம் இன் னும் பொறுப்புணர்வையும் ஏற்படுத்தியது.

அடுத்த வருட மெட்ரிக் பரீட்சைக்கு எங்கள் பள்ளி, பதினாறு மாணவர்களை அனுப்பி வைத்தது. மறுபடியும், நூறு சதவீத வெற்றி. அது மட்டுமல்ல, எங்கள் பள்ளிக் கூட மாணவன்தான், மாநிலத்திலேயே முதல் மாணவனாகத் தேறியிருந்தான். டான் பாஸ்கோ, சர்ச் பார்க், குட்ஷெப்பர்ட்ஸ்... என்று பல அனுபவம் வாய்ந்த பிரபல பள்ளி மாணவர்களுடன் போட்டி போட்டு, எங்கள் பள்ளி மாணவன், மாநிலத்திலேயே முதல் ரேங்க் வாங்கினான் என்பது எத்தனை பெருமைக்குரிய விஷயம்?

எங்கள் பள்ளியின் நூற்றுக்கு நூறு சதவீத வெற்றி பெற்ற மாணவர்களில் ஒரு சிலர், மற்ற பள்ளிகளில் சரியாய்ப் படிக்காத காரணத்தால் டி.சி. கொடுக்கப்பட்டவர்கள்! அவர்களை, எங்கள் பள்ளியில் சேர்த்துக் கொண்டோம். அவர்களுக்குப் பிரத்தியேக பயிற்சி கொடுத்து, அவர்களையும் பள்ளி யிறுதித் தேர்வில் வெற்றி பெறச் செய்தோம்.

இதை எங்கள் டீச்சர்கள் ஒரு சவாலா கவே எடுத்துக் கொண்டு உழைத்ததால், வெற்றி பெறுவது சாத்தியமாக இருந்தது. இத னால், எங்கள் பள்ளியின் பெருமையைப் பலரும் அறிந்து கொண்டார்கள். ஆண்டு தோறும், அட்மிஷன் கோரி விண்ணப்பிப் பவர்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே போனது.

ஒவ்வொரு மாணவன் மீதும் வகுப்பு ஆசிரியைகள் தனிக் கவனம் செலுத்த வேண் டும் என்ற கொள்கை காரணமாக வகுப்பு களில் மாணவர்களின் எண்ணிக்கையை அதிகரிக்க முடியவில்லை. அதனால் என்ன, வகுப்புகளின் எண்ணிக்கையை அதிகரிப்ப தன் மூலம், அதிக மாணவர்களுக்கு அட் மிஷன் தரலாம் என்றால், அதுவும் சாத்தியப் படவில்லை. காரணம், பள்ளி வளாகத்தி னுள்ளே, இனி புதிய வகுப்புறைகள் கட்ட இடமில்லாத சூழ்நிலை.

இதை எப்படி சமாளிப்பது என்று யோசித்தபோது பள்ளிக் கூடத்தை ஷிப்ட் முறையில் நடத்தினால் என்ன என்று தோன்றியது. அதன்படி காலை எட்டுமணி முதல் பன்னிரண்டு மணி வரை முதல் ஷிப்ட். அடுத்த ஷிப்ட் பகல் ஒரு மணிக்கு ஆரம்பித்து மாலை ஐந்து மணிக்கு முடியும். வாரத்தில் ஐந்து நாட்களுக்கு பதிலாக சனிக்கிழமையும் சேர்த்து ஆறு நாட்கள் வேலை செய்தோம். எட்டாம் வகுப்பு வரை ஷிப்ட் முறையில் நடத்தினாலும், ஒன் பது, பத்து மற்றும்



திருமதி ஒய்.ஜி.பி.

# ஜாணமும் பூமியும்!

உலகக் கோப்பையில் விளையாடுகிற, எல்லா நாடுகளிலும் யாராவது ஒரு வீரர் உடல்நிலை சரியில்லாதவராய் அல்லது அடிபட்டவராய் இருப்பது திருஷ்டி! (உ.ம் நமது டெண்டுல்கர், வெஸ்ட் இண்டீஸின் பிரையன் லாரா). ஆனால், வருடம் முழுவதும் இவர்கள் விளையாடிக் கொண்டே இருப்பதால் அது ஒன்றும் அவர்களை பாதிக்காது என்றே சொல்கிறார்கள். எப்படியிருந்தாலும், நவீன மருந்துகளும், பிசியோதெரபி மருத்துவமும் வீரர்களைப் பழைய நிலைக்குக் கொண்டு வந்துவிடும். அவர்கள் சிறப்பாக விளையாடுவது உறுதி என்கிறார்கள்.

## வானிலை எப்படியிருக்கும்?

இங்கிலாந்தில் மே மாதம்தான் கோடை காலம் ஆரம்பிக்கிறது. ஆனால், காலையிலிருந்தே குளிர் இருக்கத்தான் செய்யும். அந்த வானிலைக்கேற்ப பழகிய இங்கிலாந்து, நியூசிலாந்து நாடுகளுக்கு மட்டுமே வானிலை ஏற்றதாக இருக்கும். குளிர் அதிகமானால், மற்ற நாடுகளுக்கு சிரமம்தான். அதிகாலையில் முதலில் பேட்டிங் செய்கிற அணி சற்று தடுமாறத்தான் வேண்டும். ஆனால், எல்லா நாடுகளுமே முன்னதாகவே கிளம்பிப் போய், அந்தச் சூழலுக்கேற்ப விளையாடப் பயிற்சி

பதினோராம் வகுப்புகளுக்கு மட்டும் வழக்கப்படியான நேரத்தில் வகுப்புகள் நடத்தப்பட்டன. மொத்த மாணவர்களின் எண்ணிக்கை இரண்டு ஷிப்ட்களிலுமாக எண்ணூறைத் தொட்டது.

இந்த ஷிப்ட் முறையில், வகுப்பறைகளின் எண்ணிக்கையை அதிகரிக்காமலேயே மாணவர்களின் எண்ணிக்கையை அதிகரிக்க முடிந்தது என்றாலும் கூட, ஆசிரியைகளுக்கு இரண்டு ஷிப்ட்களில் பணிபுரிவது சிரமமாக இருந்தது. ஷிப்ட் முறை நிரந்தரத் தீர்வு ஆகாது என்று புரிந்து கொண்டு, புதிதாய் இன்னொரு இடம் கிடைக்குமா என்று பார்க்க ஆரம்பித்தோம். அப்படி இடம் கிடைத்தால், ஷிப்ட் முறைக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு, நுங்கம்பாக்கத்தில் மெயின் ஸ்கூலுடன் கூட, புதிய இடத்தில் ஒரு கிளை பள்ளிக் கூடமும் நடத்துவது என்று தீர்மானித்தோம்.

புதிய இடம் தேடும் படலம் ஆரம்பமானது. தி. நகரில், பிரதானமான பகுதியில் அமைந்தால், மாணவ மாணவிகள் பள்ளிக் கூடம் வந்து போவது சௌகரியமாய் இருக்குமே என்று நினைத்து, அதற்கேற்ப இடம் பார்த்தோம். திருமலைப் பிள்ளை ரோடில், சினிமா நட்சத்திரம் ஜமுனாவுக்குச் சொந்தமான ஓர் இடம் விலைக்கு வருவதாகக் கேள்விப்பட்டு, அவரை அணுகினோம். அவர் எங்களுக்கு, அந்த இடத்தை விற்கச் சம்மதித்தார்.

எங்களிடம் பெரிய அளவில் பணம் இல்லை. வருஷா வருஷம், ஒய்.ஜி.பி. எங்களுக்காக நாடகம் போட்டுத் தருவார். நாங்கள், டிக்கெட் விற்க அலைவோம். வியாபாரம், மற்றும் தொழில் நடத்தும் பிரமுகர்களை அணுகி, விளம்பரங்கள் சேகரித்து மலர்கள் வெளியிடுவோம். கொடையுள்ளம் கொண்டவர்களைச் சந்தித்துப் பேசி, நன்கொடை வாங்குவோம். இப்படியாக பணம் சேர்த்துத்தான், புதிய இடத்திலும் கால் ஊன்றினோம்.

புதிய இடத்தில் வகுப்பறைகள் எழுந்தன. பள்ளிக்கு வரவும், பள்ளி விட்டதும் போகவும், எல்லா மாணவர்களும், பள்ளி வளாகத்திலிருந்து திருமலைப் பிள்ளை ரோடை அடைய, ஒரே ஒரு வழியையே பயன்படுத்த வேண்டியிருந்தது. அதுவோ போக்குவரத்து நெரிசல் மிக்க பிரதான சாலை!

பள்ளிக்கு இன்னும் ஒரு நுழைவு கேட் இருந்தால் சௌகரியமாக இருக்கும் என்று யோசிக்க ஆரம்பித்தபோது, எங்கள் பள்ளிக்கும், ஹபிபுல்லா ரோடுக்கும் இடையில் இருந்த கார் ரிப்பேர் செய்யும் மெக்கானிக் ஷெட் விலைக்கு வருமா என்று விசாரித்தோம். அதன் உரிமையாளரிடம் பேசி, அதையும் எங்களுக்கு விற்கச் செய்தோம். புதிய இடத்தில் இன்னொரு பிளாக் கட்டினோம். அதிலிருந்து, ஹபிபுல்லா ரோடு

செய்வதால் பந்தயங்கள் ஆரம்பிப்பதற்கு முன் வானிலை பழக்கப்பட்டு விடும் என்று எதிர்பார்க்கலாம். அது மட்டு மில்லாமல், எல்லா வீரர்களும் உலகம் சுற்றிப் பழக்கப் பட்டவர்கள். வானிலை மாற்றம் தங்களை பாதிக்க அனுமதிக்க மாட்டார்கள்.



## மைதான மகிமை!

கோடைக் காலமாயிருந்தால், இங்கிலாந்து மைதானங்கள் பேட்டிங்குக்கு சாதகமாக இருக்கும். ஆனால், குளிர் மற்றும் மழைக்காலம் என்றால், பேட்ஸ்மேன்களுக்கு கஷ்டகாலம்தான்.

## இங்கிலாந்து யாத்திரை!

1983-ம் ஆண்டு நடைபெற்ற 'உலகக் கோப்பை' கிரிக்கெட்டுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், இந்த ஆண்டு இந்தியாவிலிருந்து உலகக் கோப்பை பார்க்கச் செல்கிற நபர்கள் அதிகம். அதே போல், பிராயணம் எளிதாயிருந்தாலும் பிரயாணச் செலவுகளும் அதிகம்தான். மீடியா தரும் விளம்பரமும், பல்வேறு விதமான போட்டிகளும் உலகக் கோப்பையைக் காண மக்களை இழுத்துக் கொண்டிருக்கிறது. மற்ற எந்த உலகக் கோப்பையையும் விட, இந்த ஆண்டுதான் இந்திய ரசிகர்களின் எண்ணிக்கை அதிகமாய் இருக்கும் என்று கருதப்படுகிறது.

தொகுப்பு : **பாலசுப்ரமணியன்**

வரை ஒரு பாதை அமைத்தோம். இரண்டு வழிகளையும் பயன்படுத்த ஆரம்பித்தோம்.

நுங்கம்பாக்கம் மெயின் ஸ்கூல், திருமலைப் பிள்ளை ரோடில் உள்ள கிளை இரண்டிலுமாக மாணவர்கள் எண்ணிக்கை பெருகியபடி இருக்க, வேறு ஏதாவது இடம் கிடைத்தால், அங்கே இன்னும் ஒரு பள்ளிக் கூடம் ஆரம்பிக்கலாமே என்று சிந்திக்க ஆரம்பித்தோம். அந்த நேரத்தில், சரியான படி கைகொடுத்து உதவ முன்வந்தது தமிழ் நாடு வீட்டுவசதி வாரியம். தொண்ணூறு கிரவுண்டு நிலம். கே.கே. நகரில் இருந்தது. அடையாறில் நாற்பத்தைந்து கிரவுண்டு நிலம் இருந்தது. கிரவுண்டு விலை ஏழாயிரம். எது வேண்டுமானாலும் எங்களை எடுத்துக் கொள்ளச் சொன்னார்கள். அடையாறு, கே.கே. நகர், இந்த இரண்டு இடங்களில், எந்த இடத்தை வாங்கலாம் என்று பள்ளி நிர்வாகக் குழுவினர், ஆசிரியைகள் ஆகியோருடன் கலந்தாலோசித்தோம். கே.கே. நகர் நிலத்தையே எடுத்துக் கொள்ளலாம் என்று பலரும் ஆலோசனை சொன்னார்கள்.

அதன்படி, தவணைமுறையில் பணம் கட்ட ஒப்புக் கொண்டு கே.கே. நகரில் இருந்த தொண்ணூறு கிரவுண்டு நிலத்தை வாங்கினோம். ஒரே ஒரு கட்டடம் கட்டி, ஐந்து வகுப்புகளுடன் கே.கே. நகரில் பத்மா சேஷாத்ரி பள்ளிக்கூடம் செயல்பட ஆரம்பித்தது.

மும்பையிலிருந்து சென்னை வந்து எங்கள் பள்ளியில் பணியாற்றிக் கொண்டிருந்தார் பாலாம்பாள் என்ற பெண்மணி. மிகத் திறமையான பெண்மணி. கல்விப் பணிக்காக, திருமணம் கூட செய்து கொள்ளாதவர். அவரை கே.கே. நகர் பள்ளிக்கு தலைமை ஆசிரியையாக அனுப்பி வைத்தேன்.

ஆக, எங்கள் வீட்டு மொட்டை மாடியில், கீற்றுக் கொட்டகை போட்டு, எளிமையான முறையில் துவக்கப்பட்ட பள்ளிக் கூடம், ஆலமரமாய் வளர்ந்து மூன்று இடங்களில் கிளை விட்டுப் பரவி, வேரூன்றி விட்டது.

கல்வித் தரத்தில், காம்ப்ரமைஸ் ஏதும் செய்து கொள்ளாமல், இந்திய பாரம்பரிய கலாசாரங்களை ஒட்டி, பத்மா சேஷாத்ரி பள்ளியில் பாடமுறை கையாளப்பட்டது; கல்வித் தரத்தில் மாநில அளவில் முக்கியத்துவம் பெற்றது. அடுத்த கட்டமாய் என் பார்வை, இந்தியாவுக்கு வெளியில் சென்றது. பல்வேறு அயல் நாடுகளுக்கும் சென்று அங்கே போதிக்கப்படும் கல்வி முறைகளைப் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இதன் மூலமாக பத்மா சேஷாத்ரி பள்ளியில் பெரும் கல்விப் புரட்சியே நடந்தது என்றால் துளியும் மிகையில்லை.

(அடுத்த வாரம் சொல்கிறேன்)

சுமி

## சூப்பர்மார்க்கெட்

# ஓடிப்போன...

பிரும்ம ராக்ஷஸ் ஒண்ணு, ஒரு வீட்டு பின்னால, மரத்துல சிறைப்பட்டிருந்தது. அந்தப் பக்கமா வந்த அந்தணர் ஒருத்தரைப் பிடிச்சி, "ஐயா, என்னை இங்கேருந்து காப்பாத்திக் கொண்டு போயி எங்கியாவது விட்டுடு. உனக்குப் புண்ணியமாப் போகும். இந்த வீட்டுல இருக்கற பாகவதரோட பாட்டு என்னை ரொம்ப இம்சை பண்ணுது. ப்ளீஸ் என்னைக் காப்பாத்து"ன்னு கேட்டுது.

சரின்னு அவர் அந்த பிரும்ம ராக்ஷஸைத் தூக்கிட்டுப் போயி, பாகவதர் பாட்டு காதுல விழாத தூரத்துல விட்டுட்டுக் கிளம்பினார்.

"ரொம்ப தேங்க்ஸ். உனக்கு ஒரு ஹெல்ப் பண்ண விரும்பறேன். நான் இப்ப நேரா மைசூர் மகாராஜாவோட பொண்ணைப் போய் பிடிச்சிக்கப் போறேன். யார், என்ன ட்ரை பண்ணாலும் என்னை விரட்ட முடியாது. நீ வந்ததும் நான் அந்தப் பொண்ணை விட்டுடறேன். ராஜா உனக்கு நிறைய பிரைஸ் குடுப்பார். வாங்கி, சந்தோஷமா பிழைச்சிக்கோ"ன்னுச்சு ராக்ஷஸ்.

சொன்ன மாதிரியே கொஞ்ச நாள்ல மைசூர் மகாராஜாவோட பொண்ணுக்குப் பேய் பிடிச்சிடுச்சி; யாராலேயும் விரட்ட முடியலைன்னு நியூஸ் வந்தது.

நம்மாள் நேரா கிளம்பிப் போனதும் பிரம்மராக்ஷஸ் அந்தப் பெண்ணை விட்டுட்டுப் போயிடுச்சி.

ராஜாவுக்கு செமை ஆச்சர்யம். இவரைப் பாராட்டி, எக்கச்சக்கமா பரிசு கொடுத்து அனுப்பி வெச்சார்.

மைசூர்ல கிளம்பின பிரும்ம ராக்ஷஸ், நேரா திருவாங்கூர் மகாராஜா பொண்ணு மேல தாவிடுச்சி.

அந்த ராஜாவும் பலவிதமா ட்ரை பண்ணிப் பார்த்துட்டு, இந்த அந்தணரைப் பத்திக் கேள்விப்பட்டு, கூப்பிட்டு வர ஆள் அனுப்பினார்.

இவருக்கு செம டென்ஷன். காரணம், "ஒரே ஒரு தடவைதான் உனக்கு இந்த சான்ஸ் தருவேன். நீ திரும்பத் திரும்ப என்னை ஓட்டறேன்னு வந்தா மகனே, உன்னையே பிடிச்சுக்குவேன்"னு பிரும்ம ராட்சஸ் சொல்லியிருந்தது!

ஆனா, மகாராஜாகிட்ட இந்த சமாசாரத்தைச் சொல்ல முடியுமா? மறுத்துப் பார்த்திருக்காரு. ராஜா, "நீ என் பொண்ணைக் காப்பாத்தலைன்னா, உன் உயிருக்கு நான் கேரண்டி இல்லை"ன்னு சொல்லிட்டார்.

வேற வழி?



இவர் கிளம்பி திருவாங்கூர் போய், இளவரசி முன்னால நின்னார்.

உடனே ராக்ஷஸ், "நான் சொல்லியும் நீ திரும்ப வந்திருக்கே! உன்னை என்ன பண்றேன் பார்!"னு மிரட்ட, இவர் சொன்னார்:

"உன்னால ஒண்ணும் பண்ண முடியாது! மரியாதையா கிளம்பிப் போயிடு. இல்லே..."

"இல்லாட்டி என்ன பண்ணுவே?"

"நான் ஒண்ணும் பண்ண மாட்டேன். வரும்போது அந்த பாகவதரைக் கையோட கூப்பிட்டு வந்திருக்கேன். வெளிலதான் நிக்கறார். வரச் சொல்லவா?"

அவ்ளோதான். பிரும்மராக்ஷஸ் ஓடியே

போச்!

— இந்தக் கதை, இந்த நூற்றாண்டு தொடக்கத்துல எழுதப்பட்டது. (பண்டித நடேச சாஸ்திரிகள்)

அந்த லாஸ்ட் லைன் பன்ச்சை கவனிங்க. என்ன ஷார்ப்பா இருக்கு இல்லை? இவ்வளவு ஷார்ப்பான ஹ்யூமர் இப்ப ஏன் வர்றதில்லைன்னு யோசிக்கற வேலை உங்களோடது. (பின்ன எப்படி ரீடர்ஸெல்லாம் ரைட்டர்ஸாறது?)

பை த வே, இந்தக் கதையை ஜோதி விநாயகம் நினைவு சிறுகதைப் பரிசுத் திட்ட அமைப்போட ரெண்டாவது ஆண்டு விழால சொன்னவர் கவிஞர் ஞானக்கூத்தன்.

ஒரு நியூஸ். ஜோ.வி.யோட சிறந்த கதைகள் திட்டத்துல, போன வருஷம் அதிகபட்சமா (பதிமூணு!) கான்ட்ரிப்யூட் பண்ணியிருக்கற ஒரே பத்திரிகை கல்கி! அமைப்பாளர்கள்ல ஒருத்தரான சங்கர நாராயணன் இதை மேடைலேயே

# பிரும்மராக்ஷஸ்!

அளவுன்ஸ் பண்ணினதோட மட்டுமில்லாம, ஒவ்வொருத்தரையும் அறிமுகப்படுத்தி, மேடைக்குக் கூப்பிட்டு பொக்கே கொடுத்து வாழ்த்தினது - ரைட்டர்ஸுக்கு உற்சாகம் தர்ற விஷயம்.

ஒரு இலக்கியக் கூட்டம் ஏஸி ஹால்ல நடக்கறதையும் கூட்டம் முடிஞ்சதும் வந்திருந்த அத்தனை பேருக்கும் (சுமார் முன்னூறு பேர் இருக்கும்னு நினைக்கறேன்) டிபன் காப்பி தந்ததையும் முதல் தடவையா பார்த்தேன்.

இலக்கியமே சொகுசான விஷயம் தான்னு சொல்லுவார் லா.ச. ராமாமிர்தம். இது சொகுசுக்கு சொகுசு!

• • •

பெண்கள் இட ஒதுக்கீட்டோட விளைவு எப்படி இருக்குங்கறதை ஜனநாயக மாதர் சங்கத்துக்காரங்க ஒரு வீதி (மெயின் ரோடு) நாடகமா ஒரு நாள் எங்க பேட்டை பஸ் ஸ்டாண்ட்ல நடத்திக் காட்டினாங்க.

உள்ளாட்சி நிர்வாகத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படற பெண்களை, ஆண்கள் எப்படி ஓரம் கட்டி, அவங்க ராஜ்ஜியம் நடத்தறாங்கன்றதை வெளிக்காட்டறது தான் சப்ஜெக்ட். 'பெண்ணே வீறு கொண்டு எழு; உன்னால் முடியும்; தன்னம்பிக்கையோட நீயே வேலையை கவனி'ன்னு சப்ஜெக்டை முடிச்சிட்டாலும் விஷயம் அங்க முடியறதில்லைன்னு நினைக்கிறேன்.

ஓரளவுக்காவது நல்லா படிச்சி, சுயமா யோசிச்சு முடிவெடுக்கற பக்குவத்தை அடையாம, இந்த மாதிரி சீட் கிடைக்கறதேன்னு எலெக்ஷன்ல நிக்கற வரைக்கும் இந்தப் பிரச்னை, எத்தனை வீதி நாடகம் போட்டாலும் தீராது. (நல்லா படிச்சதுக்கப்புறம் இதுல வந்து மாட்டிப்பாங்களாங்கறது அடுத்த பிரச்னை.)

ஆண் - பெண் சமத்துவத்தைப் பிரச்னையா எடுத்துக்கிட்டுக் கையாள்றவங்க அதைப் பெரும்பாலும் ஓவர் சிம்ப்ளிபை பண்ணிடறாங்க. (ஃபார் எக்ஸாம்பிள் - மே ஒண்ணாம் தேதி ஜ.மா. சங்கத்தார் ராஜ் டி.வி.யில போட்ட எலிபதி டிராமா) அல்லது தீர்வே இல்லைன்னு நெகடிவ் அப்ரோச்ல போறாங்க... ரெண்டுமே தப்புன்னு நினைக்கறேன்.

ஆணும் பெண்ணும் ஒரு சந்தோஷமான பாலன்ஸை அடையலாம்னு சுவாமி ரங்கநாதானந்தர் எடுத்துச் சொல்றார். 'லட்சிய இல்லறம்'னு ஒரு மினி புக்ல... அடிப்படையா ஒரு விஷயம் சொல்றார்: நம்மைக் கடந்து யோசிக்கணும். சராசரி இல்லறத்தார் இப்படி வாழ்ந்தால் அவர்களால ஒன்று சேர்ந்து மகத்தான காரியங்கள் சாதிக்க முடியும்னு காரண்டியே கொடுக்கறார்.

அப்போ பாராளுமன்றம், பேரவைகள், நகராட்சிகள், பஞ்சாயத்துகள் புரட்சிக்குள்ளாகும் அப்படின்றார். ஆன்மிகத்துக்கும் இல்லறத்துக்கும் ஒரு ஃப்ரெஷ்ஷான இலக்கணம் இந்த புக்!

— சுமி




• மாநாட்டு மேடையில்....

# பூசாரிகள் + வழிபடுவோர் = வாக்கு வங்கிகள்..?

கிராமக்கோவில் பூசாரிகள், வழிபடுவோர் பேரவையின் மூன்றாவது மாநில மாநாடு திருச்சியில் நடைபெற்றது. தமிழகத்தின் மூலை முடுக்குகளிலிருந்து எல்லாம் கிராமக்கோவில் பூசாரிகள் படையெடுத்து வந்திருந்தனர். "இரண்டு நாள் மாநாட்டிற்கு நீங்கள் இங்கே வந்து விட்டீர்கள். கிராமக் கோவிலில் பூஜை, வழிபாடு எல்லாம் இந்த இரண்டு நாளும் எப்படி?" திண்டுக்கல், சவுரியார் பாளையம் கிராமக் கோவில் பூசாரி, நமது சந்தேகத்தைத் தெளிவுபடுத்தினார். "நாங்க இங்க வந்துட்டோம்ன்னு கோவில்ல வெளக்கேத்தாம வெச்சிடுவோம்ங்களா? எங்க பையன பாத்துக்கச் சொல்லிட்டு வந்திருக்கோம்ங்க" என்றார்.

நிலையான வருவாய் ஏதுமின்றி கிராமத்துக் கோவில்களில் பூஜை செய்து வரும் பூசாரிகளின் வாழ்க்கை சற்று சோகம்தான்.

திருவிடைமருதூர் தாலுகா, பந்தநல்லூர் மேல செல்லப்பன் பேட்டை, ஆனந்தாயி அம்மன் கோவில் பூசாரி பாவாடைராயன் (வயது45) சொல்கிறார், "மூணு தலைமுறையா நாங்கதாங்க ஆனந்தாயி அம்மனுக்குப் பூசாரிங்க. யாராவது குலதெய்வம்ன்னு சாமி கும்பிட வரும்போது அஞ்சு, பத்து கெடைக்கும்ங்க. மத்தபடி நெல்லு, நீத்துன்னு குடுத்ததெல்லாம் இப்ப நின்னு போய்டிச்சிங்க. வயல்ல கூலி வேலைக்கு போய்ட்டு வந்துதாங்க குடும்பத்தை நடத்துறோம்."

கையிலே உடுக்கை. கழுத்திலே ருத்ராட்சம். இடுப்பிலே நாலு முழ வேட்டி. சட்டை அணியாத உடம்பில் மேல் துண்டு. நெற்றியில் திருநீறு. பெருமாள் கோவில் பூசாரி என்றால் நெற்றியில் திருமண். இந்த வகையில் திரண்டிருந்த பூசாரிகள் கூட்டத்தில் சத்திரப்பட்டியிலிருந்து வந்திருந்த சேவுகப்பெருமாள் என்னும் ஒரே ஒரு பூசாரி மட்டும்

பேண்ட்-சர்ட்டில் மேடையேறிப் பேசிவிட்டு இறங்கினார்!

இந்த மாநாட்டில் பதினாறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. பூசாரிகளுக்கு மாத ஊதியம், கோவில்களுக்கு இலவச மின்சாரம், ஒரு கால பூஜைத் திட்டம், கோவில் குத்தகை பாக்கி வசூலித்தல், மத மாற்றங்களைத் தடுக்க நடவடிக்கை எடுத்தல், கோவில் சொத்துக்களைப் பாதுகாத்தல், மரணம் அடைந்த கோவில் பூசாரிகள் குடும்பத்துக்கு கருணைத் தொகை வழங்குதல், கோவில் நிர்வாகத்துக்கு தனித்தியங்கும் வாரியம் அமைத்தல் போன்று பதினைந்து தீர்மானங்கள் அமைந்திருந்தன.

ஜாதி மோதல்களைத் தடுப்பதற்காக தமிழக அரசு எடுத்துள்ள முடிவுகளை மனந்திறந்து பாராட்டும் வகையில் 16-வது தீர்மானம் முத்தாய்ப்பாய் அமைந்திருந்தது.

தீர்மானங்களை விளக்கி

• பேரணி



உரையாற்றினார் ஹிந்து மித்திரன் ஆசிரியர் ஆர்.பி.வி.எஸ். மணியன்: "மொரீஷியஸ் நாட்டின் மொத்த மக்கள் தொகை 12 லட்சம். அதில் தமிழர்கள் 2 லட்சம் பேர். தமிழர் திருநாளான தைப்பூசத்துக்கு மொரீஷியஸில் தேசிய விடுமுறை. ஆனால் தமிழ்நாட்டில் தமிழர் திருநாளான தைப்பூசத்துக்கு விடுமுறை இல்லை. இப்பொழுதுதான் மிகுந்த போராட்டத்துக்குப் பின்னர் 620 பூசாரிகளுக்கு மாதம் ரூ. 500 ஓய்வூதியமாக அரசிடமிருந்து பெற்றிருக்கிறோம். அனைத்துக் கோவில் பூசாரிகளுக்கும் மாதம் ரூ.500 மதிப்பூதியமாக அரசு வழங்க வேண்டும். இல்லையேல் இப்பொழுது ஆட்சியில் இருப்போருக்கும் சரி, அமர இருப்போருக்கும் சரி நமது வாக்குகள் மூலமாக வருங்காலத்தில் பதில் தர வேண்டும். நமது ஆலய வழிபாடுகள் மீது நம்பிக்கை உள்ளவருக்கே நமது வாக்குகள் என்று உறுதியாய் இருக்க வேண்டும். பூசாரிகள், வழிபடுவோர் பேரவை, இறை நம்பிக்கை உள்ள அனைவரும் ஓரணியில் வாக்கு வங்கிகளாக மாறினால்தான் நமது கோரிக்கைகளுக்கு அரசிடம் செல்வாக்குப் பெற முடியும்."

ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் இரண்டு நாள் மாநாட்டிலும் கலந்து கொண்டு அருளாசி வழங்கியதுடன், நிறைவு நாளன்று நடந்த பிரும்மாண்ட பேரணியை ஆண்டாள் வீதியின் முகப்பிலிருந்து பார்வையிட்டது ஊர்வலத்தில் கலந்து கொண்ட அனைவரது உள்ளங்களிலும் ஒரு உத்வேகத்தை உண்டு பண்ணியுள்ளது என்னவோ மறுக்க முடியாத உண்மைதான்.

அதுசரி, அரசியல் பட்டாசுகள் ஆங்காங்கே வெடித்துக் கொண்டிருக்கிற நேரத்தில் இந்த ஆன்மீகப் பேரணி - மாநாட்டின் அவசியம்தான் என்னவென்று கேட்டபோது, "இதுதான் சரியான தருணம்! அரசுப் பீடத்தில் அமர்ந்திருப்போருக்கும், அமரத்துடிக்கும் மற்ற அரசியல் கட்சிகளுக்கும் நாங்களும் இந்த சமூகத்தில் மிகப் பெரிய சக்தி என்பதை நிரூபித்துக் காட்டவே இந்த மாநாடு!" என்றனர்!

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

ஸ்ரீ துர்க்கை அம்மன் துணை

✆ Res : 6430076 ✆ Shop : 8281327

# தனலக்ஷ்மி  சாரீஸ்

## உயர்தர சுங்குடி தயாரிப்பாளர்

உயர்ந்த தரத்துடன் குறைந்த விலையில் கிடைக்கும்.

நாங்கள் 100's Bazar quality, 100's special, 120 Superior quality ஆகியவை அதிக கெட்டி சாயத்துடன் தயார் செய்கின்றோம். இதனால் குறைந்த விலையுள்ள புடவையும் நீடித்து உழைப்பதற்கு உத்தரவாதம் தருகிறோம். காட்டன் புடவை நிறம் மங்கி விடுவதற்கு முக்கிய காரணம்: சாயம் குறைவாக கொடுப்பதால் . அதனால் நாங்கள் கெட்டி சாயத்துடன் மதுரை சுங்கிடி புடவைகள், பேன்ஸி பத்திக் பிரிண்ட்ஸ் ஆகியவை தயார் செய்கிறோம். 120 Superior quality நல்ல தரத்துடன் குறைவான விலையில் விற்பனை செய்கிறோம்.

எங்களிடம் 6 கெஜம், 7 கெஜம், 9 கெஜம், 10 கெஜம் அதிக அளவில் தயார் செய்வதால் அதிக varities கிடைக்கும். தனலட்சுமி தேவேந்திரா சாரீஸ், High quality with blows Bathik Sarees, Mercerised Cotton with Jari and thread work and with rich pallu also avilable. மற்றும் Banthini prints, Gold print, Latest Screen printing designs, Block prints, Chudithar sets, Apoorva printed polycot, Screen printed polycot, Block printed polycot, Chettynadu Sarees, Fancy Pollachi Cotton, Negamam Cotton, Mangalagiri Cotton, Bengal Cotton, Silk Cotton, Guntur Sarees, Rasipuram Cotton, Bangalore printed Silks and Polysilk Latest arrival Periya palayam cotton Karishma Sarees, Surat Synthetic Sarees are available.

புதிதாக குறைந்த எடையுள்ள 6 கெஜம், 9 கெஜம் புடவைகள் தயார் செய்கிறோம். இது விலையும் மிகக் குறைவாகவும் நல்ல தரத்துடனும் இருக்கும். மற்றும் சேலம் வேஷ்டிகள், டவல்கள், மேட்சிங் ப்ளவுஸ்கள், உயர்தர ஈரோடு காட்டன், Semi Gadwal கிடைக்கும். பட்டுப் புடவை போன்ற தோற்றம் கொண்ட உய்ர்ரக கைத்தறி காட்டன் புடவை with rich pallu மற்றும் ordinary Pallu. உயர்தர காட்டன் நூலால் தயாரிக்கப்படுகிறது.

அமைதியான சூழல், திருப்தியான வாடிக்கையாளர் சேவை, car parking வசதி. நியாயமான விலையில் எல்லா புடவைகளுக்கும் உத்திரவாதம் உண்டு. Stock clearance Sale for Ranee Sarees upto 10% Discount.

**நெ. 1, கோபாலகிருஷ்ண ரோடு (டாக்டர் நாயர் ரோடு, Second left from Pondy Bazzar turning) தி.நகர், சென்னை -17.**

***Bus No - 9A,10,47A, 47D (Power office Bus stop. Dr. Nair road)***

Our Coimbatore branch

P.R. Shanthi, No.15, Siva Sakthi Colony,
Thondamuthur Road, Vadavalli, Coimbatore 641 041. ✆ 424981



# பெரியண்ணா

ஆயுள்தண்டனைக் கைதி சூர்யாவுக்கும், அமைச்சர் மகள் மானஸாவுக்கும் காதல். காதலர்கள் தங்கள் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள தப்பித்து ஓடி பெரியண்ணாவிடம் (விஜயகாந்த்) தஞ்சம் புகுந்து, காதலையும் காப்பாற்றிக் கொள்கிறார்கள். பழைய 'செந்தூரப் பூவே'வில் காதலர்களைச் சேர்த்து வைக்க உயிரை விடுவார் விஜய்காந்த். இந்தப் படத்தில் ஜெயிலுக்குப் போகிறார்.

'நட்புக்காக - விஜயகாந்த்' என்று அறிமுகமானாலும், முழுப்படத்தையும் ஆக்கிரமித்திருப்பவர் இவர்தான். ரயில்வே ஸ்டேஷனில் நூற்றுக்கணக்கான போலீஸ்காரர்கள் மத்தியில், ஒரு கலெக்டர் தலையைச் சீவி விட்டு, வீட்டுக்கு வந்து ரோஜாச் செடிக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருக்கிறார் பெரியண்ணா! 'ரயிலிலிருந்து தவறி விழுந்து கலெக்டர் சாவு' என்று செய்தித்தாளில், செய்தி வெளியாகிறது! வாங்கிய டிக்கெட்டுக்கு வஞ்சனை இல்லாமல் விதவிதமாய், வகைவகையாய்க் காதில் பூ சுற்றுகிறார்கள்.

பெரியண்ணாவின் ப்ளாஷ்பேக்கில் 'பூ சுற்றல்' சுவாரஸ்யம் கொஞ்சம் அதிகம். 'ஐம்பதாண்டுகளுக்கு முன்' என்று திரையில் காண்பித்து, கொத்தடிமைகள் உடம்பில் கோணிச்சாக்கைச் சுற்றிக் கொண்டு, வண்டியிழுக்க, கல்லுடைக்க என்று ஜமீந்தாரிடம் (ஆனந்தராஜ்) கஷ்டப்படுகிறார்கள். ஜமீன்தாருக்கும், ஒரு கொத்தடிமைப் பெண்ணுக்கும் பிறந்த விஜயகாந்த், ஜமீன்தாரைக் கொன்று அடிமைகளுக்கு விடுதலை வாங்கித் தருகிறார்!

நம்ப முடியாத காதல் கதை, வில்லனாக வரும் அமைச்சர். ரவுடியை ஓட ஓட விரட்டிக் கொல்லுகிற பழைய பாணிக் காட்சிகள், அதே மணிவண்ணன், அதே மனோரமா... என்று மாற்றமில்லாத மசாலாப் படம்.

விஜயகாந்த் - சூர்யா கூட்டில் படமெடுத்து, சதமடிக்க ஆசைப்பட்டு களமிறங்கியிருக்கிறார் எஸ்.ஏ. சந்திரசேகர். வழக்கமான, பழைய கதையை ரசிகர்களிடம் 'கேட்ச்' கொடுத்து 'டக்அவுட்' ஆகியிருக்கிறார்.

— கே.பி.எஸ்.



# பிரதோஷ காலம் - பிரதோஷ வரலாறு

சுக்கில பக்ஷம், கிருஷ்ண பக்ஷம் என்னும் இரண்டு பக்ஷத்திலும் வருகின்ற திரயோதசி திதியில் சூரியாஸ்தமனத்திற்கு முன் மூன்றே முக்கால் நாழிகையும், பின் மூன்றே முக்கால் நாழிகையுமாய் உள்ள காலமே பிரதோஷம் எனப்படும்.

## பிரதோஷ வரலாறு

### தசமி திதியன்று (பத்தாவது நாள்) நடந்தது :

தசமி திதி அன்று ஒருவேளை உண்டு இந்திராதி தேவர்களும் அசுரர்களும் மந்திரகிரியை மத்தாகவும், வாசுகி என்ற நாகராஜனைத் தாம்புக் கயிறாகவும் அமைத்தார்கள். அசுரர்கள் தலைப்புறமாகவும், தேவர்கள் வால்புறமாகவும் நின்று அமிர்தம் கடையலானார்கள். கடைந்தபோது வாசுகி நஞ்சை உமிழ்ந்தது. கடலில் இருந்தும் நஞ்சு தோன்றியது. வாசுகி கக்கிய ஆலமும் கடலில் தோன்றிய ஆலமும் ஒன்று சேர்ந்து ஆலாலம் எனப் பேர் பெற்றது. அக்கொடிய விடத்தை வானவர்கள் விருப்பப்படி அடியவர்களாகிய அமரர்கள் உய்ய அமுதம் போல் சிவபெருமான் உண்டருளினார்.

### ஏகாதசி திதியன்று (பதினோராவது நாள்) நடந்நது :

சிவபெருமான் சொற்படி தேவர்கள் மறுபடியும் பாற்கடலைக் கடைந்தார்கள். ஏகாதசியன்று பகல் முழுவதும் பட்டினி இருந்து இரவு முழுவதும் உறக்கமின்றி பாற்கடலைக் கடைந்தார்கள்.

### துவாதசியன்று நடந்தது (பன்னிரண்டாவது நாள்) :

துவாதசியன்று அதிகாலையில் அமிர்தம் கிடைத்தது. அதைத் தேவர்கள் பகிர்ந்து உண்டார்கள். அந்த மகிழ்ச்சியில் தேவர்கள் துவாதசியன்று ஆடியும் பாடியும் பொழுதைப் போக்கினார்கள்.

### திரயோதசி அன்று நடந்தது (பதிமூன்றாம் நாள்) :

தேவர்கள் சிவபெருமானை முன்னாலே வணங்காது பொழுது போக்கிய தங்கள் குற்றத்தை உணர்ந்து சிவபெருமானிடம் பணிந்து தங்கள் குற்றத்தை மன்னித்தருளுமாறு வேண்டினார்கள்.

பரம கருணாநிதியாகிய சிவபெருமான் மகிழ்ந்து தேவர்களுக்கு அருள் புரியத் திருவுளம் கொண்டு கயிலையில் அன்று மாலை (4.30 மணி முதல் 6.00 மணி வரை) பிரதோஷ வேளையில் தவத்திரு முன் இருந்த ரிஷப தேவரின் இரு கொம்புகளுக்கிடையில் நின்று அம்பிகையைக் காணத் திருநடம் செய்தருளினார். தேவர்கள் அதனைத் தரிசித்து

சிவபெருமானை துதி செய்து வணங்கினார்கள். அது முதல் திரயோதசி திதியன்று மாலை நேரம் பிரதோஷம் ரஜனி முக வேளை பாபத்தை போக்கும் நேரம்.

## பிரதோஷ பூஜாபலன் :

சிவ மூர்த்திக்குரிய பல வித விரதங்களில் தலையாயது. இவ் விரதத்தை அநுஷ்டிப்போர் துன்பங்களினின்றும் நீங்கி இன்பத்தை எய்துவர்.

## பிரதோஷ மகிமை :

சிவபெருமான் பிரதோஷ காலத்தில் இடப தேவரின் இரு கொம்புகளுக்கிடையே உயிர்கள் உய்யும் பொருட்டு திருநடம் புரிந்தார். அப்போது சரஸ்வதி வீணை வாசித்தாள். இந்திரன் புல்லாங்குழல் ஊதினார். பிரம்ம தேவர் தாளம் போட்டார். இலட்சுமி தேவி பாடினாள். திருமால் மிருதங்கம் வாசித்தார். தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், யக்ஷர்கள், கின்னர்கள், திசை பாலர்கள் முதலிய அனைவரும் வந்து பிரதோஷ காலத்தில் இறைவனை வழிபடுகிறார்கள்.





பகவானுடைய பிரபாவத்தை வேதமானது சொல்கிறபோது, யக்ஞத்தினாலே அவனை ஆராதிக்க வேண்டும் என்று பல இடத்திலே சொல்கிறது.

விஷ்ணு எங்கே இருக்கிறான் என்றால், யக்ஞத்திலே நன்றாக பிரதிஷ்டை ஆகியிருக்கிறான். அவனை யக்ஞத்தால் ஆராதித்தால் சந்தோஷமடைந்து பலனைக் கொடுக்கிறான்.

யக்ஞமே விஷ்ணுவானதனாலே நம்முடைய வாயுக்கள், கேட்கிற சக்தி, வாக்கு, பார்க்கிற சக்தி, மனஸ் எல்லாமே யக்ஞத்தின் பொருட்டு என்கிறது வேதம்.

ப்ராணோ யக்ஞேன கல்பதாம்
அபானோ யக்ஞேன கல்பதாம்

என்று சொல்லிக் கொண்டே வந்து ஆத்மா யக்ஞேன கல்பதாம் என்று முடிக்கிறது.

கல்பதாம் என்றால் 'நன்றாக அமைந்து இருக்கட்டும்' என்று பொருள்.

யக்ஞத்தினால் ஆயுள் காலமானது நன்றாக அமையட்டும்; யக்ஞத்தினால் பிராண அபானாதி வாயுக்களெல்லாம் நம் சரீரத்திலே நன்றாக சஞ்சரிக்கட்டும்; யக்ஞத்தினால் செவிப் புலன் நன்றாக இயங்கட்டும்; நன்கு பார்க்கும்படி நேத்திர ரோகமின்றி வாழ வழி ஏற்படட்டும்; மனஸ் கோணாமல் எப்போதும் பகவத் சரணாரவிந்தத்திலே பக்தியோடு நிலைத்து இருக்கட்டும்... அதற்கும் மேல் வாக்கு -- திவ்யமான அமிர்தம் போல் தேன் சிரமிக்க அமையட்டும்.

வாக்கிலே தேன் பெருகி ஓட வேண்டும் என்பது தைத்ரீய உபநிஷத்திலே சொல்லப்படுகிறது. காதிலேயும் நல்ல விஷயங்கள் கேட்கப்பட வேண்டும் என்கிறது.

இவையெல்லாம் ஒருத்தருக்கு அமைந்தது என்றால் ஆத்மா சௌக்கியமாயிருக்கும்.

ஆத்மா அனர்த்தப்படாமல் நல்ல முறையில் இருத்தல் வேண்டும்.

ஆகவே யக்ஞம் யக்ஞத்தினால் சிறக்கிறது. யக்ஞம், யக்ஞம் என்று சொல்கிறதே வேதம், அந்த யக்ஞ சப்தத்தினால் சொல்லப்படுபவன் பகவான் விஷ்ணு.

ஆகையினால் இங்கே சொன்னதெல்லாம் பகவான் விஷ்ணுவினால்தான் நமக்கு சித்திக்க வேண்டும்; அவனுடைய அனுக்கிரஹம் வேண்டும் என்று சொல்கிறது.

இந்த வேத வாக்கியத்தையே நரசிம்ஹ புராணம் சொல்கிறது.

நரசிம்ஹ பிரபாவத்தைப் பலவாறு எடுத்துச் சொல்கிற புராணம் இது.

விசேஷமாக நரசிம்ஹ புராணத்தையும் நித்தியம் பாராயணம் பண்ண வேண்டும்.

அதிலே ஓர் அழகான சுலோகம் - அவன் உயர்வை எடுத்துக் காட்டும்படியான தியான ஸ்லோகம்:

'சிறந்த அறிவாளிகள் அந்த விஷ்ணுவை இவ்விதமாகப் பார்க்கிறார்கள்' என்கிறது அந்த சுலோகம்.

எவ்விதமாகப் பார்க்கிறார்கள்?

# துணையான

அமிர்தம் சாதனம் சாத்யம்!

அவன் அமிர்தமானவன், சாதனமானவன், சாத்தியமானவன் என்று மகான்கள் - ஞானிகள் நன்கு உணர்ந்திருக்கிறார்கள்.

அப்படியானால், அமிர்த மயமான அவனை நினைத்தால் நாமும் அமிர்தப்ராயர்கள் ஆவோம்.

தோஷங்கள் இல்லாமல், மிருத்யு பயம் இல்லாமல், எந்தவித கெட்ட குணங்களும் இல்லாமல் பிரகாசிக்கிறான் அவன்.

அவனை ஆச்ரயிக்கக் கூடிய சாமானியர் நாம்! 'துருப்பிடித்த இரும்பு போல இருக்கும்படியான நாம்' என்று ஆசார்யர்கள் சொல்கிறார்கள்! இது மொத்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்




தத்தையும் மாற்றி, ஸ்வர்ணாபரணமாக்கி தன் திருவடியிலே சேர்த்துக் கொள்கிறான் பரமாத்மா. இருக்கிற கெட்ட குணங்களை யெல்லாம் போக்கி நம்மையும் அமிர்த துய்யர்களாக்கித் தன்னிடத்திலே சேர்த்துக் கொள்கிறான்.

திருப்பாணாழ்வார்! ஆழ்வார்களிலேயே மிகக் குறைச்சலாக பத்தே பாசுரம் பாடியவர் இவர்தான்!

இதர ஆழ்வார்களின் பாசுரம் அனைத்தையும் ஒரு தட்டிலே வைத்து, இவர் பாசுரங்களை ஒரு தட்டிலே வைத்தால் இந்தத் தட்டு தான் பளுவானதாக இருக்கும்.

சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்கிற ரீதியிலே சூத்திரப் பிராயமாக பத்து பாசுரங்களில் தத்துவ விஷயங்களையெல்லாம் ரங்கநாதர் பேரில் சொல்கிறார். அப்படியே கோயிலுக்குப் போய் ரங்கநாதரை சேவித்துப் பாடுகிறார்.

எம்பெருமான் காட்ட, அவன் வடிவழகைத் திருவடியிலிருந்து திருமுடிவரை சேவித்தார். சேவித்து, அந்த அனுபவ மேலீட்டினாலே, பார்த்த அனுபவத்தைப் பாசுரமாகப் பாடினார். பாடிவிட்டு நேரே அங்கே உள்ளே போனார். போனவர் அவன் திருமேனியிலேயே கலந்து விட்டார்!

*காட்டவே கண்ட பாதகமலம் நல் ஆடை உந்தி*
*தேட்டரும் உதர பந்தம், திருமார்பு, கண்டம், செவ்வாய்*
*வாட்டமில் கண்கள், மேனி, முனி ஏறி தனிப்புகுந்து*
*பாட்டினால் கண்டு வாழும் பாணர்தான்*

பரவினோமே

என்று 'தனியன்' இசைத்தார் திருமலை நம்பிகள்.

எல்லோருக்குமே ஒரு சந்தேகம் வரும்...

பரமாத்மா சுத்த சாத்விகமான மூர்த்தியாயிற்றே... கோயிலில் அர்ச்சா ரூபியாய் அவன் சயனித்துக் கொண்டிருக்கும்படியான திருமேனி சுத்த சாத்விகமயமானதாயிற்றே...

ஆழ்வாரோ நம்மைப் போன்ற மனிதர் அல்லவா! இதுபோன்ற அல்பமான சரீரம் தானே அவருக்கும் இருந்திருக்கும். 'இவர் போய் ரங்கநாதர் திருமேனியிலே கலந்தார் என்றால் எப்படிப் பொருந்தும்!' என்று ஒரு சந்தேகம் வரும்.

கலந்து நின்றது வாஸ்தவம். அதிலிருந்து என்ன தெரிந்து கொள்ள வேண்டும்? ஆழ்வார் திருமேனியும் பகவானின் திருமேனி போன்று சுத்த சாத்விகமானது.

அப்படியில்லாது போனால் அவரை பகவான் காப்பது அசாத்தியம்.

ஆகையினாலே, பகவான்தான் நம்மைச் சேர்த்துக் கொள்கிறான். எப்படி சேர்த்துக் கொள்கிறான்? தன்னைப் போல் இருக்கும்படி தூக்கி, தன்னுள் சேர்த்துக் கொள்கிறான்.

அவனுக்காக நம்மை ஏற்கிறான் பரமாத்மா! அப்படி ஏற்கிறபோது அவனுக்குத் துல்லியமாய் நம்மை ஆக்கி சுவீகரிக்கிறான்.

பிரும்ம சூத்திரத்திலேயும் இதே அர்த்தத்தை வெளியிடுகிறார்கள்:

எல்லா விதத்திலேயும் அவனுக்குச் சமானமாக்கி, விசேஷமான போக-பாக்கியங்களையெல்லாம் கொடுக்கிறான் பரமாத்மா.

**அ**வனை நினைத்தால் நாமும் அமிர்தமயமாவோம் என்று சொன்னால், அந்த தேவர்கள் பாற்கடலைக் கடைந்து பருகிய அமிர்தம் அல்ல... அது வேறு! இங்கே நரசிம்ஹ புராணத்திலே சொல்லக்கூடிய அமிர்தம் வேறு!

அமிர்தப்ராயனான பகவான் நம்மையெல்லாம் அமிர்தப் பிராயர்களாக மாற்றி தன்னிடத்திலே சேர்த்துக் கொள்ளும்படியான சிறந்த காருண்யன். உயர்ந்த ஸ்வஸ்தானத்துக்கு நம்மை அழைத்துச் செல்பவன்.

சரணாகதி சாஸ்திரத்தைப் பற்றிச் சொல்கிறபோது சுவாமி தேசிகன் சொல்கிறார் –

ரங்கநாதன் என்ன பண்ணுகிறானாம்? பரமாத்மா நம்மையெல்லாம் கையைப் பிடித்துத் தூக்கி தான் படுத்துக் கொண்டிருக்கிற படுக்கையிலே உட்கார வைக்கிறானாம்.

# அருள்வாக்கு



அதோடு இல்லை... தன் மடியிலேயே உட்கார வைத்துக் கொள்கிறான். உச்சி மோந்து, தான் படுத்துக் கொள்கிற படுக்கையிலேயே போகத்தைக் கொடுக்கிறான்.

யாராவது நம் கிருஹத்துக்கு வந்தால் நாம் என்ன செய்வோம்? இங்கே படுத்துக் கொள்ளுங்கள் என்று ஒரு இடத்தைக் காண்பிக்கிறோம். வேறு பாய், தலையணை கொடுத்து, 'இங்கே படுத்துக் கொண்டால் நல்ல காற்று வரும்' என்று சொல்லுகிறோம். மறுநாள் காலையில் 'நன்றாகத் தூங்கினீர்களா? தூக்கம் வந்ததா?' என்று கேட்கிறோம்.

தான் படுத்துக் கொள்ளும் படுக்கையிலேயே 'என்னோடு படுத்துக் கொள்' என்று சொல்பவர்கள் எத்தனை பேர் இந்த உலகத்தில்?

ஆனால் பகவான் பாருங்கள், தனக்கு சமானமாக நம்மை உயர்த்தி, ஆனந்திக்கிறான் என்று சொன்னால், அதுதான் அமிர்தத்வம் என்று பெயர். அந்த எம்பெருமானிடத்திலே இருக்கிற உயர்ந்த குணம்.

இதைத்தான் நரசிம்ஹ புராணம் சொல்கிறது:

அமிர்தம் சாதனம் சாத்யம்.

சாதனமும் அவனே சாத்யமும் அவனே... அமிர்தமான சாத்யமும் அவன்தான்.

சாதனம் என்றால் அவனை அடைவதற்கான வழி. உபாயம். சாத்யம் என்றால் உபேயம். அடைந்த பிற்பாடு அவனிடத்திலே நமக்குக் கிடைக்கும்படியான போகங்கள்.

பகவான் உபாயமாகவும் உபேயமாகவும் இருக்கிறான். சாதனமும் நற்பயனும் அவனே என்றார் சுவாமி தேசிகன்.

ஆகையினாலே அவனையன்றி நமக்கு வேறு மார்க்கம் இல்லை.

மார்க்காய நம: என்றே ஒரு திருநாமம் அவனுக்கு. மார்க்கம் என்றால் வழி வழியாக இருப்பவன்.

நரகத்துக்குப் போகிற மார்க்கத்துக்கு எதிர்த்தட்டாய் இருக்கிறவன். நல்ல வழியிலே அழைத்துச் செல்லக் கூடியவனாக்

'அழிஞ்சில் விதை எப்படித் தாய்மரத்துடனேயே ஒட்டிக் கொள்கிறதோ, ஊசி எப்படி காந்தத்தால் கவரப்படுகிறதோ, பதிவிரதை எப்படித் தன் பதியின் நினைவிலேயே ஆழ்ந்திருக்கிறாளோ, கொடி எப்படி மரத்தைத் தழுவி வளருகிறதோ, நதி எப்படிச் சமுத்திரத்தில் கலக்கிறதோ, அப்படியே பசுபதியின் பாதாரவிந்தங்களில் ஸதாசர்வ காலமும் மனத்தை அமிழ்த்தியிருப்பதுதான் பக்தி என்பது' என்கிறார் ஸ்ரீ ஆசார்யாள்.

ஏறு அழிஞ்சில் என்று ஒரு மரம் உண்டாம். அதன் காய் முற்றியவுடன் பூமியில் விழுந்து உடையும். உடனே உள்ளே இருக்கிற விதைகள் ஏதோ ஓர் ஆகர்ஷண சக்தியால் நகர்ந்து நகர்ந்து வந்து மறுபடியும் தாய்மரத்தோடேயே ஒட்டிக் கொள்ளும். ஒட்டிக் கொண்ட பின் மூல மான மரத்துக்குள்ளேயே மறைந்துவிடும் என்கிறார்கள். பகவானிடமிருந்து பிரிந்து வந்திருக்கிற நாம் இப்படியே எப்போதும் அவன் பக்கமாக நகர்ந்து நகர்ந்து போய் முடிவில் அவனிடம் ஒட்டிக் கொண்டு ஒன்றாகிவிட வேண்டும். ஊசி காந்தத்தை நோக்கிப் பாய்ந்து ஒட்டிக் கொள்வது அடுத்த உதாரணம். காந்தத்தில் சேர்ந்த ஊசிக்கும் காந்த சக்தி உண்டாகி அது மற்ற இரும்புப் பொருள்களை இழுப்பது போல், பக்தனுக்கும் பகவானின் குணங்களும் சக்திகளும் உண்டாகும் என்று இந்த உதாரணத்தால் காட்டுகிறார். அடுத்து பதிவிரதையின் உதாரணம். பதிவிரதையின் நினைவு, பேச்சு, காரியம் அனைத்தும் பதியைச் சுற்றியே இருப்பது போல் நம் மனோ வாக்கு காரியங்கள் பகவானையே பற்றி இருக்க வேண்டும் என்பது இதிலிருந்து தெரிகிறது. பதியை மூல சுலோகத்தில் 'விபு' என்கிறார். சர்வ வியாபகன் என்பது இதன் பொருள். இதனால் பகவானை ஏதோ ஓர் இடத்தில் மட்டும் இல்லாமல் எங்குமாக, எல்லாமாக, இருப்பதாகப் பாவிக்க வேண்டும் என்று உணர்த்துகிறார்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

இருக்கிறான்.

அப்படியானால் அவனை அடைய என்னென்ன வழி இருக்கிறது...? அதையும் அவனே சொல்கிறான்:

'பக்தி என்கிற உயர்ந்த உபாயத்தினாலேயோ இல்லை சரணாகதி என்ற உபாயத்தினாலேயோ நான் அடையத் தகுந்தவன். மற்றொன்றினால் அல்ல...'

கலியுகத்திலே வாசம் பண்ணிக் கொண்டிருக்கிற நம்மைப் போன்றவர்களுக்கு பக்தி யோகமானது அவ்வளவு சிறந்ததாக அமையாது. ஏனென்றால் நம்மால் அவ்வளவு உயர்ந்த பக்தி பண்ண முடியாது.

அதனால்தான் பகவானே கீதையிலே சொல்லிவிட்டான்:

'எல்லா தர்மத்தையும் விட்டுவிடு!'

எல்லா தர்மத்தையும் விட்டுவிடு என்றால் நித்ய கடமைகளை விட்டு விடுவோம் நாம்! அதைச் சொல்லவில்லை பகவான். நமக்கு விதிக்கப்பட்ட கடமைகளைப் பண்ணித்தான் ஆக வேண்டும். ஆனால் நித்ய கடமைகளைப் பண்ணுவதால் புண்ணியம் கிடையாது. வெறும் கடமை அது!

நித்யம் தாயாரை வணங்குகிறோம். நித்யம் சூர்ய நமஸ்காரம் பண்ணுகிறோம். இதெல்லாம் கடமை.

கடமை என்று வருகிறபோது அதைச் செய்ததாகச் சொல்லிக் கொள்ள வேண்டிய தில்லை. பண்ணியே ஆக வேண்டும். பண்ணியதற்காகப் புண்ணியம் உண்டாகாது; ஆனால் பண்ணா விட்டால் மகா பாவம்!

ஆகையினாலே, எது உனக்கு விதிக்கப்பட்டிருக்கிறதோ அந்த வர்ணாசிரம தர்மத்தை விடாமல் ரக்ஷித்துக் கொண்டிரு.

ஆளவந்தார் சொல்கிறார்: உனக்கு விதிக்கப்பட்ட சுவதர்மத்திலே நீ இருக்க வேண்டும். அதைப் பண்ணிவிட்டு வீணான காரியத்திலே போய் நுழையாதே.

பக்தி யோகம் பண்ணுகிறேன் என்று ஆரம்பித்துவிட்டு அதைப் பாதியிலே விட்டு விட்டால் அதனால் பல ஜன்மாக்கள் தொடர்ந்து எடுக்க வேண்டிவரும். அதனால் பல தீமைகள் வந்து சேரும்.

அதனால்தான் அதையெல்லாம் விட்டுவிடு என்கிறான் பரமாத்மா.

ஏன் இப்படிச் சொல்கிறான் என்று கேட்டால், அவன் வாக்யத்துக்கு வியாக்யானம் பண்ணிய ஆசார்யர்கள் விளக்குகிறார்கள்... அதை அடுத்த வாரம் சொல்கிறேன்.

(தொடரும்)

# அவர்கள் அவர்கள்தான்

"சுட்டெரிக்கும் வெயில்....

சுழன்றடிக்கும் வெப்பக் காற்று...

அருவி போல உடம்பெல்லாம் உப்புத் தண்ணீர்

இங்கு குருவி நெஞ்சை நனைக்கக் கூட இல்லை குடிநீர்!

போதும் நாம் போற்றும் இந்த சுதந்திர கீதம் - இனித் திரவேண்டும்

நம் அனைவரது குடிநீர்த் தாகம்!"

இப்படியாக அந்த இளைஞன் அனல் பறக்க அடுக்கு மொழியில் பேச, அவனைச் சுற்றி சிறு கூட்டம்.

நேரம் ஆக ஆக அவனது பேச்சிலே காட்டம். கூடவே சேர்ந்தது மக்கள் கூட்டம்.

போக்குவரத்தை பாதிக்கும் அளவிற்கு கூட்டம் கூடி விட்டது. போலீஸ் அங்கு வந்து விட்டது அவனைக் கைது செய்ய.

மக்கள் குடிநீர்ப் பிரச்னையை மறந்தார்கள். அவனுக்கு ஏதும் ஆகிவிடக் கூடாது என்று கவலைப்பட்டார்கள்!

இதனைத்தானே அவனும் எதிர்பார்த்திருந்தான்.

'கலெக்டரைப் பார்த்து மனு கொடுத்த பின்னர்தான் கலைந்து செல்வோம்' என்றான்.

கூட்டமும் அதனை ஆமோதித்தது!

கலெக்டரைப் பார்க்க அந்த இளைஞனும் வேறு சிலரும் அனுமதிக்கப்பட்டனர்.

"ஆமாம் உங்க குறை என்ன?" கலெக்டர் கேட்டார்.

"எங்க கோரிக்கை மனுவைப் பாருங்க புரியும்" - பதிலளித்தான் அந்த இளைஞன்.

"பார்த்தேன். மனுவில் குடிநீர்ப் பிரச்னையைத் தீர்த்து வையுங்கள் என்று பொதுவாகக் கோரப்பட்டுள்ளது... எந்த ஏரியாவில் குடிநீர் மிகவும் தட்டுப்பாடாக உள்ளது என்று சொல்லுங்கள் அதற்கு முன்னுரிமை அளித்து நடவடிக்கை எடுக்கச் சொல்கிறேன். இப்படி பொதுவாகக் கோரிக்கை எழுப்பினால் இருக்கின்ற நிதி வசதிக்கேற்ப கொஞ்சம் கொஞ்சமாகத்தான் இப் பிரச்னைக்குத் தீர்வு காண இயலும்."

"அதெல்லாம் எங்களுக்குத் தெரியாது. இந்தப் பிரச்னை இன்னும் ஒரு மாதத்திற்குள் தீர்க்கப்படாவிட்டால் எங்கள் அடுத்த கட்ட போராட்டம் சாலை மறியல்தான்..." ஆவேசமாகப் பேசி மாவட்ட ஆட்சித் தலைவரை எச்சரித்து அந்த இளைஞன் வெளியே வந்தபோது, 'வாழ்க' கோஷம் வானைப் பிளந்தது! குடிநீர்த் தட்டுப்பாடு முற்றிலுமாக நீங்கிய மகிழ்ச்சியில் கூட்டம் கலைந்து சென்றது!

இது நடந்து சில நாட்களுக்குப் பின்னர், வேறொரு இடத்தில் அந்த இளைஞன் பேசிக் கொண்டிருந்தான்...

இந்த முறை அவனது கோரிக்கை.... "எல்லோருக்கும் வேலை கொடு...!"

இதிலிருந்து ஒரு விஷயம் தெளிவாகத் தெரிந்தது....

எந்தப் பிரச்னையையும் பொதுவில் சாமர்த்தியத்துடன் பேசி, கூட்டம் சேர்க்கும் சாமர்த்தியம் அவனிடம் அதிகமாகவே இருந்தது என்பதுதான் அது!

அவனின் இந்தத் தகுதிக்காகவே ஒரு பிரபல கட்சி அவனுக்குத் தேர்தலில் டிக்கெட் கொடுத்தது!

அந்த இளைஞன் சாமர்த்தியமான பேச்சாளன் மட்டுமல்ல.... அதிர்ஷ்டக்காரனும் கூட..... காரணம் அவன் நின்ற கட்சி தேர்தலில் அமோகமாக வெற்றி பெற்றதுடன், எம்.எல்.ஏவான அவனை மாண்புமிகு மந்திரியாகவும் ஆக்கியது....!

மாண்புமிகு அமைச்சர் நெல்லை மாவட்டத்திற்கு சென்றிருந்த சமயம், அந்த

மாவட்ட கலெக்டர், அமைச்சரை அவரது விருந்தினர் மாளிகையில் நேரில் சென்று மாலை அணிவித்து வரவேற்றார்.

அமைச்சருக்கு அந்த மாவட்ட ஆட்சி யரைச் சந்தித்ததும் ஆச்சரியம்!

"அட நீங்களா? உங்களை நான் காஞ்சி புரத்தில் அல்லவா பார்த்திருக்கேன். நீங்கள் எப்பொழுது நெல்லைக்கு மாற்றல் ஆனீர் கள்...?"

"நான் இங்கு வந்து மூன்று மாதமாகிறது. உங்களை அமைச்ச ராக வரவேற்பேன் என்று நானும் எதிர்பார்க்கவில்லை. என்றாலும் உங்களை வரவேற்பதில் ரொம்ப மகிழ்ச்சி எனக்கு..."

மாண்புமிகுவின் முகத்தில் சற்று



க. ஒப்பிலியப்பன்

பெருமை கலந்த கூச்சம். "உங்களைப் போன்ற துடிப்பும், பிரச்னைகளை உடனுக்குடன் முடிக்க வேண்டும் என்ற உள்ளார் வமும் கொண்டவர் அமைச்சரானது என் போன்றவர்களுக்கு பெருமையும் மகிழ்ச்சியும் தரும் விஷயம். இந்த மாவட்டத்தைப் பற்றி அமைச்சராகிய தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. இங்கு குடிநீர்ப் பிரச்னைதான் தலையாய பிரச்னை. இதற்காக போராட்டமே நடத்தியவர் தாங்கள். எனவே இம் மாவட்டத்திற்குப் போதுமான நிதி வசதியினை ஒதுக்கீடு செய்து, குடிநீர்த் தட்டுப்பாடு நீங்க ஆவன செய்ய வேண்டும்."

கலெக்டர் இன்னும் பேச்சை முடிக்கவில்லை. அதற்குள் அமைச்சர் சட்டென்று முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு முகம் சுளித்தார்.

ஆட்சித் தலைவருக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை.

"நாம் தப்பாக எதுவும் பேசி விடவில்லையே. பின் எதற்காக அமைச்சருக்கு இந்தக் கோபம்?"

அப்போது மாண்புமிகுவின் சீனியர் பி.ஏ. கலெக்டரை ஹால் பக்கமாக அழைத்துச் சென்றார்.

"சார்... அமைச்சர் இப்பக் குற்றாலத்திற்கு குடும்பத்துடன் 'டூர்' வந்துள்ளார். இப்பப் போய் குடிநீர்த் தட்டுப்பாடு அது இது என்று அமைச்சரோட 'மூட்' அவுட்டாகும்படி பேசாதீர்கள்..." எச்சரித்தார் பி.ஏ.

இதைக் கேட்டு ஆட்சித் தலைவர் அதிர்ந்து போனார். இதற்குள் அமைச்சரைப் பார்க்கப் பொது மக்களும், கட்சித் தொண்டர்களும் வந்து விட்டனர்.

அனைவரையும் கைகூப்பி வரவேற்ற அமைச்சர், அவர்கள் கொடுத்த மனுக்களை வாங்கிக் கொண்டார். கூடவே மாலைகளும் துண்டுகளும் குவிந்தன!

ஒருவழியாகக் கூட்டம் கலைந்து சென்றதும், அமைச்சர் அத்தனை மனுக்களையும் ஆட்சித் தலைவரின் கையில் திணித்தார்.

"ஆவன செய்யுங்கள்..." என்று ஆணையிட்டு விட்டு குற்றாலத்திற்கு குடும்பத்துடன் குளுகுளு காரில் பறந்தார்.

மனுக்களை படிக்காமலேயே, அதில் உள்ள கோரிக்கைகள் குறித்து அமைச்சர் என்ற முறையில் தான் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி யோசிக்காமலேயே மனுக்களை தமது கையில் திணித்து விட்டுச் செல்லும் அமைச்சரை ஆச்சரியத்துடன் பார்த்தார் ஆட்சித் தலைவர்.

மக்களிடமிருந்து வெறுமனே மனுக்களை வாங்க மட்டும்தான் என்றால் இதற்கு அமைச்சர் எதற்கு...? ஒரு ப்யூன் போதுமே இந்த வேலையைச் செய்ய.

அன்று மகஜர் ஒன்றைக் கொடுத்து விட்டு மறியல் போராட்டம் நடத்தப் போவதாகச் சொன்னதும், இன்று அமைச்சராகி மக்களின் மனுக்களை நம்மிடம் கொடுத்ததும் – இந்த இரண்டுமே வெறும் ஏமாற்று வேலைதானா?

கற்றை மனுக்களுடன் காரில் ஏறினார் கலெக்டர். கார் வேகமாகச் சென்ற போது, அவரது பக்கத்தில் கிடந்த மனுக்கள் காற்றில் படபடத்தன. அவரது மனதைப் போல! ◉



"அம்மா ஏன் சோகமா இருக்காங்க?"
"தேர்தல் முடியறவரைக்கும் யாரையும் மிரட்ட முடியாதேன்னுதான்!"

– குடந்தை. கே.ஆர். ரவிக்குமார்

"நான் இந்த சட்டமன்றத்துல சபாநாயகரா இருந்து சபையை நடத்தும்வரை கூச்சல், குழப்பம், அடிதடி, குத்து எதையும் அனுமதிக்க முடியாது!"

– எஸ். மோகன்



# KALKI SHOPPING PAGE

# தயவு செய்து... 4

**பட்டுக்கோட்டை**

அதிர்ச்சியில் உறைந்து போய் நின்றிருந்த மகேஷ் அருகில் வந்தாள் சித்ரா.

"என்னங்க? போன்ல யாரு?"

அமைதியாய் ரிசீவரை வைத்துவிட்டு தொப்பென்று சோபாவில் அமர்ந்தவன் முகத்தை அப்போதுதான் கவனித்தாள்.

"ஏங்க இப்படி வேர்க்குது? சொல்லுங்க! யாருங்க பேசினா?" பதறினாள் சித்ரா.

"அ... அந்த... செல்வா!" என்று சொல்வதற்கே தடுமாறினான் மகேஷ்.

"அய்யோ! அவனுக்கெப்படி நம்ம போன் நம்பர் தெரியும்? சரி, என்ன சொன்னான்?"

சித்ராவின் முகத்தையே பார்த்தான்.

எப்படிச் சொல்வது?

எப்படித் தாங்குவாள்?

"ஒண்ணுமில்லை, நீ போய்ப் படு சித்ரா!"

"மறைக்காதிங்க. என்ன சொன்னான்?"

"மிரட்டினான் சித்ரா."

"என்னன்னு மிரட்டினான்?"

தயங்கிச் சொன்னான். சொன்னதும் சித்ரா தன் நெஞ்சைப் பிடித்துக் கொண்டாள். பீதியானாள். முகம் வெளிறியது.

"அய்யோ! என்னங்க இதெல்லாம்?"

"இன்ஸ்பெக்டர் அவனை அரெஸ்ட் செஞ்சிருப்பாருன்னு நினைச்சேன். ஆனா... இவன்..."

"ரொம்ப விவகாரமானவன் போலிருக்குங்க. வன்மம் பிடிச்சவன் போலிருக்கு. இந்த மாதிரி ஒண்ணு கெடக்க ஒண்ணு அனிதாவுக்கு அவன் தொல்லை கொடுப்பான்னு தெரிஞ்சுதான் இன்ஸ்பெக்டர் கேஸ் எல்லாம் வேணாம்னு சொல்லிருக்காருங்க. அதைப் புரிஞ்சுக்காம நீங்க வற்புறுத்தி புகார் கொடுத்துட்டீங்க. அவன் கடுப்பாயிட்டான்."

"இன்ஸ்பெக்டர் அவனைக் கூப்புட்டு விசாரிச்சிருப்பார் சித்ரா. அவன் ஏதோ கட்சில இருக்கிறவன்னு வேற சொன்னார். ரொம்ப கிழ்த்தரமா பேசினான் சித்ரா" என்ற மகேஷ் எழுந்து சென்று தண்ணீர் குடித்தான்.

செல்வா மிரட்டலாகச் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் உள்ளே எதிரொலித்து அவனைக் கலவரப்படுத்தியது.

'உன் பொண்ணு அனிதா உருப்படியா இருக்க மாட்டா! ஆட்டோல அள்ளிப் போட்டுட்டுப் போயிடுவேன். திரும்பி கந்தலா வூடு வந்து சேருவா!'

இப்போது மகேஷின் மனதில் கோபத்தை விடவும், பயமே பிரதானமாகச் சுழன்றது.

இந்த மிரட்டலை எப்படி அலட்சியப்படுத்துவது? அந்த செல்வா என்கிற முரடனைப் பற்றி எனக்கு என்ன தெரியும்? செய்ய மாட்டான் என்பது என்ன நிச்சயம்?

இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?

மறுபடி இன்ஸ்பெக்டரிடம் போவதா? இந்த மிரட்டலைச் சொல்வதா? என்ன சொல்வார்? சிரிப்பாரா? 'இதற்குத்தான் நான் கேஸ் வேண்டாம் என்றேன்' என்பாரா?

கமிஷனர் ஆபீசில் வேலை பார்க்கும் ரகு எனக்குப் பழக்கம். ரகுவைத் தொடர்பு கொள்ளலாமா? அவன் மூலமாக கமிஷனரைப் பார்த்து... உடனடியா செல்வா மேல் பெரிய நடவடிக்கையாக எடுக்கச் சொல்வதா?

அப்படியே நடவடிக்கை எடுத்தாலும்... என் மேல் அவனுக்குக் கோபம் இன்னும் அதிகமாகுமே! சில மாதங்கள் ஜெயிலுக்குப் போய்த் திரும்பி... போனில் சொன்னபடி... அய்யோ!

அனிதாவுக்கு என்ன மாதிரி பாதுகாப்பு தர முடியும்? எத்தனை நாளைக்குத் தர முடியும்?

"என்ன செய்யப் போறீங்க?" என்றாள் சித்ரா உடைந்த குரலில்.

அவளை விரக்தியாகப் பார்த்தான் மகேஷ்.

“தெரியலை சித்ரா. நம்ம குடும்பத்தில வேண்டாத விவகாரம் ஒண்ணு இப்படி திடீர்னு முளைச்சி அது இவ்வளவு தூரம் விஸ்வரூபம் எடுக்கும்னு நான் நினைக்கலை.”

“அனிதா ஏற்கெனவே கலங்கிப் போயிருக்காங்க.”

“என்ன சமுதாயம் இது! வாழ்க்கைக்கு என்ன பாதுகாப்பு இருக்கு இங்கே? ஒரு ரவுடி எவ்வளவு தைரியமா மிரட்டறான்! அவன் மேல நடவடிக்கை எடுக்க போலீஸ் தயங்குது! கட்சி பாதுகாப்புக்கு வருது! நாம

**பிரபாகர்**

நடுங்கிக்கிட்டு இருக்கோம்! அப்புறம் எதுக்கு அரசாங்கம்? அப்புறம் எதுக்கு போலீஸ்?”

“நீங்க ஆவேசப்படறதால எதுவும் மாறிடப் போறதில்லைங்க. இன்னிக்கு இதான் நிலைமை! இதான் அசிங்கமான யதார்த்தம்! கோடிக்கணக்குல ஊழல் செய்யற அரசியல் தலைவர்கள் நாடு பூரா இருக்காங்க. சட்டம் அவங்க முன்னாடி சக்தியில்லாம மண்டி போட்டுக் கிடக்குது. பாக்கெட்ல தீப்பெட்டி மாதிரி வெடிகுண்டை வெச்சிக்கிட்டு தீவிரவாதிங்க திரியறாங்க. போலீஸ்காரங்க உயிருக்கே பாதுகாப்பு இல்லை. இதில நம்மளை மாதிரி மிடில் கிளாஸ் மக்களோட இந்த மாதிரி பிரச்னைகளுக்கு முறைப்படி நியாயம் கிடைக்கும்னு எதிர்பார்க்கறதில அர்த்தமில்லை. நமக்கு நம்ம குடும்பம், நம்ம குழந்தைங்கதான் முக்கியம். அவங்க பத்திரம்தான் முக்கியம். அவங்க எதிர்காலம்தான் முக்கியம். சட்டப்படி போராடறதெல்லாம் நமக்கு வேணாங்க. நீங்க கொடுத்த கம்ப்ளைண்ட்டை வாபஸ் வாங்கிட்டு வந்துடுங்க” என்றாள் சித்ரா.

“அப்ப மட்டும் மேற்கொண்டு அவன் தொந்தரவு கொடுக்காம இருந்துடுவானா சித்ரா?”

“வேற என்னதான் செய்யப் போறீங்க?”

மகேஷ் கண்களை மூடிக் கொண்டு யோசனையில் ஆழ்ந்தான்.

**கா**லையில் பள்ளிக்குச் செல்லத் தயாரான விஷ்ணு, மகேஷிடம் வந்து, “டாடி,



அக்கா ஏன் ஸ்கூலுக்குப் புறப்படலை? ஏன் டல்லா இருக்கா? இன்னும் குளிக்கக் கூட இல்லை? என்னாச்சு அவளுக்கு?" என்றான்.

"அவளுக்கு உடம்பு சரியில்லை விஷ்ணு. இன்னிக்கு லீவு போட்டுருக்கா. நாளையி லேர்ந்து ஸ்கூலுக்கு வருவா. நீ புறப்படு" என்றான் மகேஷ்.

"சரி, பை பை!"

விஷ்ணு போனதும் அறைக்குள் வந்து கட்டிலில் சாய்ந்து அமர்ந்திருந்த அனிதா அருகில் அமர்ந்தான் மகேஷ். நெற்றியைத் தொட்டுப் பார்த்தான்.

"ஜுரமா இருக்கா?"

"இல்லை டாடி. ராத்திரி பூராத் தூங் கலை. திடீர் திடீர்னு முழிப்பு வந்திச்சி. பயமா இருக்கு டாடி. இன்னிக்கு ஒரு நாள் லீவு போட்டாச்சு. எத்தனை நாளைக்கு லீவு

"என் உயிருக்குயிரான நண்பன் ராமசாமி யைவிட்டு ஓட நானே காரணமாயிட்டேன் கமலா!"

"என்ன செய்து தொலைச்சீங்க அப்படி?"

"ஐம்பதாயிரம் கடன் கேட்டான்... கொடுத் தேன்!"

– உ. ராஜாஜி



போடறது? படிக்க வேண்டியது நிறைய இருக்கு டாடி. அவனை நினைச்சாலே உடம்பெல்லாம் சிலிர்க்குது டாடி" என்றாள் சித்ரா.

அவளைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது. அவள் தலையை ஆறுதலாகத் தடவிக் கொடுத்தான் மகேஷ்.

"அனிதா, எதிர்காலத்துல நீ யாரா வர ணும்னு ஆசைப்படறே?"

"உங்களுக்கே தெரியுமே, கலெக்டர்!"

"ஒரு கலெக்டரோட பொறுப்புகள் எவ் வளவு தெரியுமா? என்னை மாதிரி ஒரு ஏ.சி. ரூமுக்குள்ளேயே வேலை பார்த்துக்கிட்டு இருக்க முடியாது. பல கிராமத்துக்குப் போக ணும். பல மக்களை சந்திக்கணும். பலவித மான பிரச்னைகளை தைரியமா சந்திக் கணும். விலைக்கு வாங்கப் பார்ப்பாங்க! மிரட்டுவாங்க! தாக்கறதுக்கு முயற்சி பண்ணுவாங்க! இப்படி மோசமான அனு பவங்களையும் எதிர்பார்த்துத்தான் ஆக ணும். அதுக்கு எவ்வளவு தைரியம் மனஉல இருக்கணும்னு யோசி! உன் மனசை இப்ப யிலேர்ந்தே போல்டா பக்குவப்படுத்தணும் அனிதா. அப்படிப் பக்குவப்படுத்தறதுக் காகத்தான் இந்தக் கசப்பான அனுபவம் உனக்குக் கிடைச்சிருக்குன்னு நினைச் சுக்கோ!"

அனிதா அவனின் நம்பிக்கை வார்த் தைகளில் சற்றே உற்சாகம் பெற்று அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

"நடந்து முடிஞ்ச ஒரு விஷயத்தை சும்மா நினைச்சி மனசைப் போட்டு வருத்திக்கக் கூடாது. இனிமே இந்த மாதிரி ஒரு சம்பவம் நடந்தா அப்போ எப்படி நடந்துக்கணும்னு யோசிக்கணும். வாழ்க்கையில நமக்குக் கிடைக்கிற ஒவ்வொரு அனுபவத்தையும் ஒரு பாடமா எடுத்துக்கணும். நீ கம்ப்யூட்டர் கிளாசுக்குப் போறது மட்டும் பத்தாது. நாளையிலேர்ந்து கராத்தே கிளாசுக்குப் போகணும். இன்னிக்கு உள்ள சொசைட் டில எல்லா அசிங்கமான ஆசாமிகளையும் சந்திச்சுத்தான் ஆகணும். தவிர்க்கவே முடி யாது. இந்த சொசைட்டிக்குத் தகுந்தபடி நம்மை தயார்படுத்திக்கறதுதான் புத்திசாலித் தனம். என்ன கராத்தே கிளாஸ்ல சேர்றியா?"

"சரிப்பா. அவனை போலீஸ்ல பிடிச்சிட் டாங்களாப்பா?"

"இல்லைம்மா."

"அப்போ மறுபடி அவன் வம்பு பண்ணுவானா?"

"இனிமே அவன் உன்கிட்ட வம்பு பண்ணாம இருக்கறதுக்கு நான் கியாரண்டி. என் பொண்ணு கலெக்டராகணும். அவ ளோட லட்சியம் சிதறிடக் கூடாது. அதுக் காக நான் என்ன வேணாலும் செய்வேன் கண்ணு" என்று அவள் நெற்றியில் முத்த மிட்டு விட்டு அறையை விட்டு வெளியே வர, அங்கே நின்ற சித்ரா, "இனிமே அவன் எந்தத் தொந்தரவும் தர மாட்டான்னு அவளை தைரியப்படுத்தறதுக்காகச் சொல் லிட்டீங்க. ஆனா என்ன செய்யப் போறீங்க?" என்றாள்.

ஷூ அணிந்த மகேஷ், "வந்து சொல் றேன்" என்று பைக் சாவியை எடுத்துக் கொண்டு புறப்பட்டான்.

அந்தப் பூங்காவின் வாசலில் நேற்று நின்றிருந்த அதே இடத்தில் செல்வாவும்

அவன் நண்பர்களும் நின்று அரட்டை அடித்துக் கொண்டிருக்க, எதிர்ப்புற சாலையில் பைக்கை நிறுத்தின மகேஷ் தன்னோடு வந்த கண்ணனிடம், ''அதுல யாரு செல்வா?'' என்று கேட்டு, அவன் கை நீட்டி அடையாளம் காட்டியதும், ''சரி, நீ போ!'' என்று விட்டு செல்வாவை நோக்கி நடந்தான்.

செல்வாவின் இடுப்பில் இடித்த கூட்டாளி, ''தலைவா, அதோ வர்றான் பாரு, அவன்தான் நேத்து நீ போன்ல மிரட்டின பார்ட்டி. அனிதாவோட அப்பா! நேரடியா மோதிப் பார்க்க வர்றான் போலிருக்கு... உஷாரா இருக்கணும்'' என்றான்.

மகேஷ் நேராக செல்வா எதிரில் வந்து நின்று, ''நான் மகேஷ், அனிதாவோட அப்பா. நேத்து நீ என்கிட்டேதான் போன்ல பேசினே. செல்வா, உன்கிட்ட நான் பத்து நிமிஷம் தனியாப் பேசணும். என்னோட இந்த பார்க் உள்ளே வர முடியுமா? ப்ளீஸ்...'' என்றான்.

தன் சட்டையைப் பிடிக்கப் போகிறான், ஆத்திரமாகக் கத்தப் போகிறான் என்றெல்லாம் எதிர்பார்த்த செல்வா வியந்து போய் பைக்கில் இருந்து கீழே இறங்கி, ''இருங்கடா. சார் என்னமோ தனியாப் பேசணுமாம். கேட்டுட்டு வர்றேன்'' என்றான்.

அந்தப் பூங்கா உள்ளே வந்து ஒரு மரத்தின் நிழலடியில் நின்றதும் மகேஷ் தன் பேண்ட் பாக்கெட்டிலிருந்து அந்தக் காகிதம் எடுத்து நீட்டினான்.

''இந்தா! ஸ்டேஷன்ல நான் எழுதிக் கொடுத்த கம்ப்ளைண்ட். வாபஸ் வாங்கிட்டேன். இதை அவங்க பதிவே செய்யலை. என் பொண்ணை நடுரோட்ல அவமானப்படுத்தினே! உன்னை என்னால எதுவும் செய்ய முடியலை. நான் வேற மாதிரி ஆளு! நீ வேற மாதிரி ஆளு! என்னால கை ஓங்க முடியாது. ஓங்கினாலும் நான்தான் கந்தலாவேன்னு தெரியும். உன் பலம் உணர்ந்து பேசறேன். என் பலவீனம் உணர்ந்து பேசறேன். நேத்து நீ மிரட்டினதில நான் பயந்துட்டேன். இதை மறைக்க விரும்பலை. ஆத்திரப்பட்டு நீ ஏதாச்சும் செஞ்சுட்டா நஷ்டம் எனக்குத்தான்! தயவுசெஞ்சி நீ என் பொண்ணு வாழ்க்கையில தலையிடாதே! உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன். அவ பாவம்! சின்னப் பொண்ணு! ஒரு கலெக்டராகணும்னு கனவு கண்டுகிட்டிருக்கிறா. அதுக்காக இப்பயிலேர்ந்தே தன்னை தகுதிப்படுத்திக்கிட்டிருக்கா. அவ லட்சியத்தை சாதிக்க நாங்க சப்போர்ட்டா இருக்கோம். இந்த வயசுல அவளுக்கு இருக்கிற பொது அறிவுலயும், புத்திசாலித்தனத்திலயும் நாத்துல ஒரு பங்கு கூட உன்கிட்ட இருக்க முடியாது. ஆனா பாரு, நான் உன்கிட்ட கெஞ்சிக்கிட்டிருக்கேன். வீட்டுக்குள்ளே திருடன் புகுந்து கத்தியைக் காட்டி மிரட்டறப்போ வீரம் காட்டறது விவேகமில்லை. 'எந்த பீரோவை வேணும்னாலும் திறக்கறேன், எதை வேணாலும் அள்ளிக்கோ. என்னை மட்டும் எதுவும் செஞ்சிடாதே'ன்னு கெஞ்சறதுதான் யதார்த்தம்! அந்த மாதிரிதான் என் பொண்ணை தொந்தரவு செய்யாதேன்னு உன்னை நான் கெஞ்சறேன். இதில என் தன்மானத்தை விடவும் என் பொண்ணோட மானமும், எதிர்காலமும்தான் எனக்கு முக்கியமாப் படுது. தயவுசெஞ்சி நீ...''

குரலடைத்துக் கொள்ள கண்கலங்கிய மகேஷ் அவனை நோக்கி கைகூப்பி நிற்க.... அதிர்ந்து போய் நின்றான் செல்வா.

சில விநாடிகள் உறைந்து போயிருந்த செல்வா, ''சார், என்னை.... என்னை... மன்னிச்சுடு சார்! உன் தகுதி என்ன? தராதரம் என்ன? நீ போயி என்னை கையெடுத்துக் கும்பிட்டு... சே! விடு சார்! கவலையை விடு சார்! நீ என்னை அடிக்கணும்னுதான் வர்றேன்னு நினைச்சேன். நிஜமா அடிச்சிட்டே சார்! மனசுல அடிச்சுட்டே! நீ தைரியசாலி. போ சார்! நான் ஒரு தொந்தரவும் பண்ண மாட்டேன், போ! நான் செஞ்சது பெரிய ராங்குதான்! பாப்பாவை மன்னிச்சுக்க சொல்லு சார்!''

செல்வாவின் குரல் வாழ்க்கையிலேயே முதல் முறையாகப் பிசிறியது.

(முற்றும்)



''என்னண்ணே, நம்மவரு டெல்லியிலேருந்து புதுசா ரெண்டு சூட்கேஸோட வர்றாரு?''

''ஒண்ணு ஆட்சியைக் கவுக்கிறதுக்காக கொடுத்ததாம்; இன்னொண்ணு புது ஆட்சி அமைக்கிறதுக்காகக் கொடுத்தாங்களாம்!''

– கே. அனிதா

# டுப்பியின் குடும்பம்

அலமு; அரஸ்













Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager; Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax : 2345621
Annual Subscription : India Rs. 250/-; Overseas Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 125/-; Overseas Rs. 950/- (Air Mail)

